CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

ஓம் ஸ்ரீ ஸ்வாமி சமர்த்தாய நம :

# ஸ்ரீ அக்கல்கோட் மஹாராஜ் அருளாட்சி





₹60





குருகடாக்ஷம் பரிபூரணம்

"சுவாமிசுதன்" Dr. J.S. சாயிகுமார்

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

ஓம் ஸ்ரீ சுவாமி சமர்த்தாய நம:

# ஸ்ரீ அக்கல்கோட் மஹராஜ் அருளாட்சி

சுவாமிசுதன்
**Dr. J.S. சாயிகுமார்**



குருகடாக்ஷம் பரிபூரணம்

ஸ்ரீமதி. அகிலா சாயிகுமார் B.A.,
புதுச்சேரி.
செல் : 94436 49473



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# நூல் விவரப் பட்டியல்


| | |
|---|---|
| நூலின் பெயர் | : ஸ்ரீ அக்கல்கோட் மஹராஜ் அருளாட்சி |
| ஆசிரியர் | : 'சுவாமிசுதன்' Dr.J.S. சாயிகுமார் |
| உரிமை | : ஆசிரியருக்கே |
| எச்சரிக்கை | : இந்நூலின் எந்த ஒரு பகுதியையும் ஆசிரியரின் எழுத்துபூர்வமான அனுமதியின்றி பயன்படுத்தக் கூடாது. |
| வெளியீடு | : ஸ்ரீமதி அகிலா சாயிகுமார் B.A., SF2, சாந்தி விலாஸ் அபார்ட்மென்ட்ஸ், நெ.12, 11வது குறுக்குத் தெரு, தாகூர் நகர், புதுச்சேரி - 605 008. போன் : 0413-2252015 e-mail id: akilasaiba@gmail.com |
| விலை | : ரூ. 60/- மட்டும் |
| முதற்பதிப்பு | : ஜனவரி 2011 |
| மொத்த பக்கங்கள் | : 160 + 4 படங்கள் |
| நூலின் அளவு | : Demmy 14cm x 21cm (Approx) |
| தாளின் தரம் | : மேப்லித்தோ 70gsm / 130gsm ஆர்ட் பேப்பர் |
| பைண்டிங் | : 300 gsm ஆர்ட் போர்ட், PVC லேமினேசன், செக்ஷன் தையல் |
| அட்டை படம் & வண்ணப்பக்கங்கள் | : ஸ்ரீ விஷ்ணு கிராபிக்ஸ், சிவகாசி. செல்: 98433 55994 |
| டைப் செட்டிங் | : வான்மதி கம்ப்யூட்டர்ஸ், சிவகாசி, போன்: 98432 72466 |
| அச்சிட்டோர் | : கலைவாணி காலண்டர்ஸ், சிவகாசி போன்: 04562 - 200609 |




https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவர் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

– திருக்குறள்

# சமர்ப்பணம்



போக்கும் வரவும் புணர்வுமில்லா புண்ணியனாகி வைகுந்தத்தில் நித்ய ஸுரியாகிட, எங்களை மீளாத் துயரில் ஆழ்த்திச் சென்ற எங்கள் பாசமிகு தந்தையும், குருவுமான குருபக்த சிரோமணி, அன்னதான பிரபு அமரர் பிரம்மஸ்ரீ (ஜெயிட்டு) சாயிபாபா J.S. சுப்பிரமணியன் அவர்களின் திருவடித் தாமரைக்கு இப்புனித நூலை பக்தியுடன் சமர்ப்பிக்கின்றோம்.

**குருகடாக்ஷம் பரிபூரணம்**

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ஸ்ரீ சுயம்பு ஹனுமான்



சத்குரு ஸ்ரீ ஷீரடி சாயிபாபாவின் சரணதாசர் ஸ்ரீ [ ஜூட்டு ] சாயிபாபா J.S. சுப்பிரமணியன் வைகுண்ட ப்ராப்தியடைந்த (11.12.2009) 6ம் நாள் மார்கழி மாதப் பிறப்பு அமாவாசை (16.12.2009) ஸ்ரீ ஹனுமான் ஜெயந்தி அன்று வீட்டுச் சுவற்றில் தாமாகத் தோன்றி அருள் புரிந்த அற்புதக் காட்சி.

**ஸ்ரீ ராம் ஜெய்ராம் ஜெய்ஜெய் சாய்ராம்**

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# அணிந்துரை

சொல்லோவியர், பொற்கிழிக் கவிஞர்
விரிவுரை வித்தகர் திருமந்திரச் சொல்மணி
நற்றமிழ் நாவலர், திருக்கயிலை மணி

சொ.சொ.மீ. சுந்தரம் M.Com., M.Phil.,
வணிகவியல் பேராசிரியர் (ஓய்வு)
சௌராஷ்டிரக் கல்லூரி,
மதுரை - 625 004.

பக்திப் பயிர் வளரும் பண்ணையாகிய மகாராஷ்டிர மாநிலத்தில் சோலாப்பூரில் இருந்து சுமார் 40 கிலோ மீட்டர் தூரத்திலுள்ள 'அக்கல்கோட்' என்ற திருத்தலத்தில் சுமார் 21 ஆண்டுகள் வாழ்ந்து அங்கேயே சமாதியுற்று, சமாதியடைந்த பின்னரும் அழைக்கும் அடியார்களுக்குக் காட்சி தந்து அருளும் மகான் அக்கல்கோட் சமர்த்த மஹராஜ் எனப்படும் ஞானக்கதிரவன். இக்கதிரவன் ஒளி அஞ்ஞான இருளகற்றி அடியவரைக் காக்கும் அருட்செயல் புரிகிறது. இந்த ஞானியின் வாழ்க்கையில் நிகழ்ந்த நூற்றுக்கணக்கான அருளாடல்களை பக்திமணங்கமழப் பட்டியல் போட்டு இந்த நூலை எழுதியிருக்கிறார் 'சுவாமி சுதன்' எனப்படும் டாக்டர் சாயிகுமார் அவர்கள். சுவாமி சுதன் என்றால் கடவுளுக்குப் பிரியமான குழந்தை எனப் பொருள் கொள்ளலாம். இந்த நூலைப் படிக்கும்பொழுது மகா ஞானியாகிய அக்கல்கோட் மஹராஜ், என் அருகில், மிகக் கம்பீரமாக, ஒரு கையை ஊன்றி ஒரு கையை இடுப்பில் வைத்துக்கொண்டு உயர்ந்த திருமேனி ஒளி வீச உட்கார்ந்திருப்பது போலவே உணர்கிறேன். காரணம் இந்நூலை எழுதியவர் கடவுளுக்குப் பிரியமான குழந்தை. அவருக்குக் குருகடாட்சம் பரிபூரணமாக இருக்கிறது. குருவின் பேரருளால், அளக்க முடியாத இமயமலை போன்ற அக்கல்கோட் மஹராஜ் பக்திக்குக் கட்டுப்பட்டுத் தன்னை அளக்கத்தானே துணை செய்கிறார்.

கி.பி.1149ல் மண்ணைப் பிளந்து கொண்டு எட்டு வயதுப் பாலகனாக வெளிப்பட்ட இந்த ஞானிக்குச் சுவாமி சமர்த்தர் என்று பெயரிட்டுப் பக்தர்கள் அழைத்தார்கள். சமர்த்தரின் வரலாற்றைச் சமர்த்தாக எழுதிய சமர்த்தராக டாக்டர் சாயிகுமார் திகழ்கிறார். அவருடைய பக்திக்கண்கள் இந்த ஞானியைச் சிவனாகவும், திருமாலாகவும், சமர்த்தேஸ்வரியாகவும் பார்க்கின்றன. கண்ணிலே அன்பிருந்தால் கல்லிலும் தெய்வம் வருமல்லவா!



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

"நம்பிக்கை, பொறுமை இரண்டுமே நான் கேட்கும் தட்சிணைகள். நீ என்னைப்பார், நான் உன்னைப் பார்க்கிறேன்" என்று கூறி அருளாட்சி நடத்திய ஷீர்டி சாயிபாபாவின் முந்திய அவதாரம் அக்கல்கோட் மஹாராஜ் சுவாமிகள். இவர் மும்மூர்த்திகளும் இணைந்த தத்தாத்ரேய சுவாமிகளின் மறு அவதாரமாகப் போற்றப்படுபவர். இந்த பேசும் தெய்வத்தோடு பேசும் பேறுபெற்றவர் டாக்டர் சாயிகுமார். அவர் பேசியதோடு இந்த நூல் மூலம் நம்மையும் பேச வைக்கிறார். இது நாம் பெற்ற பேறு.

ஆண்டவனை அறிவினால் அளக்க முடியாது. அவன் அன்பெனும் பிடியுள் அகப்படும் மலை. "பக்தி வலையில் படுவோன் காண்க" என்பது திருவாசகம். சாயிகுமாரின் பக்தி வலையில் அக்கல்கோட் மஹாராஜ் மகிழ்ச்சியோடு அகப்பட்டுக் கொண்டிருக்கிறார்.

இந்த நூலை முழுக்கப் படித்தேன். சோளப்பா, பாளப்பா, சுந்தராபாயி, சுந்தரி எல்லோரும் என் கண்முன்னால் காட்சியளிக்கிறார்கள். இந்தக் கூட்டத்தில் அக்கல்கோட் மஹாராஜ் ஆதவனாக ஒளி வீசுகிறார். அவர் புகழ் ஆதவனைச் சிறிதாக்குகிறது. அந்த ஒளியில் சிறு பகுதியைக் காட்டப் பார்க்கிறேன்.

எமலோகத்திலிருந்து கடிதம் வருமா? வரும். அதற்குப் பதிலெழுத முடியுமா? முடியாது. நாமே பதிலாகப் போய்ச்சேர வேண்டும். ஆனால் அக்கல்கோட் மஹாராஜ் இறப்பிலிருந்து பக்தனை விடுவித்து எமனுக்கே பதில் கடிதம் அனுப்பி இருக்கிறார். (தலைப்பு 48)

சையத்பாய் என்ற முஸ்லீம் அன்பர் அக்கல்கோட் சுவாமிகள் எங்கே என்று கேட்க, சுவாமிகள் "உன் தலையிலே உட்கார்ந்திருக்கிறார்" என்று கூறுகிறார். கடவுள் உனக்குள்ளே இருக்கிறார். வெளியில் ஏன் தேடுகிறாய்? என்று கூறி மத வேறுபாடின்றி பக்தரைத் தடுத்தாண்டு கொண்டு,

> "தேடிக்கண்டு கொண்டேன் – திருமாலொடு நான்முகனும்
> தேடித்தேடொணாத் தேவனை என்னுள்ளே தேடிக்கண்டு
> கொண்டேன்"

என்ற அப்பரடிகள் வாக்கை நினைவூட்டுகிறார் (தலைப்பு 28)



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

அக்கல்கோட் மஹாராஜுக்கு உணவு தர வேண்டுமென்று ஆமதாபாத் அந்தணர் நினைக்கிறார். சுவாமிகள் "முதலில் அடியார்களுக்கு அமுது படைப்பாயாக! அவர்கள் உண்டால் நாம் உண்டதுபோல" என்கிறார். அதன்படியே அமுது படைக்க, அடியார்கள் எல்லாம் உணவுண்டார்கள். அந்தணர் தனக்கும் தன் மனைவிக்கும், சுவாமிகளுக்கும் என்று மூன்று தட்டுகளில் உணவெடுத்துத் தனியாக வைத்திருந்தார். கடைசியாக வந்த இரண்டு அந்தணர்கள் அவற்றையும் உண்டு சென்றார்கள். இப்பொழுது சுவாமிகள் "என் சாப்பாட்டைக் கொண்டு வாருங்கள். பசிக்கிறது" என்று விளையாடுகிறார். அந்தணர் "ஒரு பருக்கைக் கூட மீதமில்லை'' என்கிறார். சுவாமிகள் "உன்வீடு நிறைந்திருக்கிறது. போய்ப்பார்" என்கிறார். உள்ளே சென்று பார்த்தார்கள். எல்லாப் பாத்திரங்களிலும் உணவு நிறைந்து வழிகிறது. பாத்திரம் அறிந்து நிரப்பும் ஆற்றல் பகவானுக்குத் தானே உண்டு! இதைப் படித்தால் நம்முடைய இல்லங்களும் அன்னசத்திரங்கள் ஆகாதா? "குறைவிலா நிறையக் கோதிலா அமுதாய்" அன்னம் வளராதா? (தலைப்பு 30)

சுந்தரி என்ற பெண்குரங்கு சேட்டைகள் அதிகம் செய்தது. அதைச் சுட்டுக்கொல்ல முடிவு செய்தார்கள். சுவாமிகள் அழைத்தார். கண்டித்தார். சுந்தரி திருந்திவிட்டது. இந்தச் சுவாமிகளிடம் நம் மனக்குரங்கை ஒப்படைத்தால், அதுவும் திருந்தாதா? (தலைப்பு 50)

குருநாதன் திருவருள் எல்லாம் செய்யும். எருமைக்கன்றை உயிர்ப்பித்து எருமையின் துயர் தீர்க்கிறார். (47), ஊமையைப் பேச வைக்கிறார் (36). குருவுக்கு உணவளிப்பது ஆயிரம் பேருக்கு அன்னதானம் செய்வது போல என்று நிலைநாட்டுகிறார் (44), அவர் அருளால் அறுபது வயதுப் பெண்ணுக்கு மகப்பேறு வாய்க்கிறது (31), அவர் அருளால் அதிகாரிகளிடமிருந்து தன் பக்தனைச் சுவாமிகள் காப்பாற்றுகிறார் (32), பெண்ணை ஆணாக்கிப் பெரிதாய் விளையாடுகிறார் (52), கோடி தீர்த்தத்தைச் சுத்தமாக்கி இராமேஸ்வரத்தில் அருள் புரிகிறார் (53), காஞ்சீபுரத்தை மீட்டுக் கொடுத்துச் சைவ வைணவம் தழைக்கச் செய்கிறார் (54). இவையெல்லாம் போதாதென்று, தான் சமாதியான பின்னரும், அழைக்கும் அடியவர் அகங்குளிரக் காட்சி தருகிறார் (56). இந்த நூலாசிரியரைப் பெரிய விபத்திலிருந்து காப்பாற்றுகிறார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

கூப்பிட்ட குரலுக்கு ஏனென்று கேட்க வேலைக்காரர்களே தாமதம் செய்யும் இந்நாளில், அக்கல்கோட் மஹராஜ் அழைத்த குரலுக்கு அங்கேயே காட்சியளிக்கிறார். இவர் பெருமை கங்கையை விடப் பெரியது. இமயமலையிலும் எழுத முடியாதது.

இத்தகைய குருநாதர், டாக்டர் சாயிகுமார் செய்த தவத்தால் அவருடைய பேனாவுக்குள் தன் பெருமையை நிரப்பிப் பேரருள் செய்திருக்கிறார். இந்தப் பரம ஞானிக்குச் சொற்கோயில் கட்டிய சாயிகுமார் கற்கோயிலும் கட்ட ஆசைப்படுகிறார். சமர்த்தர் நினைத்தால் எது நடக்காது? எல்லாம் செயல்கூடும்.

இந்நூலாசிரியரை வாயார வாழ்த்துகிறேன். புதிய செய்திகளைப் பக்தி உணர்வோடு நிறையத்தரும் பேராற்றலுடைய டாக்டர் சாயிகுமாரின் பணிகள் மேலும் வளர வாழ்த்துகிறேன். இந்த நூலைப் படிப்பவர்கள் பெரும் புண்ணியம் செய்தவர்கள். அவர்கள் திருவடிகளை வணங்கி வாழ்த்துகிறேன்.

மதுரை
**25.10.2008**

பணிவுள்ள,
சொ.சொ. மீனாட்சி சுந்தரம்

## குறிப்பு

பேராசிரியர் சொ.சொ.மீ.சுந்தரம் அவர்கள் உரை எழுதி சிங்கப்பூர் திருமுறை மாநாட்டுக்குழுவினரால் ஜூலை 2008ல் வெளியிடப்பட்ட "திருவாசகம்" நூல் மற்றும் ஓதுவார்களால் இசையுடன் பாடப்பெற்று, உரையாசிரியராலேயே கொஞ்சும் தமிழில் விளக்கங்களுடன் கூடிய கணினி வட்டு **(Audit CD)**
கிடைக்குமிடம்: **B1**, வதுமிதா, வசுதாரா வளாகம்
(அக்ரிணி) **78**, திருப்பரங்குன்றம் சாலை,
மதுரை - **625 003. Cell: 94430 47060**



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# முகவுரை

தமிழ்நாட்டில் எங்கோ ஒரு மூலையில் பிறந்த (27.04.1963) எம்முடன் மகாராஷ்டிராவின் வேறு மூலையில் உள்ள அக்கல்கோட்டில் நூற்றுமுப்பது வருடங்களுக்கு (கி.பி.1878) முன்னால் மகா சமாதியடைந்த தத்தாவதாரி, ஸ்ரீசுவாமி சமர்த்த மகராஜ் இன்றளவும் பேசும் தெய்வமாக அருளாட்சி செய்து வருவது உலக அதிசயங்களில் ஒன்றே.

இத்தகைய ஞானத் தொடர்புக்கு மூலகாரணமான அடியேனின் தந்தையாரைப் பற்றி இங்கே குறிப்பிடக் கடமைப்பட்டுள்ளேன். 29.03.1932ல் மதுரையில் ஜூட்டு வெ. சுந்தரராமய்யர் மற்றும் ருக்மணி அம்மாளின் மூத்த குமாரனாகப் பிறந்த எமது தந்தையார் திரு. சுப்பிரமணியன் தமது இளவயதில் தீவிர காளி பக்தராகவும் அம்பாள் உபாசகராகவும் விளங்கினார். தமது 20வது வயதில் கல்கத்தாவில் பணிபுரியும் போது அங்கே அரசாளும் காளியின் நேரடி தரிசனம் வேண்டித் தொழுதார். நீண்ட நாட்களாகியும் அவள் தரிசனம் தராமற் போகவே, நாத்திகராக மாறினார்.

அவ்வாறு இருக்கையில் கி.பி. 1953ல் பணி நிமித்தமாக சீரடிக்குப் பக்கத்தில் உள்ள கோபர்காமுக்குச் சென்றார். அங்கே திரு. பாகவத பந்து (கிளாத் ஸ்டோர்ஸ்) என்ற வியாபாரியைச் சந்தித்த போது, எமது தந்தையாரின் குணநலன்களைப் பார்த்து அவரை ஒரு நாத்திகர் என்பதை ஏற்க மறுத்த பந்து, தமது கடையிலிருந்த சத்குரு ஸ்ரீ சாயிபாபாவைத் தரிசிக்குமாறு சொன்னார். எமது தந்தையாரோ, “இந்தக் கிழவரை நான் ஏன் வணங்க வேண்டும்?” என்று விவாதம் செய்தார். பாகவத பந்தும் விடாப்பிடியாக, “நீர் மிக அருகிலிருக்கும் சீரடிக்குச் சென்று பாபாவை வணங்கி வரவில்லையென்றால் உமக்கு ஆர்டரோ, பாக்கிப் பணமோ கிடையாது” என்று பிடிவாதம் செய்தார். சரி! இவ்வளவு தூரம் பாபாவைப் பற்றி அவர் கூறுகையில் அவரது திருப்திக்காகவாவது சீரடிக்குச் சென்று வரலாம் என்று புறப்பட்டார்.

“கண்டதும் காதல்” என்பதற்கேற்ப சத்குருவைத் தரிசித்த உடனேயே அவர்மீது பக்தி ஊற்றெடுத்தது. லலிதா சஹஸ்ரநாமம் மற்றும் தேவி மந்திரங்களை பல்லாண்டு காலம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

ஜபித்ததின் பலனாக மஹான்களோடு நேரிடையாகப் பேசும் ஆற்றல் பெற்றவரான எமது தந்தையார் பாபாவிடம், "இன்று உமக்கும் எமக்கும் திருமணம் நடந்துவிட்டது. ஆகவே எந்த நிலையிலும் நான் உம்மை விட்டுப் பிரிய மாட்டேன். நீரும் எம்மைவிட்டு எப்போதும் அகலாது இருக்க வேண்டும்" என்று சங்கல்பம் செய்து கொண்டு திரும்பினார்.

தமது அஞ்ஞானத் திரையை விலக்கி அதி அற்புதமான வாழும் தெய்வமாகிய சத்குரு ஸ்ரீசாயிநாதரைத் தரிசிக்க வாய்ப்பு வழங்கிய திரு. பாகவத பந்துக்கு ஆத்மார்த்தமான நன்றிகளைக் கூறிவிட்டு ஊருக்குத் திரும்பினார் தந்தையார்.

சீரடியில் முதல் பார்வையிலேயே ஆட்கொண்ட பாபாவின் நாம ஜபத்தை தமது உயிர் மூச்சாகவும், அனைவரையும் தமது குருவின் சொரூபங்களாகவே கருதி, "சாயிபாபா" என்றே அழைக்கும் தந்தையாரை, பிறரும், "சாயிபாபா" என்றே அழைத்தனர். காலப்போக்கில், வெறும் சுப்பிரமணியனாக வாழ்க்கையைத் தொடங்கிய எம் தந்தையாரின் பெயர் "சாயிபாபா சுப்பிரமணியன்" என்று ஆனது.

எமது பெற்றோருக்கு ஏழு குழந்தைகள். அனைவரின் பெயரும் "சாயி" என்றே தொடங்குமாறு வைத்தார்கள். இன்று மூன்றாவது தலைமுறையாக அவர்களது பேரன் பேத்திகளுக்கும் "சாயி" என்றே பெயரிட்டு மகிழ்கிறோம். எங்கள் வீடும் "சாயிபாபா வீடே". "எதை நினைக்கிறாயோ, அதுவாகவே ஆகிறாய்" என்பதற்கு எங்களது வாழ்வே ஒரு சான்று.

வேலை நிமித்தமாக பாரதமெங்கும் சுற்றிக்களைத்த தந்தையார் கி.பி. 1964ல் சீரடிக்குச் சென்ற போது சமாதி மந்திரில் இரவு தங்கினார். அப்போது பாபாவிடம் தமக்கு மதுரையிலேயே குடும்பத்துடன் சேர்ந்து வாழுமாறு ஒரு நல்ல தொழிலாக ஆசீர்வதிக்குமாறு வேண்டிப் பிரார்த்தித்தார். அப்போது, பாபா அசரீரியாக "குழந்தாய்! அக்கல் கோட்டுக்குப்போ"! என்று திருவாய் மலர்ந்தார். எமது தந்தையாரும் சாஷ்டாங்கமாக வணங்கிய நிலையிலேயே, சில கணங்கள் யோசித்து விட்டு, "அக்கல்கோட்டில் வேறு ஏதோ ஒரு மகான்தானே இருக்கிறார். எனக்கு உம்மைத் தவிர யாரும் தேவையில்லை. வியாபாரத்திற்கு வழி சொல்லுங்கள்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

குருநாதா'' என்று மீண்டும் தொழ, பாபா மறுபடியும், ''குழந்தாய்! சோலாப்பூருக்குப் போ'' என்று ஆசீர்வதித்தார்.

சத்குருவின் திருவருளால் மஹாராஷ்ட்ராவின் தொழில் நகரமான சோலாப்பூருக்குச் சென்று ''பெட்ஷீட்'' ஏஜன்சியை எடுத்து வந்த எமது தந்தையார் இறுதி வரை விடாமல் அதே தொழில் செய்து கொண்டிருந்தார்.

கி.பி. 1983ல் அடியேன் B.Com., படித்துக் கொண்டிருந்த போது முதன் முறையாக திருப்பதி, மந்திராலயம், சோலாப்பூர், அக்கல்கோட், சீரடி, பண்டரீபுரம் சென்று வர எமது தந்தையார் அனுப்பி வைத்தார்.

பிற பிரசாதங்களோடு அக்கல்கோட் ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜின் மராத்தி மொழி நூல்களையும் அடியேன் எடுத்து வந்தேன்.

பூர்வஜென்ம புண்ணியத்தின் பலனாக, முதல் யாத்திரையை முடித்துவந்து அயர்ந்து தூங்கியிருந்த வேளையில் அதிகாலை கனவில் தகதகவென மின்னும் தங்கத்தாலான இரண்டு பாதுகைகளைத் தரிசித்தேன்.

அந்த திருவடிகள் ஸ்ரீ அக்கல்கோட் மஹராஜின் பொற்பாதங்களே என்று அவர்தம் திவ்ய சரிதத்தின் மூலம் தெரிந்து கொண்டேன். ஸ்ரீ அக்கல்கோட் மஹராஜ் அந்தக் கணத்திலிருந்து எம்மை ஆட்கெண்டு அருள் பாலித்து வருகிறார். அடியேனை ''சுவாமி சுதன்'' என்று தம்முடைய அன்புக் குழந்தை என்றே அழைப்பார்.

ஸ்ரீசுவாமி மஹராஜ் நடமாடும் தெய்வமாக இன்றளவும் உலாவந்து நமது சிறு சந்தேகங்களுக்கும் கூட விடை பகன்று ''பேசும் தெய்வமாக'' எங்களது வாழ்வில் இரண்டறக் கலந்து விட்டார். சரிதத்தின் மூலமாக ஸ்ரீ சுவாமி சமர்த்தரும் சாயிபாபாவும் ஒன்றே என்று உணர்ந்த எமது தந்தையாரும் சுவாமி பக்தியில் திளைத்து முக்தியடைந்தார். (11.12.2009)

இன்று உலகப் பிரசித்தி பெற்ற சீரடியில் உள்ள ''குருஸ்தானத்தில்'' வேப்பமரத்தடியில் அனைவரும் வணங்கும் பாதுகைகள் பாபாவுடையதன்று, ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜருடையதே. (ஆதாரம் பக்கம் xivல்படிக்கவும்)



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

"யாம் பெற்ற இன்பம், பெறுக இவ்வையகம்" என்ற ஆன்றோர் வாக்கின்படி, கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வந்து காக்கும் சமர்த்தேஸ்வரியின் வரலாற்று அமிர்தத்தை அனைத்து தமிழ்ப் பெருமக்களும் அறியுமாறு செந்தமிழில் எழுத வெகு நாட்களாக எண்ணியிருந்தேன்.

ஆனாலும் படிப்பு, வேலை, திருமணம், குழந்தைப்பேறு, சொந்தவீடு என்ற வாழ்வியல் கடமைகளை முடித்துக் கொண்டு கி.பி. 2006ல் **Ph.D** முடித்த கையோடு ஸ்ரீ அக்கல்கோட் மஹாராஜின் திவ்ய சரிதத்தை மராத்திய மொழி நூல்களிலிருந்து கிடைத்த செய்திகளையும் எமக்குத் தெரிந்த வேறு பல செய்திகளையும், சொந்த அனுபவத்தின் அடிப்படையிலும் தமிழில் எழுதியது, கி.பி. 2008ல் நிறைவுற்றது.

இந்நூலை எழுத ஆரம்பித்த போது புதுவையில் குறிஞ்சி நகரில் வீற்றிருக்கும் ஞான விநாயகப் பெருமானிடம் "நீர் எப்படி மகாபாரதத்தை வேதவியாஸர் சொல்லச்சொல்ல உமது தந்தத்தால் எழுதினீரோ, அப்படியே அடியேன் மனத்திலிருந்து வரும் வார்த்தைகளை அழகிய தமிழில் எழுதி அருள வேண்டும்" என்று பிரார்த்தித்தேன். அப்படியே கணபதியும் ஆக்கிக் கொடுத்தான். ஆக தங்கள் கைகளில் தவழும் இந்த நூல், ஞான விநாயகரே எழுதியது. அடியேன் ஒரு கருவியே!

'யாமிருக்க பயமேன்!' என்ற ஸ்ரீ சமர்த்தரின் வாக்கு என்றும் பொய்த்ததில்லை. இந்த சரிதத்தைப் படிக்கும் அன்பர்கள் "ஓம் ஸ்ரீ சுவாமி சமர்த்த! ஜெய ஜெய சுவாமி சமர்த்த!" என்று சுவாமிகள் திருநாமத்தை இடைவிடாது பக்தியுடன் ஜபித்தால் இவ்வுலகத் தேவைகளையும், அவ்வுலக வீடு பேற்றையும் நிச்சயம் அடைவார்கள் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

"திருவாசகத்திற்கு உருகார், ஒரு வாசகத்திற்கும் உருகார்" என்ற சீர்மிகு திருவாசகத்திற்கு செந்தமிழில் அனைவரும் பயன்பெறுமாறு எளிய உரை எழுதி அழியாப் புகழ்பெற்ற, சொல்லோவியர், நற்றமிழ் நாவலர், பொற்கிழிக் கவிஞர் பேராசிரியர் சொ.சொ.மீ. சுந்தரம், **M.Com., M.Phil.,** அவர்கள் தமது திருவாக்கால் இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிப் பெருமை சேர்த்திருக்கிறார். அன்னவர்க்கு அடியேனின் அனந்தகோடி நமஸ்காரங்களை நன்றிப் பெருக்குடன் உரித்தாக்குகிறேன்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

சித்தர்பூமியாம் புதுவையில் தமிழகத்திலேயே முதன் முறையாக ஸ்ரீ அக்கல்கோட் மஹாராஜின் கோவிலை நிர்மாணிக்க முடிவெடுத்து 4.12.2008ல் "அக்கல்கோட் ஸ்ரீ சுவாமி சமர்த்த மஹாராஜ் சேவா சாரிட்டபிள் டிரஸ்ட்" (Regd.No. 777/2008)ஐ அடியேனும் பக்தர்களும் சேர்ந்து ஆரம்பித்துள்ளோம். குருவின் திருவருளைப் பெற அடியார்களும் இந்த திருப்பணியில் பங்கு கொள்ளுமாறு விண்ணப்பிக்கிறேன்.

மராத்தி - ஆங்கிலம் - இந்தி அகராதிகளை அன்பளிப்பாக அனுப்பி உதவிய மும்பை நண்பர் திரு. C.V. பியாரிலால் அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவிக்க கடமைப்பட்டுள்ளேன்.

"மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம்" என்ற அனுபவ மொழிக்கேற்ப அடியேனின் அனைத்து ஆன்மீகத் தொண்டிற்கும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் எனது தர்ம பத்தினி திருமதி. அகிலா சாயிகுமார் மற்றும் எமது மகன் திருநிறைச்செல்வன் சாயி ஹிருஷிகேஷ் ஆகிய இருவருக்கும் வெறும் வார்த்தைகளால் நன்றி கூற இயலாது. ஆகவே குருவருள் பரிபூரணமாக அவர்களுக்குக் கிடைக்கப் பிரார்த்திக்கிறேன்.

இப்புனித நூலை அச்சிட உதவிய அனைத்துக் கலைஞர் - களுக்கும் குறிப்பாக, புதுவை தனலெஷ்மி கம்ப்யூட்டர்ஸின் ஜெ. ரத்னா, சிவகாசி வான்மதி டைப் செட்டர்ஸ், ஸ்ரீ விஷ்ணு கிராபிக்ஸ் மற்றும் கலைவாணி காலண்டர்ஸ் ஆகியோருக்கும் எமது உளங்கனிந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

எழுத்துப் பிழைகளைத் திருத்தி உதவிய எமது சிறிய தகப்பனார் திரு. ஜே.எஸ். சகாதேவன் மற்றும் இளைய சகோதரர் சாயி கணேஷ்க்கும் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

தமிழில் முதன் முறையாக அடியேனால் எழுதப்பட்டு இரண்டு பதிப்புகளாக வெளி வந்து உலகெங்கும் வாழும் தமிழ்ப் பெருமக்களின் இதயங்களுக்கும் இல்லங்களுக்கும் சென்று விட்ட "பேசும் தெய்வம்" "அக்கல்கோட் மஹாராஜ் அருளாட்சி" நூலை (விலை ரூ. 150, பக்கம்317) வாங்க வசதியில்லாத அல்லது படிக்க நேரமில்லாத குருபக்தர்களுக்காக இந்நூலை சுருக்கமாகவும் மலிவு விலையிலும் "ஸ்ரீ அக்கல்கோட் மஹாராஜ் அருளாட்சி" என்ற தலைப்பில் படைப்பதில் பெருமகிழ்ச்சி அடைகிறேன்.

பக்தியுடன்,

வாழ்க வளமுடன்! குருகடாட்சம் பரிபூரணம்



10.10.'10

**Dr. J.S. சாயிகுமார்** **M.Com., M.Phil., Ph.D.,**
வணிகவியல் பேராசிரியர்,
அரசு மகளிர் தொழிற்நுட்பக் கல்லூரி, லாஸ்பேட்,
புதுச்சேரி - 605 008. **Cell: 99947 00917**
**E-mail id : drsai63@gmail.com**

ஸ்வாமி ஸூதன்
Dr. சாயிகுமார்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# நூல் மதிப்புரைகள்

I "என்னைச் சேர்ந்த இவன், என்னை உங்களுக்கு
உங்கள் வழியில் அறிமுகப்படுத்தியதற்கு
என் பிரேமையே காரணம்.
இதில் அனுசந்திப்பவர்களுக்கு என்மீது பிரேமை ஏற்பட்டு
வாழ்வில் இறுக்கங்கள் என்னும் பிடிகள் தளர்ந்து
சுகம் உண்டாகும்!

இக்கதை கேட்பவர்கள் அமைதி அடைந்து
"ஆனந்த நிலை பெறட்டும்" என்று ஆசி கூறுகிறேன்.
இவனுக்கு என் பிரியமான மங்களகரமான ஆசிகள்
எச்செயலிலும், என்றும் நிலைத்திருக்கும்!"

– ஸமர்த்த ஸத்குரு ஸாயிநாத மஹாப்ரபுவின் ஆசீர்வாதங்களைக் கேட்டு எமக்கு அருளியவர்– சென்னை மறைமலை நகர் சாயிராகவேந்திர மந்திர்களின் ஸ்தாபகர் ஸ்ரீலஸ்ரீ ஸாயி பாண்டுரெங்க தத்த ஸரஸ்வதி ஸ்வாமிகள். 17.02.2010.

II பேரன்புடைய சாயிகுமார் மஹராஜ் அவர்களுக்கு வணக்கம். தங்களுடைய புத்தகம் (அல்ல, அல்ல – அது இறைவனுடைய பைபிள், குரான், இதிகாச காவிய பொற்குவியல்) படித்து தங்களிடம் தெய்வீக சக்தியை உணர்ந்து பேரானந்தம் அடைகிறேன்.

இந்த ஆன்மீகச் சுவையை எல்லா ஆன்மீக நாட்ட அன்பர்கள் படித்து அனுபவிக்க ஆண்டவனை வேண்டுகிறேன். பல பதிப்புகளை இப்புத்தகம் பார்க்கப் போகிறது. இதில் சிறு சந்தேகம் கூட எனக்கு இல்லை.

கோவை
26.09.09

அன்புடன்
Prof. K. துரைராஜ்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

III "பேசும் தெய்வம்" சர்வ வல்லமை படைத்த அவதார புருடரின் சரித்திரம். மிகவும் சிறப்பான முறையில் "சுவாமிசுதனால்" வெளிவந்துள்ளது.

ஸ்ரீ சாயிநாதன் ஸ்ரீ ராகவேந்திர ஸ்வாமிகள் மற்றும் சில மஹான்களுடைய தெய்வீக அற்புதங்களுடன் ஒப்பிடப் பட்டிருப்பது வாசக பக்தர்களை புளகாங்கிதம் அடையச் செய்யும் என்பது திண்ணம்.

தங்களின் தந்தையார் பரமபக்தர், பகவானுக்கு "நித்யசூரியாக" சேவை செய்து கொண்டிருப்பார்.

தொன்றுதொட்டு நம் புண்ணிய பூமியான பாரதத்தில் தர்மத்தை நிலை நாட்டி சாமான்ய ஜனங்களை உயிர்ப்பிக்க முனிவர்கள், ரிஷிகள், மஹான்கள் அவதரித்துக் கொண்டேயிருக்கிறார்கள்.

தங்களின் இந்த அற்புதமான படைப்பு பாமரர்களையும், பக்தர்களையும் ஒருங்கே ஆத்மீகத்தில் உயர்த்தி சத்குருக்களின் ஆசியுடன் இம்மையையும் மறுமையையும் செம்மையாக்கு மென்பதில் ஐயமில்லை.

சத்குருவினரின் ஆசிகள்!

பெங்களூரு
19.08.2010

இப்படிக்கு
**'சாயி சேவக்'**
**ரா. சேஷாத்திரி (90 வயது)**

President : Sri Sai Spiritual Center, Sri Saibaba Mandir Road,
I Block, Thyagaraja Nagar, BANGALORE - 560 028.
Ph : 080 26766922



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



## ஸத்குரு ஷீர்டி சாயிபாபாவும் ஸ்ரீ அக்கல்கோட் மஹராஜும் ஒருவரே! என்பதற்கு சான்று

ஒரு சரவிளக்கில் (Serial Light) வெவ்வேறு வடிவங்களிலும், நிறங்களிலும், இடங்களிலும் விளக்குகள் ஒரே சமயத்தில் எரிந்தாலும் அவற்றினூடே சக்தியாக உள்ள மின்சாரம் ஒன்றே! அதைப் போலவே தத்தாத்திரேய அவதாரிகளும் பல்வேறு கால கட்டங்களில் வெவ்வேறு ஊர்களில் தனித்தனியான நாமங்களைக் கொண்டு அருளாட்சி செய்தாலும் அனைவரும் முப்பெரும் தேவர்களின் ஒன்று சேர்ந்த பரமாத்வாவான ஸ்ரீகுரு தத்தாத்திரேயரின் அவதாரங்களேயாவர்.

உலகெங்கிலுமுள்ள சாயிபக்தர்களின் மனதில் எழுந்துள்ள சந்தேகத்தைப் போக்கவே, ஸ்ரீசாயி லீலாவில் வெளியான ஒரு கட்டுரையின் நகலை இதற்கு சான்றாக வெளியிடுவது எமது கடமையாயிற்று.

அண்ட சராசரங்களைப் படைத்து, காத்து அருளும் பரமாத்மாவிற்கு தாமே ஒரே நேரத்தில் பல்வேறு உருவங்களில் திருவிளையாடல் புரிவது கடினமானதன்று. உதாரணமாக, ஸ்ரீமஹா விஷ்ணுவின் தசாவதாரங்களில் ஸ்ரீபரசுராமனும், ஸ்ரீராமனும் ஒரே சமயத்தில் வாழ்ந்ததைக் குறிப்பிடலாம். அவ்வாறே ஸ்ரீஸ்வாமி ஸமர்த்தரும், ஸ்ரீமாணிக் பிரபுவும், ஷீர்டி சாயிபாபாவும், ஷேகாம் கஜானன் மஹராஜும் சம காலத்தில் வாழ்ந்தனர்.

### ஷீரடியில் வேப்பமரத்தடியில் உள்ள பாதுகைகளின் கதை

பாயி கிருஷ்ணாஜி அலிபாகர் என்பவர் அக்கல்கோட் மஹாராஜின் அடியவர். அக்கல்கோட் மஹாராஜின் உருவப்படத்தை வழிபட்டார். அவர் ஒருமுறை அக்கல்கோட்டிற்கு (ஷோலாப்பூர் ஜில்லா) சென்று மஹாராஜின் பாதுகைகளைத் தரிசனம் செய்து கொண்டு, தன்னுடைய நேர்மையான வழிபாட்டைச் செலுத்தி வர நினைத்தார். அவர் அங்கு செல்வதற்கு முன் கனவில் ஒரு காட்சியைக் கண்டார். அக்காட்சியில் அக்கல்கோட் மஹராஜ் தோன்றி அவரிடம், “இப்போது சீர்டியே எனது இருப்பிடம். அங்கு சென்று உனது வழிபாடுகளைச் செலுத்து” என்றார். எனவே பாயி தனது திட்டத்தை மாற்றிக் கொண்டு சீர்டிக்கு வந்து பாபாவை வழிபட்டு, ஆறு மாதங்கள் அங்கு தங்கி, மகிழ்ச்சியடைந்தார். அவருடைய காட்சி முதலியவற்றின் ஞாபகார்த்தமாக அவர் பாதுகைகளைத் தயாரித்து சிரவண சாகா 1834 (1912 A.D) ஆகிய



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



புனித தினத்தன்று அவற்றை தாதா கேள்கர், உபாசினி முதலியோரால் நடத்தப்பட்ட, உரிய சடங்கு சம்பிரதாயங்களுடன் வேப்ப மரத்தடியில் பிரதிஷ்டை செய்தார். அதன் வழிபாட்டுக்கு ஓர் அந்தணர் நியமிக்கப்பட்டார். அதனுடைய நிர்வாகம் ஸகுண் மேரு நாயக் என்ற அடியவரிடம் ஒப்புவிக்கப்பட்டது.

## இக்கதையின் முழு விபரம்

தாணேவைச் சேர்ந்த திரு. **B.V.** தேவ் என்னும் ஓய்வு பெற்ற மம்லத்தார் ஸாயிபாபாவின் ஒரு பெரிய பக்தர். இவர் இந்த விஷயத்தைப் பற்றி ஸகுண்மேரு நாயக், கோவிந்த் கமலாகர் தீக்ஷித் இவர்களிடமிருந்து விசாரித்து பாதுகைகளைக் கொண்ட ஒரு கட்டுரை ஸாயி லீலா தொகுப்பு **II** எண். 1-இல், 25-ஆம் பக்கத்தில் பதிப்பித்துள்ளார். அது கீழ்க்கண்டவாறு:

1834 சக **(1912 A.D)** யில் பம்பாயைச் சேர்ந்த டாக்டர் ராமராவ் கோதாரி ஒரு தடவை ஷீர்டிக்கு பாபாவின் தரிசனத்துக்கு வந்தார். அவரது கம்பவுண்டரும், அவரது நண்பர் பாயி கிருஷ்ணாஜி அலிபாக்கரும் அவருடன் வந்தார்கள். கம்பவுண்டரும், பாயியும், ஸகுண்மேரு நாயக் உடனும் கோவிந்த் கமலாகர் தீக்ஷித் உடனும் நெருங்கிய நண்பர்களானார்கள். சில விஷயங்களைப் பற்றி இவர்கள் பேசிக் கொண்டிருக்கையில், சீர்டிக்கு ஸாயிபாபா முதல் விஜயம் செய்தது, புனித வேப்ப மரத்தடியில் அமர்ந்திருந்தது. இவ்வுண்மைகளின் ஞாபகார்த்தம் ஒன்று இருக்க வேண்டும் என்று நினைத்தார்கள். பாபாவின் பாதுகைகளைப் பிரதிஷ்டை செய்வதற்கு எண்ணி, அவற்றைச் சாதாரணக் கல்லில் செய்வதற்கு இருந்தனர். அப்போது பாயியின் நண்பரான கம்பவுண்டர் தனது எஜமானரான டாக்டர் ராமராவ் கோதாரியிடம் இதைத் தெரிவித்தால், இதற்காக அருமையான பாதுகைகளை அவர் தயாரிப்பார் என்று யோசனை கூறினார். அனைவரும் இந்த யோசனையை விரும்பினர். டாக்டர் கோதாரியிடமும் இதைப் பற்றித் தெரிவிக்கப்பட்டது. அவரும் சீர்டிக்கு வந்து பாதுகைகளின் திட்டத்தை வரைந்தார். கண்டோபா கோயிலில் உள்ள உபாசினி மஹாராஜிடம் அவர் சென்று தனது திட்டத்தைக் காண்பித்தார். உபாசினி அதில் பல முன்னேற்றத் திருத்தங்கள் செய்து தாமரைப் புஷ்பங்கள், சங்கு, சக்கரம், மனிதன் முதலியவற்றை வரைந்து, வேப்ப மரத்தின் உயர்வைப் பற்றியும், பாபாவின் யோக சக்தியைப் பற்றியும் உள்ள பின்வரும் ஸ்லோகத்தை அதில் பொறிக்கலாம் என்று யோசனை கூறினார். அந்த ஸ்லோகம் பின்வருமாறு:



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



"ஸதா நிம்பவ்ருக்ஷஸ்ய மூலாதிவாஸாத்
ஸுதாஸ்த்ராவிணம் திக்தமப்ரியம் தம்
தரும் கல்பவ்ருக்ஷாதிகம் ஸாதயந்தம்
நமாமீச்வரம் ஸத்குரும் ஸாயிநாதம்"

இதன்பொருள்: "நான் சாயிநாத் பிரபுவை வணங்குகிறேன். வேப்ப மரத்தடியில் அவரது நிரந்தர இருக்கையினால், கசப்பாகவும், இனிமையற்றதாகவும் இருப்பினும் அமிர்தத்தை கசிகிறது. (அம்மரத்தின் கசிவு அமிர்தம் என்று அதன் குணப்படுத்தும் தன்மையால் அழைக்கப்படுகிறது) கல்ப விருக்ஷத்தை விடச் சிறந்தது."

உபாசினியின் யோசனைகள் ஏற்றுக் கொள்ளப்பட்டு நிறைவேற்றப்பட்டன. பாதுகைகள் பம்பாயில் செய்யப்பட்டு சீர்டிக்கு கம்பவுண்டர் மூலம் அனுப்பப்பட்டன. பாபா அவற்றை, "சிரவண பூர்ணிமா அன்று பிரதிஷ்டை செய்ய வேண்டும்" என்று சொன்னார். அத்தினத்தன்று காலை 11.00 மணிக்கு பாதுகைகளை கண்டோபா கோயிலிலிருந்து துவாரகாமாயி மசூதிக்கு G.K. தீக்ஷித் ஊர்வலமாகத் தனது தலையில் எடுத்து வந்தார். **பாபா அப்பாதுகைகளைத் தொட்டு, "இவைகள் பிரபுவின் பாதங்கள்" என்றும், அவற்றை வேப்ப மரத்தடியில் பிரதிஷ்டை செய்யும்படியும் கூறினார்."**

ஒரு நாளைக்கு முன் பஸ்தா சேட் என்ற பம்பாயைச் சேர்ந்த பார்சி பக்தர் ரூ. 25 மணியார்டர் செய்திருந்தார். பாபா இத்தொகையைப் பிரதிஷ்டை செய்யக் கொடுத்து விட்டார். பிரதிஷ்டையின் மொத்தச் செலவு ரூ.100 ஆகியது. அதில் ரூ. 75 நன்கொடைகளினால் சேர்க்கப்பட்டது. முதல் ஐந்து ஆண்டுகள், G.K. தீக்ஷித் அவர்களால் பாதுகைகள் வழிபாடு செய்யப்பட்டது. பின்னர் இவ்வழிபாடு ஜக்கடியைச் சேர்ந்த லக்ஷ்மண் காகேச்வரால் செய்யப்பட்டது. முதல் ஐந்து ஆண்டுகளில், டாக்டர் கோதாரி, விளக்கேற்றுவதற்காக, மாதம் ரூ. 2 அனுப்பி வைத்தார். பாதுகைகளைச் சுற்றிப் போட வேலியும் அனுப்பினார். ஸ்டேஷனிலிருந்து அவ்வேலியை சீர்டிக்குக் கொண்டு வரும் செலவும் (ரூ. 7-8-0) கூரையும் ஸகுண் மேரு நாயக்கினால் கொடுக்கப்பட்டது. தற்போது ஜாகடி (நாநாபூஜாரி) வழிபாட்டைச் செய்கிறார். ஸகுண் மேரு நாயக் நைவேத்யம், மாலை விளக்கு ஏற்றுதல் முதலியவைகளைச் செய்கிறார்.

நன்றி : கும்மிடிப்பூண்டி சின்ன ஷீரடி சாயிபாபா ஆலய வெளியீடு.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 'பேசும் தெய்வம்' அக்கல்கோட் மஹராஜ் அருளாட்சி இரண்டாம் பதிப்பு

## முன்னுரை

"குருரேவ பரம்பிரஹ்ம, குருரேவ பரம் தனம்
குருரேவ பர: காமோ குருரேவ பராயணம்।
குருரேவ பராவித்யா குருரேவ பராகதி
யஸ்மாத் ததுப தேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோ குரு:॥ "

அதாவது, குருவே மேலான பிரம்மம், மேலான தனம், ஆசை, உத்தம புருஷார்த்தம், உயர்கல்வி, உய்வுபாயம் - அப்பரம் பொருளை உபதேசிப்பதால் அதைக் காட்டிலும் உயர்ந்தவர் குருவே! என்கிற பேருண்மையையும், இரகசிய மந்திரத்தையும் 'எம்பெருமானார்' ஸ்ரீமத் ராமானுஜர் சுமார் ஆறு மாதங்கள் தமது திருக்கரங்களால் ஸேவை செய்து ஸ்ரீஆளவந்தாரின் திருக்குமாரரான ஸ்ரீதிருவரங்கப் பெருமாள் அரையரிடமிருந்து உபதேசம் பெற்றதிலிருந்தும்,

ஸத்குரு ஸ்ரீ ஷீரடி சாயிபாபாவின், "குருவே அனைத்துக் கடவுளரும் ஆவர்!" என்ற அமுதமொழியாலும்,

ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்த மஹாராஜின் உபதேசமான

"தியானமூலம் குரோர் மூர்த்தி:
பூஜாமூலம் குரோர் பதம்।
மந்த்ர மூலம் குரோர் வாக்யம்
மோக்ஷ மூலம் குரோர் க்ருபா॥"

என்ற திவ்ய மந்திரத்தின் மூலமாகவும் குருபக்தியே மிகச் சிறந்தது என்பதை நாம் அறியலாம்.

அமரம் என்கிற சமஸ்கிருத அகராதியில் 'ஸ்வாமி' என்ற சொல்லிற்கு 'முருகன்' என்ற பதம் உள்ளது. பிரம்மனுக்கே பிரணவத்தின் பொருளை உணர்த்தியதால் "சுப்ரஹ்மண்யன்" (மேலான பிரம்மம்) என்கிற திருநாமத்தைப் பெற்ற சிவகுரு நாதனான முருகனும், ஸ்ரீஸ்வாமி ஸமர்த்த மஹாராஜும் ஒருவரே என்பதற்கு ஒரு கார்த்திகைப் பௌர்ணமித் திருநாளில் ராமசாஸ்திரி என்கிற அடியவருக்கு ஸ்வாமிநாதர் ஷண்முகராக (ஆறுமுகமாக) தரிசனம் கொடுத்தருளியதை (அத்தியாயம். 87) இங்கே நினைவு கூறலாம்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஸத்குரு ஸ்ரீஷீரடி சாயிபாபாவும் ஸ்ரீஅக்கல்கோட் மஹாராஜும் ஒருவரே! என்பதற்கு தக்க ஆதாரத்தை இந்தப் பதிப்பிலே தருவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

இப்புனித நூலின் தலைப்பை "பேசிய தெய்வம்" என்று இறந்த காலத்தில் வைக்கவில்லை. பிரத்யட்சமாக இன்றும் ஸ்வாமிகள் "பேசும் தெய்வமாக" கூப்பிட்ட குரலுக்கு ஓடி வந்து பக்தர்களுக்கு தரிசனமும், அவர்தம் சந்தேகங்களைப் போக்கி திருவாய் மலர்ந்தும், குறைகளைப் போக்கியருளுவதும் ஆகிய எண்ணற்ற அனுபவங்களை நூலைப் பாராயணம் செய்யும் அடியவர்கள் எம்மிடம் நேரிலும், தொலைபேசியிலும் தொடர்பு கொண்டு சொல்லும் போது மெய்சிலிர்க்கிறது. இந்நூலின் பயனை அடைந்து விட்டதாக திருப்தியேற்படுகிறது. குருவின் திருவருளால் அடியவர்களின் அனுபவங்களைத் தொகுத்து பின்னாளில் ஒரு தனி நூலாக வெளியிடுவோம்.

பேசும் தெய்வங்கள் ஸத்குரு ஸ்ரீசாயி, சமர்த்த, ராகவேந்திர ஸ்வாமிகளின் திருவருளாலும், உலகெங்கும் வாழும் குருபக்தர்களின் பேராதரவோடும், முதற்பதிப்பின் அனைத்துப் பிரதிகளும் மிகக் குறுகிய காலத்தில் அடியவர்களின் இல்லங்களுக்கும், இதயங்களுக்கும் சென்றுவிட்டதால், இந்நூலின் இரண்டாம் பதிப்பை வெளியிடுவதில் பெருமகிழ்ச்சியடைகிறோம்.

ஆனாலும் இந்த மகிழ்ச்சியைக் கொண்டாட எம்முடன் எங்களுக்கு பாசமிக்க தந்தையாகவும் குருவாகவும் விளங்கிய எமது தந்தையார், 'குருபக்தசிரோமணி' ஸ்ரீமான் சாயிபாபா J.S. சுப்பிரமணியன் இல்லையே! என்று நினைக்கும்போது துக்கம் தொண்டையை அடைக்கிறது. அன்னாருக்கு அஞ்சலி செலுத்தும் விதமாக, அவர்தம் வாழ்வில் ஸ்ரீசாயி சமர்த்த ராகவேந்திர ஸ்வாமிகள் நிகழ்த்திய சில அற்புதங்களை மட்டும் தொகுத்து இந்த பதிப்பில் இணைத்துள்ளேன். படித்துப் பயன் பெறுக!

12.4.2009 அன்று முதற்பதிப்பு வெளியீட்டு விழா நடத்த உதவிபுரிந்த புதுச்சேரி ஸௌராஷ்ட்ர சபையினருக்கு எமது மனமார்ந்த நன்றிகள். அவ்விழாவிற்காக தந்தையார் புதுவைக்கு வந்ததே கடைசி விஜயமாயிற்று.

பேசும் தெய்வம் அக்கல்கோட் மஹாராஜ் அருளாட்சியை மீண்டும் மீண்டும் பலமுறை பாராயணம் செய்து அதன் ஒவ்வொரு



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சொல்லையும் பொருளுணர்ந்து அனுபவித்து, எமக்கு இந்நூலுக்கான தங்கள் மேலான மதிப்புரைகளை எழுதி அனுப்பிய மஹா பக்தர்களுக்கு நன்றிகள்.

யாம் பெற்ற இன்பம், பெறுக இவ்வையகம்! என்பதற்கேற்ப, பேசும் தெய்வத்தினைப் படித்து உள்ளம் நெகிழ்ந்து, பிறருக்கும் இந்நூலை பக்தர்கள் பரிந்துரைத்ததினாலும், சில புண்ணியாத்மாக்கள் குறிப்பாக, புதுவை ஸ்ரீ அருணாச்சலம் (பாபா மாஸ்டர்), கரூர் ஸ்ரீசாயிபாபா டிரஸ்டியினர் எண்ணற்ற நூல்களை வாங்கி, இலவசமாக பிறருக்கும் மனமுவந்து வழங்கியதாலும், முதற்பதிப்பு வேகமாக மக்களைச் சென்றடைந்தது! அவர்கள் திருவடிகளைப் போற்றி வணங்குகிறேன்!

தமிழகமெங்கும் பேசும் தெய்வத்தைப பற்றிப் பேச எம்மை அழைத்து கௌரவித்த சாயிமந்திர் நிர்வாகிகளுக்கும் இந்த தருணத்தில் எமது நன்றிகளை காணிக்கையாக்குகிறேன்.

இந்நூலைக் கையில் எடுத்தவுடன் கீழே வைக்க மனமின்றி ஒரே நாளில் பாராயணம் செய்த அடியவர்கள் அனைவருக்கும் குறிப்பாக, அமெரிக்காவில் கைக் குழந்தையுடன் (சாயி மஹந்தி) வசிக்கும் திருமதி லக்ஷ்மி மோகன் குமாருக்கும், சென்னை திரு முருக கிருபானந்த வாரியாரின் சீடர் ஸ்ரீ J.S. வேணுகோபால் ஸ்வாமிகளுக்கும் (78 வயது) குருகடாக்ஷம் பரிபூரணமாகக் கிடைக்கப் பிரார்த்திக்கிறேன்.

இந்நூலைப் படித்து முடித்தவுடன் அனந்தகோடி பிரம்மாண்ட நாயகரான ஸ்ரீஸ்வாமி ஸமர்த்த மஹராஜைத் தரிசிக்க வேண்டும் என்ற பேராவலுடன் அக்கல்கோட்டுக்கு யாத்திரை செல்லும் அடியவர்கள் கூட்டம் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருவது கண்கூடு.

தமிழில் அடியேன் இயற்றிய ஸ்ரீஸ்வாமி ஸமர்த்த மஹராஜின் 108 போற்றிகளைப் படித்து குருவின் திருவருளைப் பெறுமாறு வேண்டுகிறேன்.

பேசும் தெய்வம் பக்தி நூலை விநியோகித்து குருவின் திருவருளுக்கு பாத்திரமாகியுள்ள அனைத்து சாயி பக்தர்களுக்கும், குறிப்பாக திருவாளர்கள்: திருச்சி லோகநாதன், ஷீர்டி விவேக், சென்னை ஸ்ரீனிவாசன், கோவை விஜயா பதிப்பகம்,



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அமெரிக்காவில் உள்ள அட்லாண்டா சாயி மந்திர் நிர்வாகிகளுக்கும் (ஸ்ரீ மோஹன் குமார்), எமது நெஞ்சார்ந்த நன்றிகளை உரித்தாக்கு கிறேன். எம் பாசப்பிணைப்புகளான சகோதர சகோதரிகளுக்கும், உறவினர்களுக்கும், நண்பர்களுக்கும் அவர்களின் நல்லாதரவுக்கு மகிழ்வுடன் நன்றி கூறுகிறேன்.

இரண்டாம் பதிப்பை பக்தியுடன் வெளியிட முன்வந்த என் அன்பு மனைவி ஸ்ரீமதி அகிலா சாயிகுமார் அவர்களுக்கு நன்றியும் பாராட்டையும் தெரிவிக்கிறேன்.

எமது வாழ்வின் லட்சியமான ஸ்ரீசாயி சமர்த்த மஹராஜர் களுக்கு கற்கோவில் கட்டி அதன்மூலம், பொதுமக்களுக்கு தொண்டு புரிவதற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள "அக்கல்கோட் ஸ்ரீஸ்வாமி ஸமர்த்த மஹராஜ் ஸேவா சாரிட்டபிள் டிரஸ்டை" நடத்திச் செல்வதில் மும்முரமாக, உற்சாகத்துடன் எம் தோளோடு தோள் நின்று தன்னலமில்லாத சேவை புரியும் பேராசிரியர். S. வெங்கடேஸ்வர பிரபு M.Arch., பேராசிரியர். P. வேலாயுதம் M.Tech., Ph.D., மற்றும் சமூக சேவகி J. வசந்தா ஆகியோருக்கு இத்தருணத்தில் ஆத்மார்த்தமான நன்றிகளைக் காணிக்கையாக்குகிறேன்.

சிவகாசியில் வசிக்கும் தங்கை வாணி, மாப்பிள்ளை குமரன் அவர்களின் அன்பிற்கும் நூல் அச்சிடுவதில் புரிந்த உதவிக்கும் மனமார்ந்த நன்றிகள்.

'தாயில்லாமல் நானில்லை'. எமக்கு தந்தைக்குப் பிறகு தந்தையாகவும் தாயாகவும் இருந்து ஆசீர்வதிக்கும் அம்மா திருமதி. ஜெயலெக்ஷிமி சாயிபாபாவின் திருவடிகளை வணங்கி இந்த இரண்டாம் பதிப்பு வெளிவர உறுதுணையாக இருந்த அனைத்து நல் இதயங்களுக்கும் கலைஞர்களுக்கும் நன்றி கூறி அமைகிறேன்.

குருகடாட்சம் பரிபூரணம்

புதுவை
20.2.2010

பக்தியுடன்
'சுவாமிசுதன்'
Dr. **J.S. சாயிகுமார்**



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# பொருளடக்கம்





https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy





https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ஸ்ரீ அக்கல்கோட் மஹராஜ் அருளாட்சி

அறிவியலிலும் தொழில் துறையிலும் உலகத்திற்குப் பிற நாடுகள் தலைமை ஏற்கலாம். ஆனால் ஆன்மீகத்திலும் இலக்கியத்திலும் தலைமையேற்கும் தகுதி இந்திய நாட்டுக்கு மட்டுமே உண்டு. கற்றதன் பயன் கடவுளை உணர்தல் என்று உலகுக்கு உணர்த்திய மண் இந்திய மண். உலக நாடுகளையெல்லாம் வெற்றி கொள்வது வெற்றியல்ல. தம்மையுணர்ந்து தன்னுடைய பொறி புலன்களைத் திருத்திப் பணி கொள்வதே வெற்றி என்று பேசிய ஞானிகள் இந்த மண்ணில் தோன்றியவர்கள். இமயமுதல் குமரி வரை இந்த ஞானியர் திருக்கூட்டம் வாழையடி வாழையென வந்த திருக்கூட்டம் ஆகும். இந்த ஞானிகளைக் கடவுளால் அனுப்பப்பட்ட தூதர்களாக இந்திய மக்கள் நினைக்கவில்லை. கடவுளின் அவதாரமாகவே நினைத்தார்கள். இந்த ஞானிகள் படித்தவர்களுக்குக்காகப் பணியாற்றவில்லை. பாமர மக்களை உயர்த்தப்பாடுபட்டார்கள். ஏழை எளியவர்களின் இல்லங்களுக்குச் சென்று அவர்களோடு பழகி, அவர்கள் உணவைத் தாங்களும் உண்டு. அவர்கள் துன்பத்தைத் துடைத்து இன்பவிளக்கேற்றினார்கள். இந்திய நாடு முழுவதும் சுற்றி வந்து மக்களைச் சந்தித்து அவர்களுக்கு நல்வழி காட்டினார்கள். இந்த ஞானிகள் இல்லாவிட்டால் இந்தியா இல்லை.

தமிழ்நாட்டில் ஆழ்வார்களும், நாயன்மார்களும், சித்தர்களும், முத்தர்களும் தோன்றிப் பக்திப் பயிர் வளர்த்தார்கள். இதுபோல மகாராஷ்டிர மாநிலத்தில் பஜனைக்குப் புகழ்பெற்ற பண்டரிபுரத்தைத் தலைமையாகக் கொண்டு பக்தர்களும், ஞானிகளும் பாரதம் வாழப் பணியாற்றினார்கள். ஞானேஸ்வரர், சமர்த்த ராமதாசர், துக்காராம், கபீர்தாசர், நாமதேவர், ஜெயதேவர், ஏகநாதர் முதலியோர் இறைவனோடு பேசினார்கள். இறைவன் பேச்சை இவர்களும் கேட்டார்கள். தாங்கள் பெற்ற பேரின்பத்தை "யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்று உலக மக்களுக்கெல்லாம் உணர்த்தினார்கள். பேசும் தெய்வங்களாகத் திகழ்ந்த இந்தப் பெருமை மிக்கவர் திருக்கூட்டத்தில் குறிப்பிடத்தக்க பெரும் பணி செய்தவர் அக்கல்கோட் மஹராஜ் என்று போற்றப்படும் ஸ்ரீ சுவாமி சமர்த்தர் ஆவார். இவர் குரு தத்தாத்ரேயரின் அவதாரம் என்று சான்றோர்கள் உறுதிப்படுத்துகிறார்கள்.

அவர் பிறந்த இடம், பெற்றோர் என்னும் விவரங்களை உலகம் அறிவது அவசியம் என்று அவரே விரும்பவில்லை. ஞானிகள் அவர்களாகவே தம்மை அடையாளம் காட்டினாலன்றி நாம் அவர்களை அறிந்து கொள்ளமுடியாது. சுமார் 700 ஆண்டுகள் வாழ்ந்ததாகக் கருதப்படும் அவருடைய வாழ்க்கையில் இறுதிப்பகுதியான சுமார் 40 ஆண்டுகளில் நிகழ்ந்த நிகழ்ச்சிகள் மட்டுமே முறையாகப் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவற்றின் சுருக்கமே இந்த நூலாகும்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# 1. அவதாரம்

ஸ்ரீ சுவாமி சமர்த்த மஹாராஜ் மஹாராஷ்ட்ராவில் சோலாப்பூர் மாவட்டத்தில் உள்ள "அக்கல்கோட்" என்னும் ஊருக்கு கி.பி. 1857ல் விஜயம் செய்தார். அப்போது அங்கே ஸ்ரீமந்த மாலோஜி ராஜே என்கிற அரசன் (சத்ரபதி சிவாஜியின் பரம்பரை) ஆண்டு கொண்டிருந்தான்.

அக்கல்கோட் வருவதற்கு முன்பாகவே சுவாமிகள் "மங்கள் வேடா" (சோலாப்பூர்) என்ற ஊரில் சிறிது காலம் தங்கியிருந்து தம்முடைய அற்புதமான லீலைகளின் மூலம் மிகவும் பிரசித்தி பெற்றிருந்தார்.

அக்கல்கோட்டிலிருந்து ஸ்ரீ சுவாமிகள் காசி, ராமேஸ்வரம், மதுரை போன்ற புண்யஸ்தலங்களுக்கும் சென்று பல்வேறு பக்தர்களின் மனங்கவர்ந்த சற்குருவாக பயணம் செய்து பின்பு மீண்டும் அக்கல்கோட் வந்து வெகுகாலம் தங்கியிருந்து அருள் செய்ததால் சுவாமிகளை அனைவரும் பிரியமாக "அக்கல்கோட் மஹராஜ்" என்றே அழைத்தனர்.

த்யான மூலம் குரோர்மூர்த்தி: |
பூஜா மூலம் குரோர் பதம் ||
மந்த்ர மூலம் குரோர் வாக்யம் |
மோக்ஷ மூலம் குரோர் க்ருபா ||

என்று சுவாமி மஹாராஜ் அடிக்கடி இந்த சுலோகத்தை (நமக்காக) சொல்லிக் கொண்டேயிருந்தார். ஸ்ரீ குரு தத்தாத்திரேயரின் அவதாரமான சுவாமி சமர்த்தரின் மூல அவதாரமான ஸ்ரீ தத்தாத்திரேயரைப் பற்றி சிறிது அறிவோமாக.

### ஸ்ரீ குரு தத்தாத்திரேயர்

அத்திரி மகரிஷிக்கும் சதி அனுசுயா தேவிக்கும் மும்மூர்த்திகளான சிவ, பிரம்மா, விஷ்ணுவே குழந்தைகளாகப் பிறந்தது ஒரு சுவையான சம்பவம்.

கற்புக்கரசி அனுசுயா தம் கணவரான அத்திரிமகரிஷியைக் கண்கண்ட தெய்வமாகப் போற்றி வந்ததால் மண்ணுலகிலும் விண்ணுலகிலும் அவருடைய புகழ் உயர்ந்து விளங்கியது.

இதனால் பொறாமை கொண்ட முப்பெரும் தேவியர் பார்வதி, சரஸ்வதி மற்றும் லட்சுமி தம் கணவன்மார்களைத் தூண்டிவிட்டு அனுசுயாவின் கற்பைப் பரிசோதிக்கப் பூலோகம் அனுப்பினர்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அவர்கள் துறவிகள் போல வேடம்பூண்டு அத்திரியார் இல்லாத சமயத்தில் அவரது ஆசிரமத்திற்கு வந்து தனியே இருந்த அனுசுயா தேவியிடம் பிட்சை கேட்டனர். அவர்களைப் பார்த்த அனுசுயாவும் நதியில் சென்று குளித்துவிட்டு வருமாறும் அதற்குள்ளாக உணவு தயாரித்து வைப்பதாகவும் கூறினார்.

சிறிது நேரத்தில் அவர்களும் வந்துவிட, அனுசுயா தேவி வரவேற்றுப் பாத பூஜை செய்து ஆசிரமத்திற்குள் உணவருந்த அழைத்தார். வந்து அமர்ந்தவுடன் மூன்று துறவிகளும் சற்றும் எதிர்பாராத ஒரு நிபந்தனை போட்டனர். அது இதுதான் - அவர்கள் சாப்பிட வேண்டுமென்றால் அனுசுயா தேவி உடம்பில் துணியின்றிப் பரிமாற வேண்டும். அதிர்ச்சியடைந்த அம்மையார் கண்களை மூடிச் சிறிது நேரம் தம் கணவரை தியானித்தவுடன் வந்திருப்பவர்கள் யார்? அவர்களுடைய நோக்கம் என்ன? என்பதைப் புரிந்து கொண்டு, அப்படியே ஆகட்டும்! என்று அவர்களிடம் கூறினார். பிறகு அந்த மூன்று துறவிகளையும் கைக்குழந்தைகளாக மாற கட்டளையிட்டதும் அவர்களும் அவ்வாறே மாறியவுடன், அவர்களின் நிபந்தனைப்படி உணவிட்டு மூன்று தொட்டில்களில் அவர்களைப் படுக்கவைத்துத் தாலாட்டிக் கொண்டிருந்தார்.

வெளியே சென்றிருந்த தவசிரேஷ்டரான அத்திரிமகரிஷியும் ஆசிரமத்துக்குத் திரும்பி வந்து இந்த அதிசயக் காட்சியைக் கண்டு பிரமித்து நின்றார். நடந்தவைகளை அனுசுயா விவரிக்கவும் எல்லையில்லா மகிழ்ச்சியுடன் குழந்தைகளை கொஞ்சிக் குலாவினார். பிள்ளையில்லையே என்ற கவலையைத் தீர்க்க முப்பெரும் தேவர்களே தமக்குக் குழந்தைகளாக ஆனதை எண்ணி இருவரும் மிகவும் ஆனந்தமடைந்தார்கள்.

கிணறு வெட்டப்பூதம் கிளம்பிய கதையாக தாம் ஏதோ நினைத்துச் செய்த காரியம் தமக்கே வினையாக வந்ததை எண்ணி முப்பெரும் தேவியரும் அத்திரிமகரிஷியின் ஆசிரமத்துக்கு வந்து தங்களை மன்னிக்குமாறும், தங்கள் கணவன்மார்களை மீண்டும் தங்களுக்கே திருப்பியளிக்குமாறும் பணிவுடன் வேண்டி நின்றனர். சதி அனுசுயா தேவியை சந்தேகத்திற்கு இடமில்லாமல் பதிவிரதையாகத் தாங்கள் ஏற்றுக் கொள்வதாகவும் கூறிப் பரிதாபமாக நின்றனர்.

அவர்கள் நிலைகண்டு மனமிரங்கிய ரிஷி தம்பதியரும் குழந்தைகளை மீண்டும் தங்கள் நிலைக்குத் திரும்பப் பிரார்த்திக்கவும், சிவ, பிரம்மா, விஷ்ணு பிரசன்னமாயினர்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



பிள்ளைக்கலி தீர்க்கத் தாங்களே தங்களை அத்திரிமகரிஷிக்கும் அனுசுயாதேவிக்கும் "தத்தம்" செய்வதாக அருள்பாலித்து, ஓருடல் மூன்று தலைகளுடன் "தத்தாத்திரேயர்" (தத்த ஆத்ரேயர் அதாவது அத்திரிக்குத் தத்தம் ஆன குழந்தை) என்ற மூவரின் அம்சமான குழந்தையை அவர்களுக்குப் பரிசாக வழங்கிவிட்டுத் தேவலோகம் திரும்பினர்.

'கு' என்றால் அஞ்ஞானம். 'ரு' என்றால் அழிப்பவர் என்று அர்த்தம். குருதத்தாத்ரேயரின் அவதார நோக்கம் இப்புவியுலகில் அஞ்ஞானத்தை அகற்றிப் பக்தியின் மூலமாக ஜீவன்களை முக்தியடையச் செய்வதேயாகும். இன்னும் இப்பணி முழுமை யடையவில்லை. ஆதலால் தத்தாத்ரேயர் பல இடங்களில் பற்பல பெயர்களில் அவதரித்து மக்களைக் கரைசேர்த்துக் கொண்டேயிருக்கிறார்.

ஸ்ரீ சுவாமி சமர்த்த மஹாராஜும் தத்தாத்ரேயரின் அவதாரமே. இது பல பக்தர்களின் முற்றிய அனுபவங்கள் மூலம் உணரப்பட்ட உண்மையாகும்.

**ஸ்ரீ தத்தாத்ரேயரின் அவதாரங்கள்**

**முறையே:**

1. ஸ்ரீபாத ஸ்ரீவல்லபர் (ஆந்திராவில் ரெய்ச்சூர் அருகே குரவப் - பூரில் கிருஷ்ணாநதியின் நடுவில் உள்ள சிறு தீவில் அவர் தவமியற்றிய கோவில் அமைந்துள்ளது)

2. ஸ்ரீநரசிம்ம சரஸ்வதி (மஹாராஷ்ட்ரா, கர்நாடகா எல்லையில் கானகாப்பூரில் சுவாமிகளின் பாதுகை உள்ளது). (அவதாரம் கி.பி.1458)

3. ஸ்ரீசுவாமி சமர்த்தர் (மஹாராஷ்ட்ராவில் சோலாப்பூர் அருகே 40கீ.மீ. தொலைவில் அக்கல்கோட்டில் கி.பி. 1878ல் மஹா சமாதி அடைந்தார்). (03.04.1878)

4. சத்குரு ஸ்ரீசீரடி சாயிபாபா (மஹாராஷ்ட்ராவில் அஹமத்நகர் மற்றும் நாசிக் இடையே கோபர்காம் தாலுகாவில் உள்ள சீரடியில் கி.பி. 1918ல் மஹா சமாதி அடைந்தார்). (15.10.1918) (விஜயதசமி, ஏகாதசி **3 P.M.)**

5. ஷேகாம் ஸ்ரீ கஜானன் மஹராஜ் (மஹாராஷ்ட்ரா மத்திய பிரதேசம் எல்லையில் ஷேகாம் என்ற ஊரில் சமாதி அடைந்தார்). (08.09.1910 காலை 8 மணிக்கு)

சத்குரு ஸ்ரீ சீரடி சாயிபாபாவும் ஷேகாம் ஸ்ரீ கஜானன் மஹாராஜும் சமகாலத்தில் வாழ்ந்த தத்த அவதாரிகள் ஆவர்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



## குருகடாட்சம் பரிபூரணம்

ஒரு சமயம் கானகாப்பூரிலிருந்து ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி சுவாமிகளின் பூஜாரி ஸ்ரீ சுவாமி மஹாராஜரை தரிசிக்க வந்தார். அவரிடம் சுவாமிகள் தன்னுடைய பெயரும் "நிருசிங்க பான்" **(Nirusing Bhan)** என்று கூறி தாமே "தத்த அவதாரம்" என்பதை அறிவுறுத்தினார்.

பல சமயங்களில் சமர்த்த சுவாமிகள் பக்தர்கள் தம்மை யாரென்று பக்தியுடன் கேட்கும்போது "தத்த நகரத்தின் மூல புருஷர், ஆலமரம்" என்றும், "நானே ராமனாகவும் கிருஷ்ணனாகவும் வந்தேன்" என்றும் திருவாய் மலர்ந் தருளியுள்ளார்.

1846-47 வாக்கில் "ராஜ ஸ்ரீ சிந்தோபந்த் அப்பா டோள்" சோலாப்பூரில் நிர்வாகியாக இருந்தார். அவருடைய உதவியாளர் பண்டரிபுரத்திற்குத் தரிசனம் செய்யச் சென்ற பொழுது அங்கே ஸ்ரீ கோபால் புவா என்ற சித்தபுருஷர் முகாமிட்டிருந்தார். அவரைத் தரிசிக்கச் சென்ற உதவியாளரிடம் அந்தச் சித்தர்சிந்தோ பந்த்க்கு ஒருகடிதம் எழுதி அனுப்பினார். அதில் இன்னும் சில வருடங்களில் அவருக்குத் தத்தாத்திரேயரின் தரிசனமும் அவருடன் சகவாசமும் கிடைக்கும் என்று ஆசீர்வதித்து இருந்தார்.

இதை மெய்ப்பிப்பது போலவே, ஸ்ரீ சுவாமி சமர்த்தரை சிந்தோபந்த் டோள் சோலாப்பூரில் கண்டு தரிசித்து அவரை அக்கல்கோட்டுக்கு அழைத்துவந்தார். சமர்த்த சுவாமிகள் தத்த அவதாரம் என்பதற்கு இதுவும் ஒரு சான்று.

சுவாமிகள் அடிக்கடி தாம் "மூல், மூல்" அதாவது அனைத்திற்கும் மூலமான, வேரான, பரமாத்மா, சிவ, பிரம்மா, விஷ்ணுவுடைய அவதாரமான தத்தாத்திரேயர் என்று கூறிக் கொண்டேயிருந்தார்.

சமர்த்த சுவாமிகளின் பற்பல அற்புத லீலைகள் அரங்கேறிய புனிதமான இந்த இடத்தில் தற்போது ஆலமரத்தைச் சுற்றி சுவாமிகளின் கோவில் "வடவ்ருக்ஷமந்திர்" (வடவிருக்ஷம் என்றால் ஆலமரம்) என்ற பெயரில் சிறப்புற்று விளங்குகிறது.

சமர்த்தர் என்பதற்கு "சர்வ வல்லமை படைத்தவர்", "எதையும் செய்ய வல்லவர்" "முடியாதது எதுவும் இல்லை" என்று பொருள். நாம் திறமையான புத்திசாலி குழந்தையைப் பார்த்துச் 'சமர்த்து' என்று அழைப்பதை நினைவு கூறுங்கள்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஸ்ரீசுவாமி சமர்த்த மஹாராஜும் தம்மை நம்பி வந்த பக்தர்களுக்கு அருள் மழை பொழிந்து இகபர சுகங்களை அளித்துத் தம்மால் முடியாதது எதுவுமே இல்லை என்பதை அவர் அக்கல்கோட்டில் வாசம் செய்த போதும், மஹாசமாதியடைந்த பின்னர் இன்று வரையிலும், கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வந்து காப்பாற்றுவதையும் பின்வரும் பக்தர்களின் அனுபவங்கள் மூலம் உணரலாம்.

## கிருஷ்ணபுவா (எ) டாகுர்தாஸ்புவா

மும்பைவாசியான இவர் தத்த உபாசகர். கீர்த்தனைகளை இனிமையாகப் பாடுவதிலும் வல்லவராக இருந்தவர். திடீரென்று அவரது முகத்தில் வெண்குஷ்டம் பரவ ஆரம்பித்தது. இரண்டு வருடங்களாக மருந்து உட்கொண்டும் பலனில்லை. இதனால் தன் முகத்தையே யாருக்கும் வெளிக்காட்ட முடியாமல் அவமானத்தால் மனம் குமுறிய டாகுர்தாஸ் குடும்பத்துடன் காசிக்குச் சென்றுவிட தீர்மானித்தார்

தனக்கு மிகவும் பிரியமான கானகாபூர் ஸ்ரீநரசிம்ம சரஸ்வதி சுவாமியைக் கடைசியாக ஒருமுறை தரிசித்துவிட்டுப் பிறகு காசிக்குப் போகலாம் என்று கானாகபூருக்கு வந்து மனமுருகப் பஜனை செய்து பிரார்த்தித்தார். தத்தாத்திரேய அவதாரமான ஸ்ரீ நிருசிம்ம சரஸ்வதி தமது அவதாரகாலம் முடியும் போது தமது பாதுகைகளைப் பக்தர்களிடம் அளித்துத் தினமும் "மதூகரி' (பகல் வேளையில் பிட்சை) வாங்க வருவேன் என்று ஆசீர்வதித்துக் காட்டுக்குள் சென்று மறைந்து விட்டார். இன்று வரைக்கும் சுவாமிகள் கானாகபூருக்கு வந்து போவதாக ஐதீகம். இதனால் இந்த ஊருக்கு வரும் பாமரர் முதல் கோடீஸ்வரர் வரை மதியம் ஆரத்தி முடிந்ததும் ஐந்து அடியார்-களுடைய வீடுகளில் சென்று பிச்சை வாங்க வேண்டும். அதுவே மஹாப்ரசாதம்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சுவாமிகள் இன்றும் உயிருடன் இருப்பதால் அவரது கோவிலில் சிலையோ, சமாதியோ கிடையாது. அவரது பாதுகைகளுக்கே அனைத்து பூஜைகளும் நடைபெறுகின்றன. ஒரு சமயம் பக்தர் ஒருவர் பாதுகைகளை வணங்கும்போது அவரது விரல் நகம் பட்டு அதிலிருந்து ரத்தம் கசிந்தது. அன்றிலிருந்து ஸ்பரிச தரிசனம் தடை செய்யப்பட்டுள்ளது.

இப்போது டாகூர்தாஸ் கதைக்கு வருவோம். மும்பையிலிருந்து கானகாபூருக்குச் செல்லும்போது சுவாமி பாதுகைகளில் தடவுவதற்காக வாசனைமிகுந்த கஸ்தூரியைக் கொண்டு போனார். ஆனால் அங்கே அர்ப்பணிக்க மறந்துவிட்டார். அன்று இரவு தூக்கத்தில் ஸ்ரீநிருசிம்ம சரஸ்வதி சுவாமிகள் வந்து "அக்கல்கோட்டிற்கு சென்று ஸ்ரீ சுவாமி சமர்த்தரை தரிசனம் செய்தால் உன்நோய் நீங்கும்" என்று அருளிமறைந்தார். விடிந்ததும் குடும்பத்துடன் அக்கல்கோட் நோக்கிப் பயணம் தொடர்ந்தார். மூன்றாம்நாள் அக்கல்கோட் வந்தடைந்தார்.

சமர்த்த சுவாமிகள் அப்போது ஒரு வியாபாரி வீட்டில் தங்கியிருந்த செய்தியைக் கேட்டு அங்கே விரைந்தார். சுவாமிகளைப் பார்த்ததும் அவர்தம் பாதங்களில் விழுந்து வணங்கினார். டாகூர்தாஸைப் பார்த்ததும் சுவாமிகள், "என்னோட கஸ்தூரி எங்கே? உடனே கொண்டு வா" என்றதும் தாஸ்"க்கு சுவாமிகளின் சாக்ஷாத்காரமும் எல்லாம் அறியும் ஞானமும், அவர் தத்தாத்திரேய அவதாரமே என்பதை தமக்கு எளிதில் புரிய வைப்பதையும் உணர்ந்து ஓடோடித் தம் இருப்பிடம் சென்று கஸ்தூரியை எடுத்து வந்து சுவாமிகளிடம் அர்ப்பணித்தார். (தாம் கானகாபூரில் மறந்துவிட்டதை சுவாமிகள் அக்கல்கோட்டில் நினைவுபடுத்தி வாங்கிக் கொண்டார்) அதை பிரியமாக வாங்கிக் கொண்ட சுவாமிகளும் அங்கே விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களுக்கு அதைத் தடவி மகிழ்ந்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தன்னுடைய வெண்குஷ்டம் குணமாகும் என்ற நம்பிக்கையில் அக்கல்கோட்டிலேயே தாஸும் குடும்பத்துடன் தங்கியிருந்தார். ஒரு நாள் சுவாமிகளின் தரிசனத்திற்கு தாஸ் சென்ற போது அங்கே எரிந்து கொண்டிருந்த துனி (ஹோம குண்டம்) யிலிருந்து ஒரு கட்டையை எடுத்து சுவாமிகள், சற்றும் எதிர்ப்பார்க்காத வகையில் டாகூர்தாஸின் மீது எறிந்தார். அந்த காட்சியை கண்டதும் குழுமியிருந்த பக்தர்கள் அனைவரும் "ஜெய ஜெய சுவாமி சமர்த்த" என்று (ஐயகாரம்) கோஷமிட்டனர். தாஸைப் பார்த்து "உனக்கு சுவாமிகளின் அருள் கிடைத்துவிட்டது. உனது குறைகள் நீங்கும்" என்று மகிழ்ச்சியாக கூறினர். தாஸும் அந்த பாதி எரிந்த கட்டையை பிரசாதமாக எடுத்து வந்து அத்துடன் கானகாபூரிலிருந்து கொண்டு வந்த உதி (விபூதி) பிரசாதத்துடன் கலந்து தினமும் வெண்குஷ்டம் மீது தடவி வந்தார். சில மாதங்களில் அவரது நோய் முற்றிலும் குணமானது கண்டு அனைவரும் சுவாமிகளின் கருணையைப் போற்றித் துதித்தனர். டாகூர்தாஸின் மகிழ்ச்சியைச் சொல்லவா வேண்டும். சுவாமிகளின் மீது பரிபூரணமாக நம்பிக்கையும் பக்தியும் தாஸுக்கு மேலோங்கியது.

அப்போது அவருக்கு மனைவியும் ஏழுவயதில் ஒரு மகளும் இருந்தனர். தாஸின் மனைவி தனக்கு ஒரு ஆண் குழந்தை வேண்டும் என்று சுவாமிகளிடம் பிரார்த்தித்தார். சுவாமிகளும் உடனே தமது தலைமீதிருந்த தொப்பியைக் கழற்றி அவர் மீது வீசினார். பன்னிரெண்டு மாதங்களில் அழகான ஆண் குழந்தை பிறந்தது. சுவாமிகளின் பாதத்தில் வைத்து ஆசி பெற்ற தாஸ் தம்பதியர் அந்த குழந்தைக்கு "குருநாத்" என்று பெயரிட்டு மகிழ்ந்தனர்.

ஸ்ரீ சுவாமி சமர்த்தரின் ஆசியால் நோயும் குணமாகி ஒரு வாரிசுடன் மும்பைக்குத் திரும்பிய டாகூர்தாஸ், மும்பையில் டாகூர்தார் என்ற தேவஸ்தானத்தில் ஸ்ரீ சுவாமி சமர்த்த மஹாராஜின் பாதுகைகளைப் பிரதிஷ்டை செய்து வணங்கி வந்தார். அவருக்குப் பிறகு அவரது மகன் குருநாத்தும் பயபக்தியுடன் சுவாமிகளின் கீர்த்தனைகளைப் பாடிப் பூஜைகள் செய்து வந்தார்.

டாகூர்தாஸ் மும்பைக்கு திரும்பினாலும் அவ்வப்போது, அக்கல்கோட் வந்து தங்கி மனம் குளிர சுவாமிகளை தரிசித்து கீர்த்தனைகளை பாட மறக்கவில்லை. அப்படி வரும்போது ஒரு சமயம் டாகூர்தாஸுக்கு இந்து சாஸ்திரப்படி சுவாமிகளிடம் "குரு உபதேசம்" பெற வேண்டும் என்று ஆசை வந்தது. அவரது மனதில் இதை நினைக்கும் போதே சுவாமிகள் மிகவும் கோபமடைந்தவராக அவரைப் பார்த்து "எங்களை ஏண்டா தொந்தரவு செய்றே? உபதேசம் அது இதுன்னு இங்கே வராதே! அந்த வேலையெல்லாம் இங்கே



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



செய்றதில்லை, வெளியே போ! இல்லையேல் செருப்படிதான்" என்று தாஸை விரட்டியடித்தார்.

மனம் திருந்திய தாஸும் சுவாமிகள் பரிபூரணமான தத்தமூர்த்தியே என்றும் அவரது பக்தியே முக்திக்கு வழி என்றும் உணர்ந்து மும்பைக்கு திரும்பினார். சமர்த்த சுவாமிகள் மடசம்பிரதாயங்களிலிருந்து வேறுபட்டிருந்தார். காதில் மந்திரோபதேசம் செய்வது, காஷாயம் அணிவது போன்ற சடங்குகளிலிருந்து அப்பாற்பட்டு பரிசுத்தமான பக்தி மார்க்கத்தையும் பரிபூரண சரணாகதி தத்துவத்தையும் அனுபவங்கள் மூலமாக உணர்த்தியருளினார்.

இந்தக் கருத்தை வலியுறுத்தியே ஸ்ரீ சமர்த்தர் சதா சர்வகாலமும் கீழ்க்காணும் சுலோகத்தைப் (நமக்காக) பாடிக் கொண்டேயிருந்தார்.

"தியான மூலம் குரோர்மூர்த்தி: |
பூஜா மூலம் குரோர் பதம் ||
மந்த்ர மூலம் குரோர் வாக்யம் |
மோக்ஷமூலம் குரோர் கிருபா ||"

இதன் பொருளாவது: ஒரு பக்தனுக்கு தனது குருவின் திருவடிவே தியானத்திற்கு மூலமாகவும், குருவின் பாதங்களே அனைத்துப் பூஜைகளுக்கும் உரிய மூலப்பொருளாகவும், குருவின் திருவாய் மொழிகளே அனைத்து மந்திரங்களிலும் சிறந்த மூல மந்திரமாகவும், குருவின் திருவருளே முக்திக்கு மூலமாகவும் (காரணமாகவும்) விளங்குகிறது.

குருகடாட்சம் பரிபூரணம்

(குருவின் கடைக்கண் பார்வை (அருள்) அனைவருக்கும் முழுமையாக கிடைக்கட்டும்)

ஸ்ரீ சுவாமி சமர்த்தரின் அடுத்த அவதாரமான சத்குரு ஸ்ரீ சீரடி சாயிபாபாவும் இந்தக் கருத்தை ஆணித்தரமாகப் பின்பற்றிச் சுத்தசமரச சன்மார்க்க நெறியில் வாழ்ந்தும், வழிகாட்டியும் வந்து கொண்டிருக்கிறார். ஸ்ரீ சாயிபாபாவின் அமுதவாக்கியங்களில் சில:

1. குருவை நம்பு. குருவே அனைத்துக்கடவுளரும் ஆவார்.

2. குருவை நம்பு. ஆறுவித சாஸ்திரங்களும் நான்கு விதமான சாதனை முறைகளும் அவசியமில்லை.

3. நீ என்னைப்பார், நான் உன்னைப் பார்க்கிறேன்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



4. குரு தன் பக்தன் இந்த உலகில் எந்த மூலையில் இருந்தாலும் குருவியைக் கயிற்றால் கட்டி இழுப்பது போலத் தம்மிடம் அழைத்துக் கொள்கிறார்.
5. யாரும் யாரைச் சேர்ந்தவருமில்லை. **(Nobody belongs to anybody else).** நான் உன்னில் இருக்கிறேன். நீ எனக்குள் இருக்கிறாய். இதுவே உண்மை.
6. ஒரு குச்சியை நிலத்தில் நட்டு நம்பிக்கையுடன் வணங்கி னாலும் நீ கேட்டது கிடைக்கிறதா, இல்லையா என்று பார்!
7. நம்பிக்கை,பொறுமை இவை இரண்டும்தான் நான் கேட்கும் தட்சிணை.
8. அனைத்திற்கும் முதலாளி (கடவுள்) ஒருவரே.
9. மந்திரங்களில் சிறந்தது காயத்ரி. விரதங்களில் சிறந்தது ஏகாதசி.
10. நான் மஹாலஷ்மி. என் பக்தனுடைய வீட்டில் உண்ண உணவுக்கோ உடுத்த உடைக்கோ என்றும் பஞ்சமிருக்காது.
11. என் பக்தன் என்னை மறந்தாலும் நான் ஒரு போதும் அவனைக் கைவிடுவதில்லை.
12. எவன் என்னை நினையாமல் ஒரு போதும் உண்ண மாட்டானோ அவனுக்கு நான் அடிமை.
13. தினமும் சமைத்தவுடன் ஒரு கவளமாவது வீட்டிற்கு வெளியே வைத்துவிட்டால் கண்ணுக்குத் தெரிகிற மற்றும் தெரியாத லட்சக் கணக்கான ஜீவராசிகளுக்கு அன்னதானம் அளித்த புண்ணியம் கிடைக்கும். அதை உண்ண யாரையும் அழைக்கவோ, விரட்டவோ கூடாது.

ஒரு சமயம் சீரடியில் ஒரு வயதான பக்தை பாபாவிடம் உபதேசம் பெற வேண்டி வந்தார். ஆனால் பாபா அவ்வாறு ஏதும் செய்யாமற் போகவே, சாகும் வரை உண்ணாவிரதம் இருக்கத் தலைப்பட்டார். தன் நிலையில் மிகவும் பிடிவாதமாக இருந்த அந்தப் பெண்மணியைப் பாபா தம்மிடம் வரவழைத்து அன்பான குரலில் "தாயே, எனது குரு எனக்கு எந்த மந்திரத்தையும் காதில் போதிக்கவில்லை. அப்படியிருக்க என்னால் எப்படித் தங்களுக்கு உபதேசிக்க இயலும்? அவர் எப்போதும் தவத்திலேயே இருப்பார். நான் அவருக்குப் பணிவிடைகள் செய்து கொண்டே அவரது திருமுகத்தைக் கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டே யிருப்பேன். என்றாவது ஒரு நாள் தம் கண்களைத் திறந்து என்னை அருட்பார்வையால் பார்த்துவிட்டு (குருகடாட்சம்) மீண்டும்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தவத்தில் ஆழ்ந்து விடுவார். எனக்குத் தெரிந்தது எல்லாம் பக்தியும், சரணாகதியுமே. குருவின் கடைக்கண் பார்வை இருந்தாலே நம் வல்வினைகள் நீங்கி முக்திக்கு வழிபிறக்கும். ஆகவே, உபதேசம் பெற வேண்டுமென்ற ஆசையை விடுத்து அமைதியாக ஊருக்குச் சென்று வாருங்கள்" என்று விபூதி பிரசாதம் கொடுத்துச் சமாதானப்படுத்தி அனுப்பி வைத்தார்.

ஸ்ரீ சுவாமி சமர்த்தரும் சத்குரு ஸ்ரீ சாயிபாபாவும் தத்தாத்திரேய அவதாரிகளாதலால் இருவரது வழிகளும் ஒன்றியிருப்பதைக் காணலாம். இந்தக் கலிகாலத்திற்கேற்றாற் போல மிகவும் சுலபமான பக்தி மார்க்கத்தையே அவர்கள் போதித்துப் பக்தர்களைக் கடைத்தேற்றி இன்றளவும் நித்யஸூரிகளாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

குருகடாட்சம் பரிபூரணம்

ஸ்ரீ சுவாமி எங்கே எப்போது பிறந்தார் என்பதற்கான சான்றுகள் ஏதும் கிடைக்கவில்லை. அவரும் அதைப்பற்றி ஒன்றும் சொல்லவுமில்லை. சுவாமிகள் கி.பி. 1838ல் மங்கள்வேடா என்ற ஊருக்கு வந்ததிலிருந்து மக்கள் அவரைப் பின் தொடர்ந்து பக்தி செய்தனர்.

சில செவி வழிக் கதைகள் உண்டு. வட இந்தியாவில் பாகீரதி நதி பிறக்கும் மலைக்காடுகளில் ரிஷிகளின் தபோவனம் உள்ளது. அங்கே சுவாமிகள் தவத்தில் ஆழ்ந்திருந்தார். அப்போது அவர் மீது புற்றுகளும் இலை தழைகளும் மூடியிருந்தன. ஒரு மரவெட்டி மரம் வெட்டும் போது தவறுதலாகப் புற்றின் மீது கோடாரிபட்டு அதிலிருந்து ரத்தம் வந்ததைக் கண்டு திடுக்கிட்டான். பிறகு தவம் கலைந்த சுவாமிகளும் அவனை ஆசீர்வதித்து விட்டு அங்கிருந்து கிளம்பினார்.

இதை மெய்ப்பிக்கும் வகையில் ஸ்ரீ சமர்த்தரின் தொடையில் வெட்டுக்காயம் இருந்ததை அனைவரும் அறிவர்.

அங்கிருந்து கிளம்பிய சுவாமிகள் காசியில் சிலகாலம் தங்கியிருந்ததாகவும் பிறகு கங்கா சங்கமத்தில் இருந்ததாகவும் கூறுவர்.

ஸ்ரீ சுவாமிகள் தேவள் (Dewall) என்ற ஊரில் தம்முடைய பாதுகைகளைப் பிரதிஷ்டை செய்து ஒரு மடத்தை நிறுவினார். மோங்கலா (Mongala) என்ற ஊரில் அவருக்கு எட்டு கிராமங்கள் தானமாகக் கிடைத்தன. அங்கே மடம் நிறுவித் தமது சீடர்களிடம் ஒப்படைத்துவிட்டு தம் பயணத்தை மேலும் தொடர்ந்தார். சுவாமிகள் எப்போதும் ஒரே இடத்தில் நில்லாமல் ஊர் ஊராகச் சென்று பக்தர்களின் குறைகளை நீக்கியதால் "சஞ்சாரபாரதி" என்று புகழ் பெற்றிருந்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



மஹராஜ் ராமேஸ்வரம், மதுரை, உடுப்பி மற்றும் பண்டரீபுரத்திற்கும் யாத்திரை செய்து கி.பி. 1857 வாக்கில் அக்கல்கோட் வந்து அருள்பாலித்துக் கொண்டுள்ளார். அப்போதே சுவாமிகளின் வயது 400 அல்லது 500 இருக்கலாம் என்று அடியவர்கள் எண்ணினார்கள்.

சுமார் 1838ல் மங்கள் வேடாவுக்கு வந்த சுவாமிகள் ஏறக்குறையப் பன்னிரெண்டு ஆண்டுகாலம் அங்கே தங்கியிருந்து தமது பெருங்கருணையினால் பக்தவாத் சல்யனாகத் திகழ்ந்தார்.

திரு.நானா ரேக்கி என்ற புகழ்பெற்ற ஜோதிடர் ஸ்ரீ சமர்த்த சுவாமிகளின் ஜாதகத்தைக் கணித்து அதை சுவாமிகளின் திருவடியில் அக்கல்கோட்டில் வைத்து ஆசி பெற்றுள்ளதால் அது உண்மையான கணிப்பு என்று நம்பப்படுகிறது.

அதன்படி ஸ்ரீ சுவாமிகள் அஸ்தினாபுரத்திலிருந்து (டெல்லி) 12 காத தூரத்திலுள்ள சேலிகேடே கிராமம் என்ற இடத்தில் கி.பி. 1149ம் வருடத்தில், சைத்ர சுத்த இரண்டாம் தினத்தில், குருவாரம் (வியாழன்) அஸ்வினி நட்சத்திரத்தில் அதிகாலை இரண்டு மணியளவில் மேஷ லக்கனத்தில், ஆல மரத்தினடியில், கணபதி ஆலயத்தில் எட்டுவயதுப் பாலகனாக மண்ணைப் பிளந்து வெளிப்பட்டார்.

'சுவாமிசுதன்' என்றழைக்கப்படுகிற மும்பையைச் சேர்ந்த பக்தர் தாம் எழுதிய ஆரத்தியிலும் சுவாமிகள் சேலிகேடே கிராமத்தில் அவதரித்ததாக வர்ணிக்கிறார். சுவாமிகள் கி.பி. 1149லிருந்து பாரததேசமெங்கும் பல்வேறு திருநாமங்களில் பல்வேறு இடங்களில் அருள்பாலித்து மக்களின் நன்மைக்காகக் கடைசியில் அக்கல்கோட்டில் வந்து நிரந்தரமாகத் தங்கியுள்ளார். ஆகவே, "அக்கல்கோட் மஹராஜ்" என்று அன்புடன் அழைக்கப்பட்டுப் புகழ் பெற்று விளங்குகிறார்.

குருகடாட்சம் பரிபூரணம்

"அவதார" என்ற சமஸ்கிருத சொல்லுக்கு "இறங்குதல்" என்று பொருள். உலகைப் படைத்துக் காத்து ரக்ஷிக்கும் பரம்பொருளே தன் பரந்த உன்னதமான நிலையிலிருந்து கீழிறங்கி மனித உருவிலோ அல்லது பிற பிராணிகளின் வடிவிலோ அல்லது இரண்டும் கலந்த உருவங்களிலோ (பிறப்பெடுத்து) தோன்றி இந்த உலக மக்களின் துன்பங்களைப் போக்கி வளம் சேர்க்க வருவதையே "அவதாரம்" என்று கூறுகிறோம்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அப்படித் தத்தாத்திரேயரின் அவதாரங்கள் அவ்வப்போது நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. ஸ்ரீ சுவாமி சமர்த்த மஹாராஜும் மண்ணைப் பிளந்து வந்து நம்மை நல்வழிப்படுத்தவும், இகபர சுகங்களை அளித்து காக்கவும் அவதாரம் எடுத்துள்ளார் என்பதை அறிய வேண்டும்.

நம்பினவருக்கு அவர் எவ்வாறெல்லாம் விசித்திரமாக தமக்கே உரிய பாணியில் அருள் பாலித்துக் கொண்டிருக்கிறார் என்பதை பின்வரும் உண்மைச் சம்பவங்களிலிருந்து உணர்ந்து அவர்தம் அருள் பெறுவோமாக!

கல்கத்தாவிலிருந்து ஒரு ஆங்கிலேய வழக்கறிஞரும் அவருடைய பார்ஸி நண்பரும் அக்கல்கோட்டுக்கு வந்து சுவாமிகளைத் தரிசித்து விட்டு கீழே அமர்ந்தனர். அவர்கள் இருவரும் சுவாமிகளைப் பார்த்து "தாங்கள் எங்கிருந்து வந்துள்ளீர்கள்"? என்று வினவினர். அதற்கு சமர்த்தரும் "யாம் முதலில் கர்தலீனவத்திலிருந்து புறப்பட்டோம். பின்பு சுற்றிக் கொண்டே கல்கத்தா மற்றும் வங்க தேசங்களை பார்த்துவிட்டு, காளிதேவி தரிசனம் செய்தோம். கங்கைக் கரையிலுள்ள ஹரித்வார், கேதார்நாத், கங்கோத்ரி, பத்ரிநாத், துவாரகை, அயோத்தி போன்ற ஆயிரக்கணக்கான நகரங்களுக்குச் சென்று விட்டுக் கோதாவரிக்கரைக்கு வந்தோம்.

அங்கிருந்து ஹைதராபாத் மற்றும் மங்கள்வேடாவில் பல வருடங்கள் தங்கியிருந்தோம். பிறகு பண்டரிபுரம், பேகம்பூர் மோஹோளுக்கு வந்தோம். அங்கே பலகாலம் தங்கிவிட்டு தற்போது அக்கல்கோட் வந்துள்ளோம் என்று மிகவும் அன்பாகவும் பொறுமையாகவும் தான் வந்த விதத்தைக் கூறியருளினார்.

ஸ்ரீ நிருசிம்ம சரஸ்வதி சுவாமிகள் கானகாப்பூரிலிருந்து தன் அவதார காலம் முடிந்தவுடன் தம் பாதுகைகளைப் பக்தர்கள் வணங்குவதற்காக விட்டு விட்டு, கர்தலீவனத்துக்குச் செல்வதாக அருளி மறைந்தார்.

அடுத்த அவதாரமான ஸ்ரீ சுவாமி சமர்த்தரும் தாம் கர்தலீ வனத்திலிருந்து வருவதாக கூறி தாமே நிருசிம்ம சரஸ்வதி என்றும் தற்போது, சமர்த்தராக அவதாரம் எடுத்துள்ளதையும் தம் திருவாய் மொழியிலேயே கூறியது இங்கே கவனிக்கத் தக்கது.

கானகாபூரிலிருந்து வந்திருந்த பூஜாரியிடம் சுவாமிகள் "உமது கடவுளின் பெயர் என்ன? என்று வினவ, அவரும் "ஸ்ரீ நிருசிம்ம சரஸ்வதி" என்று கூறினார். அதைக் கேட்டவுடன் சுவாமியும் "எனது பெயரும் நிருசிங்கபான் (**Nirisinga Bhan**)" என்று கூறியருளினார்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 2. விஷ்ணுபுவா பிரம்மச்சாரியின் கர்வத்தை அடக்குதல்

அக்கல்கோட் மன்னர் ஸ்ரீ மாலோஜிராஜேவுக்கு வேதாந்தம் மற்றும் புராணங்களைக் கேட்பதில் மிக்க ஆர்வம் இருந்தது. அதற்காகத் தம் அரசவையில் திரு. ராம்பாவு சிஞ்சணிகர், கோபால் சாஸ்திரி ஹர்ளீகர் போன்ற பண்டிதர்களை நிறையச் சம்பளம் கொடுத்து வேலைக்கு அமர்த்தியிருந்தார். ஞானேஷ்வரி (பகவக்கீதைக்கு ஸ்ரீ ஞானேஷ்வர் மஹராஜ் அருளிய கவிதை வடிவிலான அற்புதமான விளக்கம்), அம்ருதானுபவம் போன்ற நூல்களைப் பற்றித் தினமும் சுவையான விவாதங்களும் நடைபெற்றுக் கொண்டிருக்கும்.

இப்படி இருக்கையில் மன்னருக்கு மும்பையில் மிகவும் பிரபலமாக விளங்கிய திரு. விஷ்ணுபுவா பிரம்மச்சாரி என்ற வேதாந்தியின் மூலம் நிறைய விஷயங்களைத் தெரிந்து கொள்ளவும் அவா ஏற்பட்டது. அக்கால கட்டத்தில் மதப்பிரச்சாரம் செய்ய வந்த பாதிரியார்களை வாதத்தில் வென்ற விஷ்ணுபுவாவின் புகழ் மேலோங்கியிருந்தது. எனவே, மன்னர் மிகவும் முயற்சி செய்து விஷ்ணுபுவாவை அக்கல்கோட் வரவழைத்தார். அவருடன் மூன்று பார்ஸி மக்களும் கூட வந்தனர். அரண்மனையில் சிலகாலம் தங்கியிருந்து, வேத சாஸ்திரங்களைப் பற்றி நிறைய பிரசங்கம் செய்த விஷ்ணுபுவா ஸ்ரீ சுவாமி சமர்த்த மஹாராஜைத் தரிசித்துத் தமது புலமையை வெளிப்படுத்த நினைத்து சுவாமிகளிடம் சென்றார்.

ஸ்ரீ சமர்த்தரை வணங்கிவிட்டு தமது பிரசாரத்தை தொடங்கி வெகுநேரம் வரை பேசிக் கொண்டிருந்த விஷ்ணுபுவா கடைசியில் சுவாமியை பார்த்து “பிரம்மத்ததாகாரதா” என்றால் என்ன? எந்த சாதனைகள் மூலம் அதைச் செய்யலாம்? என்று வினவினார்.

நெடுநேரம் பொறுமையாக அவரது பேச்சைக் கேட்டுக் கொண்டிருந்த சுவாமிகள் அந்தக் கேள்விக்குப் பதிலேதும் கூறாமல் மௌனமாக இருந்ததைக் கண்டு விஷ்ணுபுவா



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஸ்ரீ சமர்த்தரை மிகவும் அற்பமாக நினைத்து அவருக்கு ஒன்றும் புரியாது, மக்கள்தாம் அவரைத் தவறாக ஞானியாக வழிபடு கிறார்கள் என்றும் தமது கேள்விக்குப் பதில் சொல்ல முடியாததால் தாமே மஹா பண்டிதர் என்று கர்வத்துடன் தமது அறைக்குத் திரும்பச் சென்றார்.

அன்று இரவு விஷ்ணுபுவாவின் கனவில் ஆயிரக்கணக்கான தேள்கள் அவர்மீது விழுந்தது போலவும் அதில் ஒன்று அவரைக்கடித்து விட்டதாகவும் நினைத்துக் காப்பாற்று! காப்பாற்று! என்று அலறியடித்துக் கொண்டு படுக்கையை விட்டு எழுந்தார். அருகில் படுத்துக் கொண்டிருந்த பார்ஸி சீடர்களும் பதைபதைத்து எழுந்து அது வெறும் கனவே என்று அவரை சமாதானப்படுத்தினர்.

மறுநாள் மீண்டும் விஷ்ணுபுவா ஸ்ரீ சமர்த்தரின் சன்னதியில் பக்தர்கள் குழுமியிருக்க தமது வேதாந்த சொற்பொழிவை தொடங்கி முந்தையதினம் கேட்ட அதே கேள்வியை மீண்டும் கேட்கவும் மிகவும் கோபமடைந்தவராக ஸ்ரீ சுவாமி சமர்த்தர் அவரைப் பார்த்து, "கனவில் ஆயிரக்கணக்கான தேள்கள் உடம்பில் விழுந்து அதில் ஒன்று உன்னையும் கடித்தவுடன் பயந்து போய் அறிவீனர்களைப் போல அலறியடித்து எழுந்த உனக்கு பிரம்மத்ததாகாரதாவைப் பற்றிப்பேச என்ன அருகதை உள்ளது? வெறும் ஏட்டுக்கல்வியால் யாராவது யோகியாக முடியுமா? படித்த முட்டாளாகிய நீ புத்தகப்புழுவாக வேதாந்தத்தைத் தெருத்தெருவாகச் சென்று கூவுவதால் பண்டிதனாக முடியுமா? எழுந்து போ இங்கேயிருந்து!" என்று பண்டிதரை விரட்டியடித்தார்.

விஷ்ணுபுவா ஸ்ரீ சுவாமி சமர்த்த மஹராஜின் எல்லாமறியும் தன்மையையும் அவர் எங்கும் நிறைந்த பரம் பொருளின் அவதாரமே என்பதையும் உணர்ந்து தமது தவற்றை மன்னிக்குமாறு வணங்கிவிட்டு மும்பைக்குத் திரும்பினார்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



## 3. ஏழைப் பிராம்மணரின் பசு

மங்கள்வேடாவில் ஸ்ரீ சுவாமிகள் ஒரு ஏழைப் பிராம்மணரின் வீட்டிற்குச் சென்று தனக்குப் பால் பாயாசம் வேண்டும் என்று கேட்டார். அதற்கு அந்த பிராம்மணரும் தனது வீட்டின் வாசலில் பசுதான் உள்ளதே தவிர அது பால் கொடுத்துப் பல மாதங்களாகின்றன என்று வருத்தத்துடன் தெரிவித்துத் தனது இயலாமையை மன்னிக்குமாறு வேண்டினார். அதைக்கேட்ட சமர்த்தர் அந்த பசுவிடம் சென்று அதன் முதுகைத் தடவிக் கொடுத்தபடியே, "அம்மா, இந்த பிராம்மணன் நல்லவன், குடும்பஸ்தனும் கூட. இவனுக்குப் பால்கொடு", என்று கூறிவிட்டுப் பிராம்மணரிடம் திரும்பி, "நான் மாலையில் மீண்டும் வருவேன். இந்த பசுவின் பாலைக்கறந்து பால் பாயாசம் செய்து வை" என்று சொல்லிவிட்டுச் சென்றார். பிராம்மணரும் நம்பிக்கையுடன் பால் கறக்க, அவ்வளவு நாட்கள் பாலே தராமல் இருந்த அந்தப்பசு சுவாமிகளின் ஸ்பரிச ஆசீர்வாதத்தாலும் அன்பான வேண்டுதலின்படியும் பாலை அருவிப்போல சுரந்தது. சுவாமிகளின் அபார கருணையைப் போற்றிப் பிராம்மணரும் மாலையில் சுவாமிக்குப் பால் பாயாசம் அளித்து மகிழ்ந்தார்.

குருகடாட்சம் பரிபூரணம்

## 4. பஸப்பா தேலீயின் பாக்கியம்

கி.பி.1844 வாக்கில் ஸ்ரீ சமர்த்தர் மங்கள்வேடாவில் இருந்தபோது நிகழ்த்திய அற்புத சம்பவம் இது. அப்போது சுவாமிகள் தம்மை அவ்வளவாக வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. மிகச்சிலருக்கே அவர் மகாபுருஷர் என்பதை உணர்த்தினார். பிறருக்கு அவர் ஒரு காட்டுவாசி போலவே தோற்றமளித்தார். எப்போதும் காட்டுக்குள்ளேயே இருந்தார். அவர் எங்கே, எப்போது, என்ன உண்கிறார் என்பது யாருக்கும் தெரியாது. மங்கள்வேடா ஊருக்குள் வந்தாலும் யாரிடமும் எதுவும் கேட்பதில்லை. தானாக யாராவது அன்பாக உணவளித்தால் ஏற்றுக் கொள்வார். அவரை "திகம்பர் புவா" என்று பெயரிட்டு மக்கள் அழைத்தனர்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஒரு சமயம் சமர்த்தர் காட்டில் வெற்றுடம்பில் கௌபீனம் மட்டுமே அணிந்து முள் படுக்கையில் ஆனந்தமாக சயனித்திருப்பதை பார்த்த பஸப்பா தேலீ என்ற ஏழைக்கு சுவாமிகள் மீது அதிகமான மரியாதையும் பக்தியும் ஏற்பட்டது. அன்றிலிருந்து தினமும் சுவாமிகள் எங்கிருந்தாலும் தேடிச் சென்று தரிசிப்பதைத் தனது வழக்கமாகக் கொண்டிருந்தார்.

மிகவும் தரித்திரனான பஸப்பாவின் மனைவிக்கு சுவாமிகளை அவர் தினமும் சென்று பார்ப்பது பிடிக்கவில்லை. அதனால் என்ன பலன்? என்று பஸப்பாவைக் கடிந்து கொள்வார். ஆனால் பஸப்பாவின் பக்தி நாளுக்கு நாள் அதிகமானதே தவிர குறையவில்லை. இவ்வாறாகப் பல ஆண்டுகள் கழிந்தன.

சுவாமி மஹாராஜுக்கு பஸப்பாவின் மீது கருணை வந்தது. அவருடைய ஏழ்மையைப் போக்க திருவுளம் கொண்டார். ஒரு நாள் மாலை நான்கு மணியளவில் பஸப்பாவை உடன் அழைத்துக் கொண்டு அருகேயிருந்த காடவன் என்ற அடர்ந்த காட்டுக்குள் சுவாமிகள் வேகமாக நடக்க ஆரம்பித்தார். சுவாமிகளைப் பின் தொடர்ந்து பஸப்பாவும் ஓடிக்கொண்டே இருந்தார். சூரியன் மறையும் வேளை எங்கும் இருள்பரவ ஆரம்பித்தது. அப்போது திடீரென்று அங்கே ஆயிரக்கணக்கான பாம்புகள் நெளிந்ததைப் பார்த்ததும் பயந்து போய் பஸப்பா சமர்த்தரிடம் தஞ்சம் புகுந்தார்.

சுவாமிகள் பஸப்பாவைப் பார்த்து "பயப்படாதே! உனக்கு வேண்டிய அளவு இந்தப் பாம்புகளை எடுத்துக் கொண்டு போ", என்று அபயமளித்தார். சுவாமிகளின்பால் இருந்த அசைக்க முடியாத பக்தியால் பஸப்பாவும் தன்மேல் இருந்த துணியால் ஒரு பாம்பின் மீது போர்த்தி மடக்கி தனது கக்கத்தில் (கை அக்குளில்) வைத்துக் கொண்டார். அது சுமார் இரண்டரை அடிநீள பாம்பு. பஸப்பா எடுத்துக் கொண்டவுடன் மீதமிருந்த பாம்புகள் அனைத்தும் மாயமாக மறைந்துவிட்டன. என்னே சுவாமிகளின் கருணை!

பிறகு காட்டிலிருந்து சுவாமிகளும் பஸப்பாவுடன் ஊருக்குத் திரும்ப வந்து ஒரு தோட்டத்தில் அமர்ந்து கொண்டார். பிறகு பஸப்பாவுக்கு விடை கொடுத்து அனுப்பும்போது "பஸப்பா! உன்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அக்குளில் செல்வம் இருக்கிறது. உன் மனைவி குழந்தைகளுடன் ஆனந்தமாய் வாழ்க!" என்று அருளினார்.

வெகு நேரமாக கணவன் வீடு திரும்பாததை நினைத்து மிகவும் கவலையுடன் பஸப்பாவின் மனைவி வாசலிலேயே காத்திருந்தார். பஸப்பாவைக் கண்டதும் மனைவி மகிழ்ச்சியடைந்தார். சமர்த்த சுவாமிகளுடன் சென்று வந்த அனுபவத்தைச் சொல்லிவிட்டுத் தனது அக்குளில் கொண்டு வந்திருந்த பாம்பை மனைவியிடம் காட்டத் துணியை விரித்த போது, என்ன ஆச்சரியம்! அவரது கண்களையே நம்ப முடியவில்லை. ஆம்! பாம்புக்குப் பதிலாக அங்கே தங்க உருளைகள் நீளமாக பளபளவென்று ஜொலித்துக் கொண்டிருந்தன. அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. மறுநாள் விடிந்ததும் பஸப்பா தேலீ தம்பதியர் சுவாமிகளைத் தேடிச் சென்று நன்றி கூறி ஆரத்தி செய்து அனைவருக்கும் இனிப்புகள் வழங்கிச் சந்தோஷப்பட்டனர்.

சுவாமிகள் அக்கல்கோட் வந்து நிரந்தரமாகத் தங்கிய பிறகு இந்த பஸப்பா தேலீ வருடா வருடம் யாத்திரையாக வந்து சுவாமிகளைத் தரிசித்து ஆசிபெறும் வழக்கமுடையவராக இருந்தார். தம் வாழ்நாள் முழுவதும் செல்வந்தராகவே வாழும் பாக்கியம் சமர்த்தருடைய அருளால் அவருக்குக் கிட்டியது.

இந்த நிகழ்ச்சியை உன்னிப்பாகக் கவனிக்கும்போது சுவாமிகள் பஸப்பாவிற்கு வைத்த பரீட்சை புரியும். தங்கப்பாளங்களாகவே காட்டி உனக்கு எத்தனை வேண்டுமோ, அள்ளிச்செல் என்று கூறியிருந்தால் தன்னால் சுமக்க முடியாத அளவு, ஏன் வண்டி வைத்துக் கூட எடுத்துச் சென்றிருக்கலாம்.

ஆனால் சுவாமிகளோ, பாம்புகளைக் காட்டி அள்ளிச்செல் என்றதால் எவ்வளவு நம்பிக்கை உள்ளதோ அவ்வளவு தங்கம் மட்டும் கிடைத்தது. ஒரு வேளை அந்த பாம்புகளெல்லாம் தங்கமாக மாறும் என்று பஸப்பாவிற்கு தெரிந்திருந்தால் பயம் போய் பேராசையே வந்திருக்கும். ஆக சுவாமிகள் பஸப்பாவின் நம்பிக்கைக்கு ஒரு சோதனையும் செய்து அருளிய விதம் நம்மால் என்றும் மறக்க முடியாத அனுபவமே.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 5. முதியவருக்குப் புத்திரபாக்கியம்

மங்கள்வேடாவில் 60வயது நிரம்பிய ஒரு பெரியவருக்கும் அவரது மனைவிக்கும் (52வயது) தமக்குக் குழந்தையில்லை என்ற பெரிய குறை வாட்டியது. ஒரு நாள் அந்த அம்மையார் பஸப்பா தேலீயை சந்தித்துத் தமது குறையை அவரிடம் சொன்னார். தேலீயும் அம்மணியிடம் பிரத்தியட்ச தெய்வமான சுவாமி சமர்த்தர் தமக்குச் செய்த அருளைக் கூறி, அவர்களுடைய குறை தீரவும் சுவாமிகள் அவசியம் உதவுவார் என்று கூறி அதற்கு ஒரு வழியும் கூறினார்.

தினமும் சுவாமி சமர்த்தரைத் தரிசிக்காமல் உணவு உண்பதில்லை என்ற சங்கல்பத்தை எடுத்துக் கொள்ளுமாறு அந்த அம்மணியிடம் பஸப்பா தேலீ சொன்னார். அவ்வாறே மிகவும் பக்தி சிரத்தையுடன் சுவாமிகள் எங்கேயிருந்தாலும் தேடிச்சென்று தரிசித்த பிறகே உணவு உண்ணும் பழக்கத்தை அம்மணி கொண்டிருந்தார்.

அவ்வாறு இரண்டு ஆண்டுகள் தொடர்ந்து சுவாமியைப் பக்தி செய்த அம்மணி மீது குருநாதருக்குக் கருணை பிறந்தது. ஒருநாள் சுவாமியைத் தரிசிக்க வந்த அம்மணியிடம், "அம்மா, எதிரே இருக்கும் அந்த மரத்தின் காம்புகளை எடுத்துச் சர்க்கரை கலந்து சாப்பிட்டாயானால் உனது குறை நீங்கும்" என்று அருளினார்.

அப்படியே செய்த அந்த அம்மணியும் கருத்தரித்து ஒரு வருடத்தில் அழகான ஆண் குழந்தையை ஈன்றெடுத்தாள். அதனைச் சுவாமிகளின் பாதங்களில் வைத்து ஆசி பெற்று அந்த தம்பதியினர் மகிழ்ச்சியுடன் சென்றனர்.

சமர்த்தர் என்றால் எதையும் சாதிக்க வல்லவர் என்பதை இந்த முதிய தம்பதியருக்கு குழந்தை பாக்கியம் அளித்த கருணையினாலும் நாம் அறிவோம்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 6. பாபாஜி பட்டின் கிணறு

குருநாதர் மங்கள்வேடாவில் வாசம் செய்தபோது பாபாஜி பட் என்ற ஒரு அந்தணரின் வீட்டில் சில நேரங்களில் 15 நாட்கள் முதல் ஒரு மாதம் வரை சென்று தங்குவார். அவ்வாறு ஒரு தடவை சுவாமிகள் அவரது வீட்டிற்குச் சென்றபோது அந்தணர் வெளியே போயிருந்தார். அவரது மனைவியும் சுவாமிகள் மீது அளவில்லாத பக்தி கொண்டவராகையால் சுவாமிகளை வரவேற்று வீட்டினுள் அமரச் செய்தார்.

அப்போது சமர்த்தர் தனக்குக் குடிக்க நீர் வேண்டும் என கேட்டார். அம்மணியும் ஒரு நிமிடத்தில் வெளியே செல்ல ஆயத்தமானார். அதைப்பார்த்த குருநாதர், "வீட்டிலேயே கிணறு இருக்கையில் ஏன் வெளியே செல்லுகிறாய்?" என்று வினவ, அம்மணியோ, தமது வீட்டிலுள்ள கிணற்று நீர்வற்றி நெடுநாளாகிறது. ஆகவே வெளியிலிருந்து எடுத்து வந்து பயன்படுத்துவதாக பதிலளித்தார்.

ஆனால் சமர்த்தரோ, "வெளியே போகாதே! உன் கிணற்றிலேயே நிறையத் தண்ணீர் இருக்கிறது. வா, உனக்குக் காண்பிக்கிறேன்" என்று கூறி விறுவிறுவென்று கிணற்றை நோக்கி விரைந்தார். அம்மணியும் பின் தொடர்ந்து சென்று பார்த்தபோது அவரது கண்களை அவராலேயே நம்ப முடியாத அளவுக்கு (கிணற்றில்) நிறையத் தண்ணீர் இருந்ததைக் கண்டுப் பூரிப்படைந்தார். பின்பு சுவாமிகளின் ஆணைப்படி நீரை இறைத்துச் சமர்த்தருக்கு அர்ப்பணம் செய்தார். அந்த நீர் முன்பை விட மிகவும் சுவையானதாகவும் தெளிவாகவும் இருந்தது.

வெளியே சென்றிருந்த பாபாஜி பட் வீட்டிற்குத் திரும்பியவுடன் நடந்ததைக் கேட்டறிந்து சுவாமி மகாராஜின் பாதங்களில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து வணங்கித் தமது நன்றியைத் தெரிவித்தார்.

இந்த விபரங்களைப் பாபாஜி பட் பின்னாளில் பண்டரீபுரம் சென்றிருந்த போது அனைவரிடமும் கூறி மகிழ்ந்தார்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 7. தந்தூகாரின் ஏழ்மையை விரட்டுதல்

மங்கள்வேடாவில் தந்தூகார் என்ற ஏழை மிகவும் தரித்திரனாகக் கஷ்ட ஜீவனம் செய்து கொண்டிருந்தார். தெய்வானுக்ரஹத்தால் சுவாமி சமர்த்தரைத் தரிசிக்கும் பாக்கியம் அவருக்குக் கிட்டியது.

சுவாமிகளின் தேஜோமயமான ஆஜானுபாகுவான தாமிர வண்ணத்தேகத்தையும், காந்தமான முகத்தையும், நகைச்சுவையோடு பாமர மக்களுக்கும் புரியும்படி பேசும் பாங்கையும், அருள்பொழியும் கருணைமிக்க தீக்ஷண்யமான கண்களையும், உடம்பெல்லாம் தரித்திருக்கும் விஷ்ணு நாமங்களையும், ருத்ராட்ச மாலையணிந்த நீண்ட கழுத்தையும், எழுந்து நின்றால் கால் மூட்டுகளைத் தாண்டி நீளும் கைகளையும், பக்தர்களை நல்வழிப்படுத்தவே அவர்கள் இடம் தேடிச்சென்று அருள்மழைபொழியும் திருவடிகளையும் ஒருமுறை பார்த்தால் மீண்டும் காண ஆவல் எழும்.

அவ்வாறே, அந்தத் தந்தூகரும் சுவாமிகளை மூன்று மாதங்கள் தினமும் தொடர்ந்து வந்து தரிசித்துக் கொண்டிருந்தார்.

அவர்மீது கருணைகொண்ட சமர்த்தரும் ஒரு இரவில் அவரது கனவில் தோன்றி, "தந்தூகரா, உமது தந்தையார் பெரிய அரிசி வியாபாரியாக இருந்தார். அவர் ஒரு சமயம் பண்டரீபுரத்திற்கு யாத்திரை செல்வதற்கு முன்பாக உமது வீட்டின் பின்னால் உள்ள துளசி மாடத்தின் கீழே நிறையச் செல்வங்களைப் பத்திரமாக புதைத்து விட்டு யாத்திரைக்குச் சென்றார். ஆனால் அவர் பண்டரீபுரத்திலேயே மரணமடைந்தார். உமது தாயோ, அவருக்கு முன்பே காலமாகி விட்டார். எனவே, இப்போது நீ அந்த புதையலை எடுத்துக் கொண்டு ஆனந்தமாக வாழ்வாயாக", என்று கூறி மறைந்தார்.

மறுநாள் விடிந்ததும், தந்தூகர் சுவாமிகள் கூறியபடி நம்பிக்கையுடன், துளசி மாடத்தின் அடியில் தோண்டியபோது ஒரு பானையில் நிறையப் பொற்காசுகளும் நகைகளும் கிடைத்தன. அவரது ஆனந்தத்திற்கு அளவே இல்லை.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சுவாமிகளைக் காட்டில் தேடிச்சென்று அவரது பாதங்களில் தம் ஆனந்தக் கண்ணீரால் அபிஷேகம் செய்து, நன்றி கூறி, ஆசி பெற்றுத் திரும்பினார்.

இப்படிச் சுவாமிகள் நிகழ்த்திய அற்புதங்கள் கணக்கிலடங்காதவை. நம்பினவருக்கு நலமெல்லாம் அருளும் கருணைக்கடலான சுவாமி சமர்த்த மகராஜின் பாதங்களைப் பணிந்து, இகபர சுகமடைவோமாக.

குருகடாட்சம் பரிபூரணம்

## 8. மன்னரின் கர்வம் போக்குதல்

அக்கல்கோட் அரசராக இருந்த ஸ்ரீமான் மாலோஜிராஜே சுவாமிகளின் பரமபக்தர். ஒவ்வொரு வியாழக்கிழமையிலும் தவறாமல் சுவாமிகள் எங்கிருந்தாலும் தேடிச்சென்று வணங்கி ஆசிபெற்று வருவதை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

ஒரு சமயம் அவ்வாறு வரும்போது யானை அம்பாரியின் மீது ஏறி தமது பரிவாரங்களுடன் ஆணவமாகச் சுவாமிகளைத் தரிசிக்க வந்தார். யானையிலிருந்து இறங்கிச் சமர்த்தரின் பாதங்களில் தமது கிரீடத்துடன் பணிந்தார்.

மிகவும் கோபமடைந்த சுவாமிகள் மன்னரின் கிரீடத்தை எடுத்து வீசி எறிந்தார். மிகவும் பயந்து நடுநடுங்கியவாறு கை கூப்பி எழுந்த மன்னர் சுவாமிகளிடம் மன்னிப்பு கேட்டார். அப்போது சமர்த்தர் "உன்னைப்போல பொம்மை அரசர்களை நாங்கள் தினமும் செய்கிறோம். நீ உனது ஜம்பத்தை உன் வீட்டில் காட்டு. இங்கே தேவையில்லை", என்று கடினமாகக் கூறியதும், மன்னிப்புக்கோரிய மன்னர் அமைதியாக அரண்மனைக்குத் திரும்பிவிட்டார்.

அதற்குப்பிறகு சமர்த்த மகராஜை எப்போது தரிசிக்க வந்தாலும் மன்னர் தமது பரிவாரங்களை வெகு தூரத்தில் நிறுத்திவிட்டு, மிக எளிய உடையில், பிற பக்தர்களைப் போல சாதாரணமாக நடந்து வந்து குருவருள் பெற்றுச் செல்ல ஆரம்பித்தார்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



## 9. இஸ்லாமிய பக்தரை அவுலியா ஆக்குதல்

சுவாமிகள் மங்கள்வேடாவில் இருந்தபோது ஒரு இஸ்லாமிய அன்பர் குருநாதரிடம் மிகவும் பக்தி கொண்டிருந்தார். அவர் சுவாமிகளுக்கு 'சிலும்' (புகையிலை நிரப்பிய மண் குழாய்) **(Cigar Pipe)** தயார் செய்துகொடுப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். அந்த அன்பருக்கு உறவுகள் யாரும் கிடையாது. வேலையும் கிடையாது. பசித்த போது யாரிடமாவது கேட்டு வாங்கி உண்பார். ஊரில் அங்கும் இங்கும் சுற்றித் திரிவார்.

பல நாட்கள் சேவை செய்த பிறகு மகாராஜுக்கு அவர் மேல் கருணை பிறந்தது. ஒரு தடவை தரிசனத்துக்கு அந்த பக்தர் வந்தபோது சுவாமிகள் அவரை அருகில் அழைத்து அவரது தலைமேல் கை வைத்து ஆசீர்வதித்தார். சுவாமிகளின் ஸ்பரிச ஆசீர்வாதம் கிட்டியவுடன் அந்த சாதாரண மனிதர் ஆன்மீகத்தின் மிக உன்னத நிலையடைந்தார்.

மக்கள் அவரை 'அவுலியா' (முஸ்லீம்களின் ஞானி) என்று அன்பாக அழைத்தனர். பேய், பிசாசு மற்றும் ஆவிகளின் தொல்லைகளினால் துன்பப்பட்டவர்களை அவர் குணப்படுத்தியதால் அவர் மிகவும் பிரபலமடைந்தார்.

மங்கள்வேடாவிலிருந்து அந்த அவுலியா பண்டரிபுரம் மற்றும் சதாரா ஜில்லாக்களில் பிரவேசம் செய்து தம்மை நாடி வரும் மக்களின் இன்னல்களைப் போக்கினார். அந்த அவுலியாவின் போக்கு விசித்திரமானது. தம்மை நோக்கி வருபவர்களின் மீது கற்களை வீசி எறிவார். ஆனால் அதனால் யாருக்கும் அடிபடாதவாறு வீசுவார். தவறி யார் மீதாவது கல்லடி பட்டுவிட்டால், அந்த அன்பரின் வாழ்வில் ஒளி வெள்ளம் தான்.

இவ்வாறாக சுவாமி சமர்த்தர் (பாத்திரமறிந்து) தம்மைச் சரணாகதி அடைந்தவர்களுக்கு அருள்புரிவார்.

இறைவன் மனம், வாக்கு, காயம் (உடம்பு) ஆகியவற்றால் அறியப்படாதவன். தூய அன்பால் மட்டுமே உணரப்படுபவன்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



எனவே, சுவாமிகள் யாருக்கும் உபதேசம் எதுவும் செய்வதில்லை. தமது கருணையை அன்பான பார்வையிலோ (குருகடாட்சம்) அல்லது தமது திருக்கரங்களால் தொட்டோ (ஸ்பரிசத்தாலோ) யாராலும், எந்த சாதனைகளாலும், ஆயிரக்கணக்கான ஆண்டுகள் தவமிருந்தாலும் அடைய முடியாத பரப்பிரம்ம ஞானத்தையும் அஷ்ட மகா சித்திகளையும் அளிக்க வல்லவர் (சமர்த்தர்) என்பதை இந்த முஸ்லீம் அன்பரின் அனுபவம் நமக்குத் தெளிவாக உணர்த்துகிறதல்லவா?

குருகடாட்சம் பரிபூரணம்

## 10. ராமதாஸி புவா மடம்

மங்கள்வேடாவில் சுவாமிகள் வாசம் செய்தபோது அவ்வப்போது அருகிலிருந்த பண்டரிபுரம், பேகம்பூர், சளாம்பே போன்ற ஊர்களுக்கும் சென்று வருவார். ஒரு சமயம், சளாம்பேயிலிருந்த ராமதாஸி மடத்திற்குக் குருநாதர் சென்றிருந்தார். அங்கு உணவருந்திய பின்பு சிறிது நேரம் ஓய்வெடுத்தார்.

ராமதாஸி புவாவிற்கு வெளியே ஏதோ வேலையிருந்ததால் மடத்தைப் பூட்டிவிட்டுச் சென்றுவிட்டார். மாலை வேளையிலே அந்த ஊர் மக்கள் பீமா நதிக்கரையில் சுவாமிகள் விளையாடிக் கொண்டிருப்பதாகப் பேசிக் கொண்டிருந்தனர்.

இது ராமதாஸி புவாவின் காதுகளில் எட்டியது. ஆனால் அவர் இதை நம்பவில்லை. ஏனென்றால் சுவாமிகள் தூங்கிக் கொண்டிருப்பதால் மடத்தைத் தாளிட்டுச் சாவியை தன்னிடம் வைத்திருந்தார். ஆகவே, அது வேறு சுவாமிகள் என்று நினைத்து, மடத்திற்குத் திரும்பிவந்து திறந்து பார்த்தால், என்ன ஆச்சரியம்! சுவாமிகள் அங்கே இல்லை. அந்த மடத்திற்கு வேறு வழியோ, கதவுகளோ இல்லாதபோது சுவாமிகள் எவ்வாறு வெளியே சென்றார் என்பதை நினைத்ததும் குருநாதரின் சக்தி அவருக்கு தெளிவானது. ஓடிச்சென்று பீமா நதிக்கரையில் சுவாமிகளின் பாதம் பணிந்து ஆசி பெற்று வந்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



மங்கள்வேடாவிலிருந்து சுவாமிகள் சுமார் கி.பி. 1855-56 வாக்கில் சோலாப்பூருக்குச் சென்றார். அதன் பிறகு மங்கள்வேடாவிற்குத் திரும்ப வரவேயில்லை.

குருகடாட்சம் பரிபூரணம்

# 11. ஸ்ரீ மாணிக் பிரபுவுடன் பாபா சபனீசுக்கு தரிசனம்

அவ்ரங்காபாத் என்ற ஊரில் ஸ்ரீ மாணிக்க பிரபு என்ற பெரிய மகான் இருந்தார். இவரும் ஸ்ரீ தத்தாத்திரேய அவதாரி ஆவார். ஸ்ரீ சுவாமி சமர்த்த மஹாராஜ் அவரைச் சந்திக்க ஒரு சமயம் அங்கு சென்றிருந்தபோது அக்கல் கோட்டிலிருந்து பிரபுவின் சீடர் பாபா சபனீசும் வந்திருந்தார்.

ஸ்ரீ மாணிக்கபிரபு பாபா சபனீசிடம் சைகை காட்டி ஸ்ரீ சுவாமிகளை தரிசிக்கச் சொன்னார். ஆனால் அது அவருக்கு புரியாததால் நேரிடையாகவே, "இனிமேல் இவர்தான் உனது குரு. எனவே, ஸ்ரீ சுவாமி சமர்த்தரை தரிசனம் செய்து கொள்" என்று கூறினார். அப்போது ஸ்ரீ சுவாமிகளுடன் மற்ற இரு மஹான்களும் கூட இருந்தனர். சுவாமிகள் பிரம்மா, விஷ்ணு மற்றும் சிவனுடைய (மும்மூர்த்திகளின்) அவதாரமாகையால் அம்மூவரின் தரிசனமும் அன்று அவருக்குக் கிடைத்தது.

பாபா சபனீஸ் சுவாமிகளை வணங்கியவுடன் மிகவும் கோபமாக கடுமையான வார்த்தைகளால் பாபாவை ஏசினார். பிறகு பாபாவிடம், "இங்கே ஏன் வந்தாய்?" என்றும் கேட்டார்.

அவரது கோபத்தின் காரணத்தைப் பாபா புரிந்து கொண்டார். ஏனென்றால், உடல் நலமில்லாத அவரது தாயார் எவ்வளவு வற்புறுத்தியும் கேளாமல், சிறிதும் இரக்கமின்றி அவரைத் தனியாக அக்கல்கோட்டில் விட்டு விட்டு மாணிக்கப் பிரபுவின் தரிசனத்திற்கு அவர் வந்ததே அதற்கு காரணம். சமர்த்தரின் எல்லாமறியும் தன்மையை உணர்ந்து கொண்ட பாபா சபனீஸ் சுவாமிகளை வணங்கியபடியே நின்றிருந்தார். கோபம் தணிந்து சாந்தமான சமர்த்தர், பாபாவிடம், "நீ



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அக்கல்கோட்டிற்கு போ! நாங்களும் அங்கே வருவோம்" என்று ஆசீர்வதித்து அனுப்பினார்.

பின்னாளில் குருநாதர் அக்கல்கோட்டிற்கு வந்தவுடன் மாணிக்கப்பிரபுவின் சன்னதியில் தரிசித்த சுவாமிகள் அவரே என்று அடையாளம் கண்டு கொண்ட வேதவித்தகரான பாபா சபனீஸ் சமர்த்தரின் பரமபக்தராகத் திகழ்ந்தார்.

குருகடாட்சம் பரிபூரணம்

## 12. கவே சுவாமிக்கு தரிசனம்

மங்கள்வேடாவிலிருந்து புறப்பட்ட சுவாமிகள் பண்டரீபுரத்திற்கு வந்தார். அங்கிருந்து "மோஹோள்" என்ற ஊருக்குச் செல்லும் வழியில் பீமா நதி குறுக்கிட்டது. அதில் பெரும் வெள்ளம் ஓடிக்கொண்டிருந்ததால் படகுச் சவாரி நிறுத்தப்பட்டிருந்தது. ஆனால் சர்வ வல்லவரான சுவாமி சமர்த்தரை எந்த வெள்ளம் தான் தடுத்து நிறுத்த முடியும்? சுவாமிகள் விறுவிறு வென்று நதியில் இறங்கி நடந்ததும் கரைபுரண்டு ஓடிக்கொண்டிருந்த பீமா நதி தன் வெள்ளத்தைக் கட்டுப்படுத்திச் சுவாமிகளின் கால் மூட்டிற்குக் கீழே வடிந்து அமைதியாக வழிவிட்டது. சுவாமிகள் அக்கரையை அடைந்தவுடன் தன் வெள்ளத்தை மீண்டும் வெளிப்படுத்தி ஓட ஆரம்பித்தது. அங்கே குழுமியிருந்த மக்கள் அதிசயித்து சுவாமிகளைப் பயபக்தியுடன் வணங்கினர்.

அப்போது மோஹோளை நிர்வகித்து கொண்டிருந்த கணேஷ் ஹரி ஸோஹ்னி என்பவரின் இல்லத்தில் குருநாதர் தங்கியிருந்தார்.

அந்த ஊரில் சுமார் 125 வயது மதிக்கத்தக்க சுவாமி என்கிற லிங்காயத சம்பிரதாய யோகி ஒருவர் ஒரு தனியறையில் பல காலமாகக் கடுந்தவம் மேற்கொண்டிருந்தார். அவர் தரையிலிருந்து இரண்டு அடி உயரத்திற்கு மேலே அந்தரத்தில் அமர்ந்து தவம் செய்வதை வழக்கமாகக் கொண்டிருந்தார். சமர்த்த சுவாமிகள் அவரைச் சந்தித்து பேசியபிறகு தமது கடுந்தவத்தைக் கலைத்துச் சாதாரணமாக சகஜ நிலையில் சில



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



காலம் வாழ்ந்து பிறகு சமாதியடைந்தார். சுவாமிகள் அவருக்கு அவரது தவத்தின் பலனை அளித்ததே அதற்கு காரணம் என்பதை சொல்லவும் வேண்டுமா?

மோஹோளில் குருநாதர் இருந்தபோது ஒரு கோஷ்டி இனத்தைச் சேர்ந்த அன்பர் தமக்கு "பிரம்மத்தை காட்டுங்கள்" என்று சுவாமிகளை விடாது நச்சரித்துக் கொண்டேயிருந்தார். எவ்வளவு சொல்லியும் கேளாமல் சுவாமிகளைப் பின் தொடர்ந்து வற்புறுத்தினார். ஒரு நாள் அந்த ஊரிலுள்ள நாகநாதர் கோயிலில் சுவாமிகள் இருந்தபோது அந்த அன்பரும் வந்திருந்தார். சமர்த்தர் அவரைப் பார்த்து "பிரம்மத்தைப்பார்" என்று கூறிய திசையில் அவர் பார்த்தபோது ஆயிரக்கணக்கான பாம்புகள் அவரை சுற்றி வந்தன. இதைக்கண்டதும் பயத்தில் அவருக்குச் சுயநினைவே போய் விட்டது. பிறகு நெடுநாட்கள் அவர் பைத்தியத்தைப் போன்று ஊரில் சுற்றித் திரிந்துக் கொண்டிருந்தார். அவர்மீது கருணைகொண்ட கவே சுவாமிகள் குருநாதரிடம் கேட்டுக் கொண்டதன் பேரில், சுவாமி மஹராஜ் அந்த அன்பரைச் சகஜ நிலைக்கு மாற்றியருளினார்.

நமக்கு இதிலிருந்து கிடைக்கும் பாடம் என்னவென்றால் தகுதிக்கு மேல் ஆசைப்படக் கூடாது என்பது தான்.

பிரம்மத்தை அறியப் படிப்படியாக நம்மைத் தயார் செய்து கொள்ள வேண்டும். தூய்மையான பக்தியின் மூலம் குருகடாட்சத்தைப் பெற முயற்சி செய்தால் பலன் கிடைக்கும் என்பதே நாம் இங்கே அறியக்கூடியது.

குருகடாட்சம் பரிபூரணம்

## 13. இரட்டைத்தலை பீமாராவ்

பீமாராவ் என்ற பக்தர் தினமும் நந்தவனத்திலிருந்து கூடை நிறைய மலர்களைப்பறித்து வந்து சமர்த்தருக்கு அர்ப்பணிக்கும் வழக்கம் உடையவர். அவரது மகனும் அவருடன் சேவை செய்து வந்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



பீமாராவின் தோற்றம் சற்று வித்தியாசமானதாக இருந்தது. ஏனெனில் அவரது தலையில் பெரிய கட்டி ஒன்று பிறவிலேயே இருந்ததால் அவரை அனைவரும் "இரட்டைத்தலையா" என்று கேலியாகப் பேசி மகிழ்ந்தனர். இதனால் அவர் தன் குறையை நினைத்து மிகவும் வேதனையுடன் இருந்தார்.

ஒரு நாள் அவரும் அவரது மகனும் சுவாமிகளுக்கு மலர்களைக் கொய்து வரும் போது, மற்றவர்களுடன் சேர்ந்து கொண்டு சமர்த்தரும், "இதோ இரட்டைத் தலையன் வருகிறான் பார்" என்று கேலி செய்து கலகலவென்று வயிறு குலுங்கச் சிரித்தார். இதைக் கண்ட பீமாராவ் துக்கம் தாங்க முடியாமல், சுவாமிகளிடம் சென்று "குருநாதா! நீங்களும் பிறரைப் போலவே என் ஊனத்தைக் கேலி செய்வது நெஞ்சு பொறுக்கவில்லை. எனக்கு உள்ள இந்த குறையை உங்களைத் தவிர யாரால் போக்க முடியும். எனக்கு அருள வேண்டும்" என்று பாதம் பணிந்தார். ஆனால் அப்போது சுவாமி எதையும் கூறாமல் மௌனமாக இருந்தார்.

அன்று இரவு பீமாராவின் கனவில் வந்த ஸ்ரீகள் அவரது தலையில் (கட்டியில்) கை வைத்து தடவி ஆசீர்வதித்து மறைந்தார். விடிந்தவுடன் பீமாராவ் தன் தலையில் தடவிப் பார்த்தபோது அவரது வாழ்க்கையின் பெரும் சுமையாகவும் பிறரது கேலிப் பேச்சுக்குக் காரணமாகவும் இருந்த இரண்டாவது தலை காணாமல் போயிருந்தது. அதை அகற்றியதனால் ஏற்பட்ட காயம் மட்டும் இருந்தது.

பக்தவத்சலனான சுவாமி மஹாராஜின் இந்த அற்புத லீலையைக் கண்டு ஆனந்தமடைந்த பீமாராவ் சுவாமிகளிடம் ஓடோடிச் சென்று அவரது பாதங்களில் விழுந்து ஆசி பெற்றார். காயத்திற்கு என்ன மருந்து என்று கேட்க தீனதயாளனான சமர்த்தரும் "விபூதியை தீர்த்தத்தில் கலந்து தடவு" என்று ஆசி கூறினார். சில நாட்களில் அவரது காயம் முற்றிலும் குணமானது.

இரட்டைத்தலையன் சுவாமிகளின் அருளால் ஒற்றைத்தலையன் ஆகித் தன் மகனுடன் சிந்தாபூர் என்ற தன் ஊருக்குச் சென்று சுவாமி பக்தியுடன் வாழ்ந்து வரலானார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தற்போதுள்ள மருத்துவ வசதிகளினால் இப்படிப்பட்ட அறுவை சிகிச்சையை மிக சாதாரணமாக எண்ணிவிடலாம். ஆனால் 150 வருடங்களுக்கு முன்னால் கனவில், அதுவும் எந்த ஆயுதமில்லாமல், வெறுமனே தன் ஸ்பரிசத்தால் மட்டும் சுவாமிகள் அன்று நடத்திய அந்த அருட் சிகிச்சை அதிசயங்களில் ஒன்றாகக் கருதப்பட்டது. இது சுவாமிகளின் அவதார மகிமையே. இதைக் கண்ணுற்ற அக்கல்கோட்டிலிருந்த ஆயிரக்கணக்கான பக்தர்களும் கேள்விப்பட்ட பிறருக்கும் சுவாமிகள் மீதும், தெய்வத்தின் மீதும் பெரும் நம்பிக்கை ஏற்பட்டு ஆன்மீகம் தழைத்தோங்கக் காரணமாகயிருந்தது என்றால் அது மிகையாகாது. ஜெய் சுவாமி சமர்த்த!

குருகடாட்சம் பரிபூரணம்

# 14. சுவாமிகளின் உறக்கம்

ஒரு சமயம் சுவாமிகள் கணபதிராவ் என்ற பக்தரின் இல்லத்திற்கு மாலை வேளையில் சென்றார். அவருடன் அவருடைய ஆத்மபக்தரான சோளப்பாவும் கோவிந்தராவ் டோளும் சென்றனர். இரவில் சுவாமிகள் உறங்கியவுடன் கோவிந்தராவிடம் சுவாமிகளைப் பார்த்துக் கொள்ளுமாறு கூறிவிட்டு சோளப்பா தமது வீட்டிற்கு சென்றுவிட்டார்.

பலமான குறட்டைச் சத்தத்துடன் சுவாமிகள் தூங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்த கோவிந்தாவின் மனதில் பகவத் கீதையின் வாசகங்கள் ஞாபகத்திற்கு வந்தன.

"யா நிஷா பூதானாம் தஸ்யாம் ஜாக்ரதி ஸம்யமி!

யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிஷா பஷ்யதோ முனே!!"

அதாவது, யோகிகள் எப்பொழுதும் விழிப்புடன் இருப்பர் என்பதே இந்த ஸ்லோகத்தின் பொருள். சமர்த்தர் யோகி என்றால் இப்படிச் சாதாரண மனிதர்களைப் போல குறட்டை விட்டுத் தூங்கு வாரா? என்ற சந்தேகம் அவரை ஆட்டிப்படைத்துக் கொண்டிருந்த அதே வேளையில் ஸ்ரீகள், "என்ன தூங்குகிறேனா? இல்லை,



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இல்லை" என்று கூறிவிட்டு மீண்டும் குறட்டை விடலானார். இந்த அதிசயத்தைக் கண்ணுற்ற கோவிந்தராவுக்குச் சுவாமிகள் மீது எழுந்த சந்தேகம் அறவே நீங்கியது. ஸ்ரீகள் தூங்குவது போலப் பாசாங்கு செய்வது புரிந்தது. பக்தவத்சலனான ஸ்ரீ சுவாமிகளுக்கு தமது எண்ணற்ற பக்தர்களைக் காக்கும் பொறுப்பு இருப்பதாலும் அவர் பசி, பிணி, தூக்கம், இன்பம், துன்பம் அனைத்தையும் கடந்தவர் என்பதாலும் அன்றும், இன்றும் தம்மை அண்டியவருக்குத் தாய்போலக் கருணை மழையைப் பொழிந்து கொண்டேயிருக்கிறார்.

குருகடாட்சம் பரிபூரணம்

# 15. ஸ்ரீ சமர்த்தரின் மெத்தை

பாபா சபனீஸ் என்ற பரமபக்தருடன் ஒரு பண்டிதர் (புராணிக் புவா) அக்கல்கோட்டிற்கு வந்தார். அவ்வமயம் ஸ்ரீகள் மெத்தையில் உறங்கிக் கொண்டிருந்தார். பாபாவிடம் பண்டிதர், "சன்யாசிகளுக்குக் கட்டிலும் மெத்தையும் தேவையா?" என்று வினவினார். அப்போது சமர்த்தர் ஒன்றும் பதிலளிக்கவில்லை.

சுமார் ஒரு மாதம் கழித்து ஒரு நாள் ஸ்ரீகள் பக்கத்து ஊரான கடப்பைக்குச் சென்றார். அந்த பண்டிதரும் உடன் சென்றார். மாலை வேளையில் அந்த ஊரின் அருகில் இருந்த ஒரு மலையின் மீது சுவாமிகள் ஏறத் தொடங்கினார். சிறிது தயங்கிய பண்டிதர் சுவாமிகளிடமிருந்து விடைபெற அணுகிய போது, "இரு, இரு" என்று கூறி சுவாமிகள் விறுவிறுவென்று மலை மீது ஏறத்தொடங்கினார்.

சிறிது சிறிதாக இருட்ட ஆரம்பித்தது. அது ஒரு பனிக்காலமாகையால் குளிரும் வாட்டியது. குடிக்க நீரோ, பசிக்கு உணவோ இல்லாமல் மலையேறிய பண்டிதர் மிகவும் களைப்புற்றார். அந்த பனியில் மலைமீது கும்மிருட்டிலும் பனியிலும் சுவாமி சமர்த்தர் ஒரு பாறையின் மீது வெற்றுடம்பில் (கௌபீனம் மட்டும் அணிவார்) மல்லாக்கப் படுத்துக் கொண்டு, பண்டிதரை நோக்கி, "எப்படி என் மெத்தை"? என்று வினவினார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அப்போதுதான் பண்டிதருக்கு தாம் சுவாமிக்கு மெத்தை எதற்கு? என்று கேட்டதற்குப் பாடம் புகட்டவே இந்த லீலையைச் சுவாமிகள் செய்தது புரிந்தது.

தம் தவற்றை உணர்ந்த பண்டிதர் சமர்த்தரின் பாதங்களில் விழுந்து மன்னிப்புக் கேட்டார். சுவாமிகளுக்குப் பாறையும் மெத்தையும் ஒன்று தான். பக்தர்களின் விருப்பத் திற்க்கு இணங்கவே அவர்கள் அளிக்கும் மரியாதையையும் பொருட்களையும் அவர்களது திருப்திக்காகவே உபயோகிப்-பதையும் உணர்ந்து மனதார சுவாமிகளிடம் தன்னை மன்னித்து அருளுமாறு வேண்டினார். பின்னாளில் அந்தப் பண்டிதர் சுவாமிகளின் பரம பக்தரானார் என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

குருகடாட்சம் பரிபூரணம்

## 16. ராமகிருஷ்ணராவ் சர்தேஸாயி

ராமகிருஷ்ணராவ் மும்பையில் ரயில்வே துறையில் கணக்கராகப் பணியாற்றி வந்தார். சுவாமி மஹாராஜின் பெருமைகளை அவரது அத்யந்த பக்தரான சுவாமிஸுதன் மூலமாக அறிந்து கொண்டு அக்கல்கோட் வந்து தரிசித்தார். பிறகு காசநோயால் மிகவும் நோய் வாய்ப்பட்டிருந்த தனது மனைவி அன்னபூர்ணா பாயியை அழைத்துக்கொண்டு மீண்டும் ஒரு தடவை அக்கல்கோட் வந்து சேவை செய்தார். பின்பு ஒரு நாள் சுந்தராபாயி (சுவாமிகளின் சேவகர்) அம்மையார் மூலம் தங்களுக்குப் புத்திர பாக்கியம் அருளுமாறு குருநாதரிடம் வேண்ட ஸ்ரீ சுவாமிகளும், “இலந்த மரத்தைச் சுற்றினால் அக்னி போலப் பிள்ளை பிறப்பான்” என்று ஆசியருளினார்.

மும்பைக்குத் திரும்பிய தம்பதியருக்குச் சமர்த்தரின் வார்த்தைகளின் அர்த்தம் புரியவில்லை. எனினும் அவர்மீது உள்ள அபாரமான நம்பிக்கையால் அவரது வாக்குப் பலிக்கும் என்று கருதினர். இலந்த மரத்தைப் போய் சுற்றி வந்தால் மக்கள் கேலி பண்ணுவார்களே! என்று கூச்சப்பட்டு, அரச மரத்தைச்சுற்ற



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



முடிவெடுத்து ஓராண்டு சுற்றியும் பலனில்லை. கவலை மிகுதியான வேளையில், சுவாமிசுதன் அமைத்திருந்த சமர்த்தரின் பாதுகா மடத்திற்கு சென்றபோது பிரம்மானந்தா என்ற சாதுவிடம் விபரத்தைக் கூறினார். சுவாமிசுதனையே சமர்த்த மஹராஜ், "இலந்த மரம்" என்று குறிப்பிட்டதாக பிரம்மானந்தா விளக்கி, அங்கேயே சேவை செய்து வருமாறு அறிவுறுத்தினார்.

சில நாட்களிலேயே அன்னபூர்ணா பாயி கர்ப்பவதி ஆனாள். ஐந்தாவது மாதத்தில் தனது தாய் வீட்டிற்குப் பிரசவத்திற்காக சென்றபிறகு ராமகிருஷ்ணராவ் மிகவும் கவலையுடன் இருந்தார். காசநோயாளியான மனைவி உடல் பலவீனத்துடன் இருந்ததால், பிரசவம் நல்லபடியாக நடக்குமா என்று சிந்தித்துக் கொண்டிருந்தார்.

பிரசவம் நெருங்கும் போது ஒருநாள் அதிகாலை சமர்த்தர் ராவின் கனவில் தோன்றி தாம் சோன்வாடி என்ற இடத்திற்குக் குளிக்கச் செல்வதாகக் கூறி மறைந்தார். இதை ஒரு அபசகுனமாக (மனைவி இறந்துவிட்டாளோ) நினைத்த ராவ் வேதனையில் துடித்துக் கொண்டிருந்தார்.

சோன்வாடி ராவின் மாமனார் வீட்டுப்பக்கத்தில் உள்ளது. ஆனால் சத்குருவின் திருவருளால் நான்கு நாட்களில் ஒரு தந்தி நல்ல செய்தியுடன் ராவை வந்தடைந்தது. ஆம்! சுவாமிகள் கனவில் தோன்றிய அன்றே அன்னபூர்ணா அக்னி போலப் பிரகாசிக்கும் ஒரு ஆண்மகனை ஈன்றதாகவும், தாயும் சேயும் நலமாக இருப்பதாகவும் அறிந்த ராமகிருஷ்ணாராவின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை.

சமர்த்தர் குளிக்க செல்வதாகச் சொன்னது தாயுமான சுவாமிகள் தமது பக்தைக்குப் பிரசவம் பார்க்க செல்வதைக் குறிப்பிடவே, என்று பிறகு உணர்ந்த இராமகிருஷ்ணராவ் சுவாமிகளின் அபார சக்தியையும் கருணை வெள்ளத்தையும் போற்றித் துதித்தார்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 17. ஸ்ரீ சோளப்பா

ஸ்ரீ சுவாமிகள் அக்கல்கோட்டுக்கு முதன் முதலில் வந்து கண்டோபா (எல்லை காவல் தெய்வம்) கோவிலில் மூன்று நாட்கள் யாருடனும் ஏதும் பேசாமல் மௌனமாக அமர்ந்திருந்தார். ஒரு முஸ்லீம் அன்பர் அவரை அணுகித் தம் வீட்டிற்கு உண்ணவருமாறு அழைத்தார். ஒரு வேளை அசைவ உணவைச் சுவாமிகள் ஏற்றுக் கொள்ளமாட்டாரோ என்று எண்ணிப் பிறகு தாமாகவே, சமர்த்தரைச் சோளப்பா என்ற பிராமணர் வீட்டிற்க்கு அழைத்துச் சென்று அவரை உபசரிக்குமாறு வேண்டினார். சோளாப்பாவும் சுவாமிகளை அன்புடன் வரவேற்று உணவளித்தார்.

அன்றிலிருந்து இரண்டு மாதங்கள் சோளாப்பாவின் வீட்டிலேயே தங்கியிருந்து பல பால சேஷ்டைகள் புரிந்தார். இது அவருடைய மனைவிக்குப் பிடிக்கவில்லை.

சில நாட்களில் அக்கல்கோட் மன்னர் சுவாமிகளின் பக்தரான பிறகு அரண்மனையிலிருந்து சுவாமிக்கும் சோளாப்பாவின் குடும்பத்தாருக்கும் தேவையான உணவுப் பொருட்கள் மானியமாக வழங்கப்பட்டன. இதற்குப் பிறகு குருநாதர் சோளாப்பாவின் வீட்டிலிருந்து வெளியேறி ஊருக்குள்ளும் சுற்றுமுற்றும் உள்ள பல கிராமங்களிலும் சுற்றி யாராவது அன்புடன் உபசரிப்பதையே ஏற்றுக் கொண்டாரே தவிரச் சோளாப்பாவின் வீட்டிற்கு செல்லவில்லை.

ஒரு நாள் காலை வேளையில் ராமர் கோவில் அருகிலிருந்த எலுமிச்சை மரத்தினடியில் சமர்த்தர் அமர்ந்திருந்தார். அந்த மரத்தின் மீது ஒரு குருவி அமர்ந்திருந்தது. அப்போது சோளப்பாவும் உடனிருந்தார். சுவாமி அந்தக் குருவியைப் பார்த்து, "நான் திரும்பிவரும் வரை இங்கேயே இரு", என்று கூறிவிட்டு அருகிலிருந்த வாடி என்ற ஊருக்குச் சென்றார். மதியம் 12 மணியளவில் திரும்பி வந்தபோது அந்தக்குருவி சுவாமியின் ஆணையை ஏற்று அந்த



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இருந்தது. சமர்த்தர் அதனிடம், "நீ பசியோடு இருப்பாய் இப்போது போகலாம்" என்று கூறியவுடன் அது வேகமாய்ப் பறந்து சென்றது.

ஒரு குருவி கூட சுவாமிகளின் ஆணையைப் பிசகாமல் ஏற்று நடந்த விதத்தைப் பார்த்த சோளப்பாவுக்குச் சமர்த்தரின்பால் பக்தியும் மரியாதையும் மேலோங்கியது.

பிறகு சுவாமிகள் சோளப்பாவைப் பார்த்து, "நான் ஒரு துறவி, என்னைப் பின் தொடர்வது உனக்கு ஏற்புடையதல்ல, நீ உன் குடும்பத்தாருடன் மகிழ்ச்சியாக வாழ்க" என்று கூறி அவரை வீட்டிற்குச் செல்லுமாறும் தன்னை அவரது வீட்டிற்கு அழைக்க வேண்டாமென்றும் கூறினார்.

இதைக்கேட்டு மனம் தாளாத குருபக்தரான சோளப்பா, சமர்த்தரிடம், "சுவாமி நான் எனது மனைவி, குழந்தைகள், சொத்து சுகத்தையும் தியாகம் செய்வேனே தவிர தங்களை விட்டுப் பிரிந்திருக்க முடியாது", என்று அவர்தம் பாதங்களை இறுகப்பற்றிக் கொண்டு கதறினார்.

சோளாப்பாவின் தூய்மையான பக்தியால் மனம் குளிர்ந்த சமர்த்தர் தமது பாதுகைகளைக் கழற்றி அவர்மீது எறிந்து அவற்றைப் பூஜிக்குமாறு ஆசியருளினார்.

அக்கல்கோட்டில் சோளாப்பாவின் இல்லத்தில் இன்றும் சுவாமிகளின் பாதுகைகள் பக்தர்களின் குறைகளைத் தீர்த்து ஆசியருளிக் கொண்டிருக்கின்றன.

குருகடாட்சம் பரிபூரணம்

## 18. அப்பா சாஹேப் மானே

அக்கல்கோட் சமஸ்தானத்தில் உத்யோகரான ஸ்ரீ அப்பா சாஹேப் மானே ஸ்ரீ சுவாமிகளின் ஆத்மபக்தர். தமது மகள் ஜமுனாபாய்க்குத் தக்க வரன் அமையாது கவலையுடன் சமர்த்தரிடம் ஆசிகேட்க, சுவாமியும், "காலதேவன் என்ன செய்வான்? நான்அவளுக்காக "கண்ட்யாவை நியமித்துள்ளேன்"



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



என்று ஆசியருளினார். அதன் அர்த்தம் புரியாமல் போனாலும் சமர்த்தர் நல்வழி காண்பிப்பார் என்று நம்பிக்கையுடன் இருந்தார்.

சில மாதங்களிலேயே ஜமுனாபாய்க்குக் காயக்வாட் மன்னர் ஸ்ரீமந்த கண்டேராவுடன் திருமணம் விமரிசையாக நடந்தேறியது. "கண்ட்யாவை தேர்ந்தெடுத்துள்ளேன்" என்று சுவாமிகள் கூறியதன் பொருள் பிறகு புரிந்து அப்பாசாஹேப் பெருமகிழ்ச்சியடைந்தார்.

ஒரு தடவை அப்பா சாஹேப் விஷக்காய்ச்சல் வந்து மிகவும் துன்புற்ற நிலையில் சுவாமிகளைத் தரிசிக்கவும் வரமுடியாமல் விநாயகர் கோவிலில் தங்கியிருந்தார். ஆனால் அவரது மனம் எப்போதும் சுவாமிகளையே நினைத்துக் கொண்டிருந்தது.

பக்தவத்ஸலனான சமர்த்தர் அப்பாசாஹேபைப் பார்க்க வந்து தமது திருப்பாதங்களால் அவரை மூன்று முறை தடவினார். மறுநாள் குருவருளால் அப்பாசாஹோப் தமது கொடிய காய்ச்சலிலிருந்து முழுவதும் குணமாகிச் சாதாரண நிலைக்குத் திரும்பினார்.

குருகடாட்சம் பரிபூரணம்

## 19. பண்டோபா புராணிக்

ஸ்ரீ சத்ரபதி சிவாஜியின் பரம்பரையான ஸ்ரீமந்த சஹாஜி ராஜா அவர்கள் பண்டோபா புராணிகர் என்பவரிடம் முன்பு சத்ரபதி என்ற ராஜாவிடமிருந்த அக்கல்கோட் சமஸ்தானத்தைத் தமக்கு மீட்டுக்கொடுக்க உதவி செய்தால் ஆயிரம் ரூபாய் பெறுமான நிலத்தைப் பரிசாக அளிப்பதாகக் கடிதம் மூலம் வாக்கு அளித்திருந்தார்.

பண்டோபா புராணிக்கும் தமக்கிட்ட வேலையைத் திறமையாகச் செய்து அக்கல்கோட் சமஸ்தானத்தை சிவாஜி பரம்பரைக்கே மீட்டுக் கொடுத்தார். ஆனால் தமக்குத் தருவதாக



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இருந்த பரிசை மன்னர் தரவில்லை. இந்தக்கவலை அவரைப் பெரிதும் வாட்டியது.

அக்கல்கோட்டில் பண்டோபா தினமும் ஸ்ரீசுவாமி சமர்த்த மஹாராஜைத் தரிசனம் செய்வதை வழக்கமாக கொண்டிருந்தார். ஒரு நாள் சமர்த்தரிடம் தனது கவலையை வெளியிட்ட போது சுவாமிகளும், "யாம் உமக்கு லிங்கத்தை கொடுத்துள்ளோமல்லவா?" என்று ஆசியருளினார். அதன் மறைபொருள் தமக்கு விளங்காவிட்டாலும் பண்டோபா விடைபெற்றுச் சென்று விட்டார்.

சிறிது காலத்தில் சத்ரபதி சஹாஜி அவர்கள் மறைந்தார். அவரது நினைவாக தானதர்மங்கள் செய்யப்பட்டன. அப்போது பண்டோபா புராணிகருக்கும் ரூ. 450 மதிப்புள்ள நல்ல விளைநிலம் தானமாக வழங்கப்பட்டது. அந்த நிலத்தைப்பார்க்க ஆவலுடன் சென்ற பண்டோபாவுக்கு ஆச்சரியம் காத்திருந்தது. ஆம், ஸ்ரீ சுவாமிகளின் திருவாய்மொழிக்கேற்ப அந்த ரம்யமான விளைநிலத்தின் நடுவே ராமேஷ்வர் என்ற லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்ட அழகிய கோவிலும், ஓடைகளும், மாமரங்களும் இருந்தன.

ஸ்ரீ சுவாமிகளின் வார்த்தைகள் என்றும் பொய்ப்பதில்லை என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்.

குருகடாட்சம் பரிபூரணம்

## 20. சரஸ்வதி சோனாரின்

ஸ்ரீ சமர்த்தரின் அன்புக்குப் பாத்திரமான சரஸ்வதி சோனாரின் என்ற பக்தை அக்கல்கோட்டில் சதா ஜனாபாயியின் அபங்கங்களைப் (பாடல்களை) பாடிக்கொண்டே பக்திப் பெருக்கில் கண்களில் ஆனந்தக்கண்ணீருடன் சுற்றிக்கொண்டிருப்பாள். பிச்சை எடுத்து உண்ணும் அவளுடன் நிறைய நாய்களும் இருக்கும். தமக்குக் கிடைப்பதில் அவைகளுக்கும் அளித்து இறையன்பிலும் ஸ்ரீ சமர்த்தரின் பக்தியிலும் வாழ்ந்து வந்தாள்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சில நேரங்களில் சுவாமி மிகவும் கோபத்துடன் நரசிம்ம அவதாரத்தைப்போலச் சீறிக்கொண்டேயிருப்பார். அந்தச் சமயங்களிலெல்லாம் அடியவர்கள் இந்த சரஸ்வதியம்மனையும் மன்யாபா என்ற பக்தரையும் தேடிப்பிடித்துச் சுவாமிகளிடம் அழைத்து வருவார்கள்.

அவர்கள் இருவரும் "ஞானோபா, துகாராம்" என்றும் இனிய பஜனைப் பாடல்களைப் பாடியும் ஆடியும் சுவாமிகளை மகிழ்விப்பார்கள்.

அவற்றைக் கேட்ட சமர்த்தர் வயிறு குலுங்க (அவர் அமர்ந்திருக்கும் பலகையும் ஆடும் அளவுக்கு) மகிழ்ச்சி பொங்கச் சிரித்து அவர்களை ஆசீர்வதித்து அனுப்புவார்.

நரசோபா வாடியிலிருந்து ஒரு சமயம் சில பக்தர்கள் ஸ்ரீசுவாமி தரிசனத்திற்கு வந்திருந்த போது அவர்கள், சமர்த்தரைப் பார்த்து, "தாங்கள் யார்?" என்று அன்புடன் கேட்கவும் உடனே, அருகிலிருந்த சரஸ்வதி அவர்களிடம், "மூல புருஷன், ஆலமரம், தத்த நகரம்" என்று பதிலளித்தார். "வடபத்ரசாயி (ஆலிலையில் படுத்துறங்கும் ஸ்ரீ கிருஷ்ணன்) யாகிய அந்த ஆதிமூலனே தற்போது தத்தாவதாரியாக வந்துள்ளார்" என்றும் விளக்கினார்.

வெளிப்பார்வைக்குப் பிச்சைக்காரியாகத் தோற்ற மளித்தாலும் பெரிய ஞானியாக இருந்த சரஸ்வதி சோனாரின் மீது சுவாமிகள் அனுக்ரஹம் செய்ததில் ஆச்சரியம் ஏதும் இல்லையே!

குருகடாட்சம் பரிபூரணம்

## 21.புனேயின் கர்வே

புனேயிலிருந்து கர்வே என்ற அன்பர் சுவாமி தரிசனத்திற்கு வந்திருந்தார். ஒரு நாள், அவர் ஸ்ரீ சமர்த்தரைப் பார்த்து, "உங்கள் குலம், கோத்திரம் என்ன?" என்று வினவினார்.

சமர்த்தரும், "யாம் யஜுர்வேதி பிராம்மணர், எமது பெயர் நரசிங்க பான், காஷ்யப கோத்திரம், மீனராசி", என்று விபரமாகக்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



கூறியபிறகு கர்வேயை பார்த்து கோபத்துடன், "என்னடா, உன்னுடைய அருமை மகள் புனேயில் அல்லும் பகலும் பலருடன் சுற்றித் திரிந்து கொண்டிருக்கிறாளே, அவளுடைய குலம், கோத்திரம் என்ன"? என்று கேட்டார்.

இதை சற்றும் எதிர்பார்த்திராத கர்வே தலை குனிந்து சுவாமிகளின் திருப்பாதங்களில் விழுந்து கண்ணீருடன், 'இந்த அவமானத்துடன் வாழ்வதைக் காட்டிலும் சாவதே மேல்' என்று அழுது புலம்பினார். சுவாமிகளிடம் எதையும் மறைக்க முடியாது. அவர் சர்வலோக சஞ்சாரி, பரமாத்மா என்பதை உணர்ந்து மனமுருகப் பிரார்த்திக்கவும், கருணாசாகர சுவாமிகளும் கர்வேயிடம், "அழாதே போ, ஹோலி கொண்டாடு" என்று தேற்றி விடை கொடுத்தார்.

தமது ஊருக்குச் சென்றவுடன் அடுத்து வந்த ஹோலிப் பண்டிகையன்று தவறான வழியில் வாழ்ந்து குடும்பத்துக்கு அவப்பெயர் உண்டாக்கிய அந்தப் பெண் காலமானாள்.

ஸ்ரீ சுவாமிகள் "ஹோலி கொண்டாடு" என்றதன் பொருள் கர்வேக்கு அப்போதுதான் புரிந்தது. பிறகு ஸ்ரீ சமர்த்தரின் தீவிர பக்தரானார் கர்வே.

குருகடாட்சம் பரிபூரணம்

## 22. சோலாப்பூர் நாராயணபுவா

சில சமயங்களில் தம்மை நிந்தனை செய்பவர்களுக்குச் சிறிய தண்டனைகளைக் கொடுத்து அவர்களைத் திருத்தி ஸ்ரீசுவாமிகள் தம்பால் அழைத்துக் கொள்வதுமுண்டு. அப்படிப் பக்தரானவர்தான் இந்த சோலாப்பூரின் நாராயண புவா.

அக்கல்கோட்டுக்கு அடிக்கடி தமது வேலை நிமித்தமாக வந்து போகும் நாராயணபுவாவிற்குச் சமர்த்தரைப் பிடிக்காது. பிறரிடம் சமர்த்தரைப் பற்றி, "இவர் என்ன சன்யாசி, கண்ட இடத்தில்படுத்து உறங்குகிறார், யார் கொடுத்தாலும் உண்கிறார், தமக்கென்று ஒரு வேலையும் இல்லாமல் வெறுமனே சுற்றித்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



திரியும் இவரைப்போய் வணங்குகிறீர்களே" என்று குறை கூறிக்கொண்டிருப்பார்.

ஒரு நாள் தம்மையறியாமலேயே கூட்டத்தோடு கூட்டமாக அவர் சுவாமிகளைத் தரிசிக்க வேண்டியதாயிற்று. அப்போது சமர்த்தர் நாராயணனைப் பார்த்து, 'அலறி அடிச்சிட்டு ஓடு' என்று கூறினார்.

அதன் பொருள் விளங்காமலேயே ஆச்சரியத்துடன் சோலாப்பூருக்கு திரும்பினார். அவரது வீட்டில் மூவாயிரம் ரூபாய் மதிப்புள்ள பொருட்கள் திருடுபோயிருந்ததைக் கண்டு அதிர்ச்சியடைந்தார். திருடனைப்பிடிக்க எவ்வளவோ முயன்றும் முடியவில்லை. தான் ஸ்ரீ சமர்த்தரைக் குறை கூறியதாலேயே தமக்கு இந்தத் தண்டனை கிடைத்துள்ளது என்பதை உணர்ந்த நாராயணன் பிறகு ஸ்ரீ சுவாமி சமர்த்தரின் பக்தரானார்.

மஹான்களுக்கு அனுக்ரஹிக்கவும் தெரியும், தண்டிக்கவும் தெரியும். ஆனால் பக்தர்களை நல்வழிப்படுத்தும் நோக்கிலேயே அந்த தண்டனை அமையும் என்பதை நாராயண புவாவின் இந்த அனுபவம் நமக்கு விளக்குகிறது.

குருகடாட்சம் பரிபூரணம்

## 23. பஞ்சதஸி

"பஞ்சதஸி" என்றால் ஐம்பது. அக்கல்கோட்டில் ராம்ஜோஷி புவாவின் வீட்டில் 'பஞ்சதஸி' என்ற ஒரு ஞானநூல் இருந்தது. தினமும் இவருடன் சேர்ந்து கோபால்ஜோஷி, ஐயதீர்த்த புராணிகர் மற்றும் வித்வான்களும் பஞ்சதஸியைப் படித்து விவாதிப்பது வழக்கமாக இருந்தது. அப்படியிருக்கையில் ஒரு ஸ்லோகத்திற்குப் பொருள் விளங்காமற்போகவே அனைவரும் ஸ்ரீ சுவாமிகளிடம் சென்று சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ள முடிவெடுத்து தரிசனத்திற்கு சென்றனர்.

ஸ்ரீ சமர்த்த மஹராஜ் அனைவரையும் ஆசீர்வதித்துத் தமதருகில் அவர்கள் அமர்ந்ததும், அவர்கள் கேட்காமலேயே



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அந்த ஸ்லோகத்தைப் பாடி, பொருளையும் எளிதில் விளக்கினார். குருநாதரின் புலமையையும் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்திருக்கும் பரம் பொருளின் அவதார மஹிமையையும் உணர்ந்த அந்தப் பக்தர் குழு தினமும் சுவாமிகளைத் தரிசிப்பதையும், சுவாமிகளின் தர்பாரில் அமர்வதையும் வழக்கமாக்கிக் கொண்டது.

ஸ்ரீ கஜானன் மஹராஜ் தாம் இயற்றிய ஸ்ரீசுவாமி சமர்த்த அஷ்டோத்திரத்தில், "பண்டிதானாம் சிரோமணி" என்று புகழ்ந்ததை இங்கே நினைவு கூறுவோம்.

குருகடாட்சம் பரிபூரணம்

# 24. பலகையில் பாதுகை

சிந்தோபந்த் அப்பா டோள் என்ற பக்தர் அக்கல்கோட்டில் தமது வீட்டில் உள்ள விஷ்ணு பஞ்சலோக மூர்த்திக்கு விஷ்ணு ஸஹஸ்ர நாமம் சொல்லிக் கொண்டே ஒரு கோடி துளசியால் அர்ச்சனை செய்வதாகச் சங்கல்பம் எடுத்துக் கொண்டு அதேபோல் ஒவ்வொரு நாளும் செய்து வந்தார்.

அவ்வப்போது ஸ்ரீ சுவாமி மஹாராஜும் அப்பா டோளின் பூஜையில் கலந்து கொள்வார். சுவாமிகளையே விஷ்ணுவின் பிரத்யட்ச அவதாரமாகக் கருதி டோளும் துளசியால் சுவாமிகளின் திருவடிகளுக்கு அர்ச்சனை செய்து வந்தார். தமது வீட்டில் சுவாமிகள் நிரந்தரமாகத் தங்கியிருந்தால் தமது பூஜை சிறப்பாக அமையும் என்று நினைத்துத் தமது எண்ணத்தையும் சுவாமியிடம் கூறி வேண்டி நின்ற டோளிடம், "உன் எண்ணம் நிறைவேறும்" என்று ஆசியருளினார். சிறிது நேரத்தில் அவ்விடத்தை விட்டுச் சுவாமிகள் அகன்றதும், என்ன ஆச்சரியம்!



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஸ்ரீ சமர்த்தர் அமர்ந்திருந்த பலகையின் மேல் அவர்தம் திருவடிகள் பொறிக்கப்பட்டிருந்ததைக் கண்டு பேரானந்தத்தில் கண்ணீர் மல்க சுவாமிகளின் கருணையைப் போற்றித் தமது பூஜைகளைக் குருவின் திருவடிகளுக்கே தொடர்ந்து செய்து வந்தார்.

சிந்தோபந்தின் வீட்டில் ஒரு அவ்தும்பர் மரம் (அத்திமரம்) இருந்தது. அவ்தும்பர் மரத்தினடியில் தத்தாத்திரேயர் வாசம் செய்வதால் அது புனிதமரமாக வணங்கப்படுகிறது. தமிழ்நாட்டில் வில்வமரம் (சிவன்), அரசமரம், வன்னிமரம் (விநாயகர்), துளசி (லக்ஷ்மி) எவ்வாறு புனிதமாகக் கருதப்படுகிறதோ அப்படி மகாராஷ்ட்ராவில் அவ்தும்பர் மரம் போற்றப்படுகிறது. அந்த மரத்தினடியில் ஸ்ரீ சமர்த்தரும் அவ்வப்போது வந்து அமர்ந்து செல்வார்.

கோபால்பட் பிடே என்ற சன்யாசிக்கு அந்த மரத்தினடியில் சுவாமிகளின் பாதுகைகளை ஸ்தாபிதம் செய்து ஒரு கோவில் கட்ட வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. ஆனால் தாமோ ஒரு துறவி. தம்மால் கோவில் கட்ட முடியுமா? என்று சந்தேகமும் எழுந்தது. அருகிலிருந்த சுவாமிகள் உடனே, " கோவில் கட்டித் திருவடிகளை ஸ்தாபிதம் செய்க" என்று ஆசியருளினார்.

குருநாதரின் ஆசி கிடைத்தபின்னால் நடவாத காரியம் ஏதேனும் உண்டா? பக்தர்களிடம் வசூல் செய்தும், ஸ்ரீ விநாயக் வாசுதேவ் என்ற தனவந்தரின் (ரூ.8000) பொருளுதவியாலும் அந்த இடத்தில் ஒரு அழகிய கோவில் உருவானது. ஸ்ரீ சுவாமி சமர்த்தரே கோவில் கும்பாபிஷேகத்தை முன்னின்று நடத்தினார். தமது திருவாக்கால், "ஸ்ரீமன் மஹாகணாதிபதயே நம: நிர்விக்னமஸ்து" என்று பூஜைகளை ஆரம்பித்து வைத்த பெருமை ஜோஷி புவா மடத்திற்கு கிட்டியது.

"பூஜா மூலம் குரோர் பதம்!"

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 25. பூர்வ ஜென்ம பந்தம்

கோங்கணி(கோவா)யிலிருந்து ஒரு பிராம்மண தம்பதியர் தமக்கு வாரிசு இல்லாததால் ஸ்ரீ சுவாமி சமர்த்தரின் தரிசனத்திற்கு வந்திருந்தனர். அதே வேளையில் தேலீ என்ற வறியவர் தமது மூன்று மகன்களுடன் அக்கல்கோட்டில் அன்றாடம் கூலித்தொழில் செய்தும் சரியான வருமானமின்றி கஷ்டத்துடன் வாழ்ந்து கொண்டிருந்தார்.

ஒரு நாள் ஸ்ரீ சமர்த்தர் சன்னதியில் இந்தத் தேலீயும் தமது மகன்களுடன் தரிசனத்திற்கு வந்திருந்தபோது, அந்த பிராம்மண பெண்மணியிடம் தேலீயைச் சுட்டிக்காட்டி, "லிம்பே, (அந்தப் பெண்மணியின் முந்தைய பிறவியின் பெயர்) இந்த தேலீ உனது முந்தைய பிறவியின் கணவர். இந்த மூன்று மகன்களும் உமது வயிற்றில் பிறந்த மகன்களே. தற்போது மிகவும் தரித்திரமாகத் துன்பப்படுகிறார்கள். உனது கையால் இவர்களது வீட்டில் உள்ள சிவப்புத் தூணுக்குக் கீழே ஒரு அண்டாவில் நீ புதைத்து வைத்திருந்த செல்வத்தை உனது கையாலேயே போய் எடுத்துக் கொடுத்தால், அவர்களது ஏழ்மையும் நீங்கும், உனக்கும் புத்திரபாக்கியம் உண்டாகும்" என்று ஆசியருளினார்.

இதைக் கேட்டதும் அந்தப் பெண்மணி நாணத்தினால் தலைகுனிந்து நிலத்தை நோக்கி நின்றார். தமது அன்னையை இந்தப் பிறவியில் கண்டு கொண்ட, ஆனால் அப்பெண்ணை விட வயதில் மூத்தவர்களாக இருந்த அந்த மூன்று இளைஞர்களும், "அம்மா! அம்மா" என்று பாசத்துடன் அவளருகில் சென்றவுடன் அவளும் மிகவும் பிரியத்துடன் தமது மகன்களை தொட்டு ஆசீர்வதித்தாள்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சுவாமிகளின் திருவாக்கில் நம்பிக்கையுடன் அவர்கள் அனைவரும் அக்கல்கோட்டிலிருந்து 21 மைல் தொலைவிலிருந்த அந்த தேலீயின் வீட்டை அடைந்தனர். அந்த வீட்டிலிருந்த சிவப்புத் தூணை இடித்துவிட்டு அதன்கீழே தோண்டிப் பார்த்தபோது, என்னே ஆச்சரியம்! சமர்த்தரின் அருள்வாக்கின்படி ஒரு அண்டாவில் நிறையப் பொற்காசுகளும் நகைகளும் கிடைத்தன.

அவற்றைத் தேலீ குடும்பத்தாருக்கு அளித்துவிட்டு அந்தப் பிராம்மண தம்பதியர் மீண்டும் அக்கல்கோட் வந்து அனைவரிடமும் சுவாமிகளின் கருணையையும் சாட்சாத்காரத்தையும் கூறி, அனைவரையும் ஆச்சரியத்தில் மூழ்க வைத்தனர். பின்பு சுவாமிகளிடம் ஆசிபெற்றுக் கோங்கணிக்குத் திரும்பிச் சென்றார்கள். அதே வருடம் அவர்களுக்கு ஒரு அழகிய ஆண்குழந்தையும் பிறந்தது.

தம்மை நாடியவர்களின் துன்பத்தை நீக்குபவரும் பக்தர்களின்பால் அளவில்லாத பேரன்பு கொண்டவருமான சுவாமி சமர்த்தரின் புகழ் பாடி அனைவரும் இகபர சுகம் அடைவோமாக.

குருகடாட்சம் பரிபூரணம்

## 26. பக்கீரின் பிரசாதம்

மும்பையிலிருந்து ஒரு தனவந்தர் சுவாமி தரிசனத்திற்குத் தமது பிராம்மண சமையற்காரருடன் வந்திருந்தார். சமர்த்தருக்காகச் சிறப்பாக சமைக்கப்பட்ட ஒரு தட்டு நிறைய உணவுகளுடன் இருவரும் வந்தனர். அந்தச்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சமையல்காரரைப்பார்த்து, சுவாமிகள், "ஐயாயிரம் ரூபாய் எடுத்துக் கொண்டு போ விடாதே" என்று மூன்று தடவை மீண்டும் மீண்டும் கூறினார். அந்த சமையல்காரரோ, "சுவாமி! நானோ ஏழை பிராம்மணன். சமையல்காரனான எனக்கு ஐந்தாயிரம் ரூபாய் எப்படிக் கிடைக்கும்?" என்று ஐயத்துடன் வினவினார்.

அக்கல்கோட்டில் சுவாமிகள் சதா வசித்துக் கொண்டிருந்த ஆலமரத்திற்கு எதிரே ஒரு வயல் இருந்தது. அவ்வயலில் ஒரு முஸ்லீம் பக்கீர் இருந்தார். அவருடன் அழகான திடகாத்திரமான ஒரு கருப்பு நாயும் இருந்தது. தமக்காக எடுத்து வந்திருந்த அந்த உணவுத்தட்டைக் கொண்டு போய், அந்தப் பக்கீரிடம் கொடுக்குமாறு ஸ்ரீசமர்த்தர் அந்தப் பிராம்மணரிடம் கூறினார். அவரும் அதைப் பக்தியுடன் எடுத்துக் கொண்டு அந்தப் பக்கிரியிடம் அளித்தார். தாமும் அந்த நாயும் சாப்பிட்டது போக மீதி ஐந்து கவளம் உணவை அந்தத் தட்டில் வைத்து துணியால் மூடி, சுவாமிக்கு தமது நன்றியை தெரிவிக்குமாறு அந்த பக்கீர் கூறி திருப்பி அனுப்பினார்.

சுவாமியும் அந்த மீதமிருந்த உணவையே பிரசாதமாக அவ்விருவருக்கும் அளித்து விடைக் கொடுத்தார். தமது இருப்பிடத்திற்கு வந்ததும் அந்த தனவந்தர், ஒரு முஸ்லீம் துறவி சாப்பிட்ட மீதத்தை தாம் எப்படிப் பிரசாதமாகச் சாப்பிடுவது என்று ராஜோபாத்யே, நாராயணபட் ஹிரளீகர், வெங்கட சாஸ்திரி போன்றவர்களிடம் விவாதித்தார். பிறகு சாப்பிடுவதில்லை என்று முடிவெடுத்துச் சிறிது நேரம் கழித்து பிறகு மீண்டும் சுவாமி தரிசனத்திற்கு சென்றார்.

அவரைப் பார்த்ததும் சுவாமிகள் மிகவும் கோபத்துடன், "உனக்குச் சாப்பிட விருப்பமிருந்தால் சாப்பிடு, இல்லையென்றால் விட்டுவிடு. ஏன் வீடு வீடாக சென்று பஞ்சாயத்து பண்ணுகிறாய்?" என்று தனவந்தரைப் பார்த்துக் கேட்டவுடன் பயந்து நடுநடுங்கிய தனவந்தரும் மீண்டும் தமது அறைக்குத் திரும்பி அதைப் பிரசாதமாக மகிழ்ச்சியோடு உண்டு அந்த பிராம்மண சமையல்காரருக்கும் அளித்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



மும்பைக்குத் திரும்பிய அந்தப் பிராம்மண சமையல்காரர் சுவாமிகள் தமக்கு ஐந்தாயிரம் ரூபாய் கிடைக்கும் என்று கூறியது கனவா அல்லது உண்மையாகவே நடக்குமா என்று அல்லும் பகலும் சிந்தித்துக் கொண்டிருந்தார். அப்படியிருக்கையில் ஒரு நாள் அந்த தனவந்தரின் சித்தி அந்த சமையல்காரருக்குத் தாமாகவே ஐந்தாயிரம் ரூபாயைத் தானமாக அளித்ததைக் கண்டு அவர் ஆனந்தமான அதிர்ச்சிக்குள்ளானார். ஸ்ரீசுவாமி சமர்த்தரின் வாக்கு என்றும் பொய்யானதில்லை என்று கண்டு கொண்ட அவர் சுவாமிகளின் கருணையைப் புகழ்ந்து அனைவரிடமும் கூறி மகிழ்ந்தார். அந்தத் தனவந்தருக்கும் சுவாமிகளின் மீது பெரும் பக்தியும் நம்பிக்கையும் உண்டானது. மதங்களைக் கடந்த மாபெரும் குருநாதரின் பக்தராக இருப்பதில் பெருமகிழ்ச்சியடைந்தனர். எம்மதமும் சம்மதம் என்று வாழ்ந்தால் பிரச்சினைகளேது?

## 27. கோசாவிக்குத் தத்தாத்திரேய தரிசனம்

கி.பி. 1869, மார்கழி மாதத்தில் தமது பக்தர்கள் புடைசூழ ஸ்ரீசுவாமி சமர்த்தர் அக்கல்கோட்டிலிருந்து அருகிலிருந்த நாகஸுர், ஹச்னாள், ஹதரே முதலிய கிராமங்களுக்கு விஜயம் செய்து அற்புத லீலைகளை நிகழ்த்திக் கொண்டிருந்தார்.

அவ்வமயம் கோசாவி என்ற பக்தர் ஒரு வருட காலமாக ஸ்ரீ தாத்தாத்திரேயரை நேரில் தரிசிப்பதற்காக மிகவும் சிரத்தையுடன் பூஜை புனஸ்காரங்கள் செய்து வந்தவர், அந்தப்பக்கம் ஸ்ரீ சுவாமிகள் வரவைக் கேள்விப்பட்டுத் தரிசனத்திற்காக வந்து சேர்ந்தார்.

கோசாவியின் தவத்தின் பலனை அளிப்பதற்காகத் தத்த அவதாரியான ஸ்ரீ சமர்த்தரும் அவர் வரும்போது, ஆஜானுபாகுவான தாமிரவர்ண தேகத்துடன் எழுந்து நின்று தரிசனம் அளித்தார். ஆஹா! கோசாவியின் தவக்கண்களுக்கு மட்டும், சுவாமிகள் மூன்று தலைகளுடன் (சிவ, பிரம்மா, விஷ்ணு) திரிசூலம், கமண்டலம் போன்ற ஆயுதங்களைத் தாங்கிய ஆறு கரங்களுடனும் ஒளி மயமாக அருட்காட்சி அளித்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அவ்வரிய காட்சிகளைக் கண்ட கோசாவி சுவாமிகளைப் பலவாறு துதித்து அவர்தம் பாதங்களில் வீழ்ந்து நமஸ்கரித்தார், "சாட்சாத் தத்தாத்திரேயரின் அவதாரமாகிய தங்களை காணும்பேறு பெற்ற என்னுடைய கர்மவினைகளை நீக்கி முக்தியளிப்பீராக" என்று பிரார்த்தித்தார். பல நாட்கள் சுவாமிகளுடன் இருந்த அந்தப் பாக்கியவான் கோசாவி தமது ஊருக்கு ஆத்ம திருப்தியுடன் சென்றார்.

குரு தம்மை நாடிவருபவரை என்றும் அரவணைப்பார். பக்தர்கள் தேவைக்கேற்பவும் அவர்களது மனப் பக்குவத்திற் கேற்றாற் போலவும் அவர்களுக்குப் பலனை அளித்துப் பிறவிக்கடலினின்றும் கரையேற்றுவார் என்பதில் சிறிதளவும் ஐயமில்லை.

"த்யான மூலம் குரோர் மூர்த்தி:।"

குருகடாட்சம் பரிபூரணம்

# 28. சையத் பாய்

கி.பி. 1874 புரட்டாசி மாதம், சஷ்டி திதி, குருவாரம் (வியாழக்கிழமை) சுவாமிகள் அக்கல்கோட்டிலுள்ள தேஷ்முக் என்ற பக்தரின் இல்லத்தில் அமர்ந்திருந்தார். மதியம் மூன்று மணியளவில் மொகலாயி என்ற ஊரிலிருந்து சையத் என்ற முஸ்லீம் பக்தர் தரிசனத்திற்காக வந்து சேர்ந்தார்.

தேஷ்முக்கின் வீட்டு வாசலில் இருந்த பக்தர்களிடம் "அக்கல்கோட் சுவாமிகள் எங்கே?" என்று வினவிய அதே வேளையில் உள்ளேயிருந்து சமர்த்தரின் குரல் கம்பீரமாக ஒலித்தது. "உன் தலையிலே உக்காந்திருக்கார். நன்றாகப் பாரு! இங்கே என்ன பார்க்கிறே" என்று குரல் வந்த திசையில் திடுக்கிட்டு நோக்கிய சையத்துக்குக் கால்கள் நடுங்கின. சில கணங்களில் அவர் தமது கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்து விட்டார்.

"அக்கல்" என்றால் "ஞானம்" என்று பொருள். சுவாமிகள் தம்மை ஞானவடிவில் தரிசிக்குமாறு தமக்கே உரிய பாணியில் சையத்துக்கு ஆசியருளினார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தியானத்திலிருந்து மெதுவாகக் கண்களைத் திறந்து பார்த்த சையத் ஆனந்தக் கண்ணீருடன் சுவாமிகளின் முன்னால் மண்டியிட்டுக் கைகளை கூப்பி, "கரீப் நவாஜ், பர்வர்திகார் சாஹேப், சுவாமி மஹராஜ்! தாங்களே அல்லா. எம் இறைவன். இதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை. என் இதயத்தில் உணர்ந்து தரிசனம் கண்டேன். வாஹ்! வாஹ்! நான் குரான், கலம் மற்றும் பல புத்தகங்களைப் படித்திருக்கிறேன். எங்களது சமய நூல்கள் மற்றும் ஹகீகத், தரீகத், ஷரியத் சட்டங்கள் அனைத்தும் அறிந்திருக்கிறேன். மேலும் நாஸுத், ஜமரூத், மல்கத் மற்றும் லாஹுத் ஆகிய நான்கு வழிகளிலும் கடுமையாக உழைத்திருக்கிறேன். இருந்தபோதிலும் தங்களைக் காண வரும்போது வாசலில் தாங்கள் எங்கே? என்று அஞ்ஞானியைப் போல கேட்டபோது உன் இதயத்திலேயே இருக்கிறேன் (அக்கல்கோட்) என்று ஆசி கூறி, எனது அகக்கண்ணில் அருட்காட்சி அளித்து என்னை ஆட்கொண்டீர்கள். சுவாமி, என்னே எனது பாக்கியம்!" என்று பலவாறாகத் துதித்தார். சுவாமிக்குத் தாம் கொண்டு வந்திருந்த பதார்த்தங்களையும் தட்சிணைகளையும் பக்தியுடன் சமர்ப்பித்தார்.

பல நாட்கள் அக்கல்கோட்டில் தங்கியிருந்து மேலான ஆத்மானுபவங்களைப் பெற்ற சையத் ஐதராபாத்திற்குத் திரும்பிச் சென்றார்.

குருபக்திக்கு மதம் ஏதும் தடையில்லை என்பதை இந்த சையத் பாயின் அனுபவம் நமக்கு உணர்த்துகிறதல்லவா!

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



## 29. சிறுவனுக்குப் பார்வையும், ஞானமும் அளித்தல்

தேஷ்முக் என்ற பக்தரின் வீட்டில் சுவாமிகள் அமர்ந்திருந்தார். அருகே பாபா சபனீஸ், ராமதாஸி புவா, பாபா யாதவ், கோபால்பட், சுந்தராபாயி போன்ற பக்தர்களும் உடனிருந்தபோது, ஒரு பிராம்மணப் பெண் தமது கண்பார்வையற்ற சிறுவனையும் அழைத்து வந்திருந்தார். சிபுபாயி என்ற பக்தை சமர்த்தரிடம் அந்தச் சிறுவனுக்குக் கண் பார்வை அளிக்குமாறு வேண்டினார். அதற்கு சுவாமிகள், "ஐந்து ராட்சதர்கள் என்னைச் சோதிக்க வருகிறார்கள். அவர்கள் என்னைப் பரீட்சிக்கும்போது இந்த சிறுவன் கண் திறப்பான்" என்று ஆசீர்வதித்தார்.

இதற்குள்ளாக அங்கே ஐந்து வைஷ்ணவர்கள் மிகவும் கர்வத்துடன் வந்து சுவாமிகளை வணங்காமலேயே கீழே அமர்ந்தனர். அவர்கள் தங்களுக்குள் ஏதேதோ கன்னடத்திலும், சமஸ்கிருதத்திலும் பேசிக் கொண்டிருந்தனர். சுவாமிகள் ஜாதிமத பேதமில்லாமல் யார் கொடுத்தாலும் அன்னம் புசிக்கிறார். இந்த நியதி எந்த சாஸ்திரத்தில் உள்ளது? அதைக் கேட்டுவிட்டுப் போகலாம் என்று தாங்கள் வந்துள்ளதாகப் பேசிக்கொண்டிருந்தனர்.

அப்போது ஸ்ரீசுவாமிகள் அந்த சிறுவனைப் பார்த்து, "கணேசா, இங்கே வா! இந்த மனிதர்கள் மனதில் நினைப்பதையும் அதற்குச் சரியான பதிலையும் கூறு" என்று பக்கத்தில் அழைத்தார். அந்தச் சிறுவனும் சுவாமிகளின் பாதங்களை வணங்கி, "சுவாமி நான் இதுவரை ஒரு எழுத்தையும் பார்த்ததில்லை. என்னால் இவர்களது கேள்விகளுக்கு எப்படி பதில் சொல்ல முடியும்?" என்று வினவினான்.

பரமதயாளரான ஸ்ரீ சமர்த்தரும் அச்சிறுவனுக்கு தமது கழுத்திலிருந்த மாலையை அணிவித்து ஒரு மலரால் அவன் கண்களில் தடவியதும், என்னே ஆச்சரியம்! அச்சிறுவனுக்குக் கண்பார்வை வந்துவிட்டது.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அவன் ஆவேசத்துடன் அந்த ஐந்து வைஷ்ணவர்களின் எதிரே நின்று கொண்டு அவர்கள் தத்தம் மனதில் நினைத்துக் கொண்டிருந்த வேதவாக்கியங்களையும் பகவத்கீதையின் சுலோகங்களையும் அப்படியே கடகடவெனக் கூறி அங்குக் கூடியிருந்தவர்களை அதிர்ச்சிக்கு உள்ளாக்கினான். அந்த ஐவரின் ஐயங்களுக்கும் தக்க பதிலளித்து ஆச்சரியப்பட வைத்தான்.

எல்லாம் ஸ்ரீ சுவாமி மஹாராஜின் அனுக்ரஹத்தாலேயே என்று உணர்ந்து கொண்ட அந்த வைஷ்ணவர்கள் ஸ்ரீகளின் பாதங்களில் வீழ்ந்து தங்களை மன்னித்து அருளுமாறு கண்களில் நீர்மல்க வேண்டி நின்றனர். அவர்களில் ஒருவரைப் பார்த்து சமர்த்தர், "நான் யார் கொடுத்தாலும் சாப்பிடுகிறேன் என்று என்னைப் பரிசோதிக்க வந்தாயே, உன்தாய் ஒரு முஸ்லீமுடன் சேர்ந்ததால் நீ பிறந்தாய் என்று உனக்குத் தெரியுமா? அதைப்பற்றிய ஆராய்ச்சியை எப்போதாவது செய்திருக்கிறாயா?'' என்று கேட்டதும் அந்த வைஷ்ணவருக்குத் தூக்கி வாரிப்போட்டது. அவமானத்தால் தலைகுனிந்து அழ ஆரம்பித்துவிட்டார். பிறகு நிதானமாக சமர்த்தரிடம் தன்னை இந்தப் பாவத்திலிருந்து விடுவிக்க ஆசியருள வேண்டினார்.

பக்தவத்சல, கருணைக் கடலான ஸ்ரீசுவாமிகளும் அவர் மீது மனமிரங்கி, "கங்கையில் நீராடிப் பாகவத தர்மத்தை ஏற்றுக் கொண்டால், உனது பாவம் நீங்கும்" என்று ஆசியருளினார். பிறகு அந்த ஐவரும் தமது ஊருக்குச் சென்று ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜின் புகழைப் பஜனை, நாமாவளிகள் மூலம் பரப்பிப் பரமபக்தர்களாக வாழ்ந்தனர்.

இவ்வாறாக, தம்மை சோதிக்க வந்தவர்களையும் திருத்தி, தம்பால் பக்திகொள்ளச் செய்யும் சுவாமிகளின் கருணை எல்லையில்லாதது.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தன் மகனுக்குக் கண்பார்வை கிடைத்தாலே போதும் என்று ஏங்கித் தவித்து வந்த அந்தத் தாய்க்கு ஸ்ரீசுவாமிகள் புறக்கண் மட்டுமில்லாமல் அகக்கண்களையும் திறந்து விட்டு ஒரு ஞானியாக்கி அனுப்பியது அவர் போன்ற வெகுசிலருக்கே இயலக்கூடிய சாமர்த்தியமாகும்.

குருகடாட்சம் பரிபூரணம்

## 30. அன்னம் வளர்தல்

அகமதாபாத்திலிருந்து ஒரு பிராம்மணர் தமது மனைவியுடன் ஸ்ரீதரிசனத்திற்கு வந்திருந்தார். பயபக்தியுடன் தம்மை வணங்கியவரிடம் சுவாமிகள் சில உணவு வகைகளைக் கூறி அர்ப்பணிக்குமாறு ஆணையிட்டார். சமர்த்தர் கூறிய உணவு பதார்த்தங்களை எப்படிச் சமைப்பது என்று கணபதிராவ் என்ற பக்தரிடம் கேட்டுத் தெரிந்து சமைத்துத் தயாரான பிறகு சுவாமிகளை போஜனம் செய்ய வருமாறு அழைத்தார்.

அதற்குச் சுவாமிகளும், "அனைவரும் வயிறாரத் திருப்தியாகச் சாப்பிட்டால், யாம் சாப்பிட்டது போல. ஆகவே, அனைத்துப் பக்தர்களுக்கும் முதலில் பரிமாறு" என்று ஆணையிட்டார்.

அக்கல்கோட்டில் சமர்த்தரைத் தரிசிக்க நாலாபுறங்களிலிருந்தும் வந்திருந்த அனைவருக்கும் வயிறார உணவு பரிமாறிப் பிறகு தங்கள் இருவருக்கும் சுவாமி மஹராஜுக்குமாக மூன்று தட்டுகளில் சாப்பாடு எடுத்துவைத்துவிட்டு சமர்த்தரை உண்ண வருமாறு மீண்டும் அழைத்தனர்.

அப்போது வேறு ஓர் ஊரிலிருந்து இரண்டு பிராம்மணர்கள் மிகவும் பசியோடு அங்கே வந்து சேர்ந்தனர். அந்த பிராம்மணத் தம்பதியிடம் சுவாமிகள், "அவர்களுக்கும் பரிமாறு" என்று கூறினார். அவர்களும் முகம் கோணாமல் அந்த முதியவர்களுக்கும் தமக்காக எடுத்து வைத்திருந்த இரண்டு தட்டுகளையும் உண்ண அளித்தனர். அகோரப் பசியுடன் வந்திருந்த முதியவர்களும் அந்தச் சாப்பாடு மிகவும் ருசியாக



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இருந்ததால், இன்னும் வேண்டும் என்று கேட்ட போது, அந்த தம்பதியருக்குத் தர்ம சங்கடமாகி விட்டது. சுவாமிகள் மிகவும் விரும்பித் தமக்காகச் செய்யச் சொன்ன பதார்த்தங்களை இவர்களுக்கு அளிப்பதா, வேண்டாமா என்று, ஆயினும் பாதிவயிறு நிரம்பியவர்களை நிராசையாக்க விரும்பாமல் அந்த ஒரே தட்டு உணவையும் புதிய விருந்தினர்களுக்கே அளித்துத் திருப்திப்படுத்தினார்கள்.

மதிய உணவுக்குப் பிறகு அனைவரும் மீண்டும் சுவாமியின் தர்பாருக்குச் சென்ற போது சமர்த்தர், தமது வயிறை நன்றாக தடவி விட்டுத் திருப்தியுடன் ஏப்பமும் விட்டதைப் பார்த்து அனைவருக்கும் ஆச்சரியமானது. பின்னர் சுவாமிகள் ஒவ்வொரு பதார்த்தத்தின் ருசியைப் பற்றி விரிவாகப் புகழ்ந்ததைக் கேட்டு அனைவரும், சுவாமிகள் இன்னும் சாப்பிடவேயில்லை, ஆயினும் வயிறு நிரம்பியது எப்படி? அதுவும் ஒவ்வொரு பதார்த்தத்தின் இனிப்பு, காரம், புளி, உப்பு எப்படி இருந்தது என்று எப்படி தெரிந்தது என்று அதிசயித்தனர். அந்தர்யாமியான தத்த அவதாரி அனைத்து ஜீவராசிகளிலும் குடி கொண்டுள்ளதை நாம் அறிவோமா?

சுவாமிக்காக ஆசையாகவும், பக்தியுடனும் சமைத்ததை அவருக்கு ஊட்ட முடியவில்லையே என்று கவலையுடன் நின்றிருந்த அந்த பிராம்மணத் தம்பதியைப் பார்த்து சமர்த்தர், "என்ன இங்கே நின்று கொண்டிருக்கிறீர்கள். என் சாப்பாடு எங்கே? கொண்டு வாருங்கள்" என்று கட்டளையிட்டதும் அவர்களும், "சுவாமி ஒரு பருக்கைக் கூட மீதமில்லாமல் அனைவருக்கும் பரிமாறி விட்டோம்" என்று பதிலளித்தனர்.

அதை மறுத்த சுவாமிகள், "உன் வீடு நிறைந்திருக்கிறது. போய்ப்பார்!" என்று ஆசியருளினார். என்ன அதிசயம்! காலிப் பாத்திரங்கள் அனைத்திலும் அவர்கள் முதலில் செய்த பதார்த்தங்கள் மீண்டும் நிரம்பி வழிந்து கொண்டிருந்தன. சுவாமிகளே அன்னபூரணிதானே! பிறகு சுவாமிகளுக்கு மகிழ்ச்சியாக ஊட்டி, தாங்களும் வயிறார அந்த மஹா பிரசாதத்தை உண்டு பரமானந்தம் அடைந்தனர்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



குருவின் வாக்கு பரமஸத்யமானது. அவரின் கருணை வெள்ளம் அனைத்து ஜீவராசிகளுக்கும் பாரபட்சமில்லாமல் கிடைக்கும். நம்புவோம்! நலம் பெறுவோம்!

குருகடாட்சம் பரிபூரணம்

## 31. 60வயது மூதாட்டிக்கு குழந்தை வரம்

தளே என்ற கிராமத்திலிருந்து ஒரு வயதான மராட்டிய தம்பதிகள் சுவாமிகளுக்கு வெகு நாட்கள் சேவை செய்தபின் ஒரு நாள் தங்களுக்குக் குழந்தைப் பாக்கியம் தருமாறு பயபக்தியுடன் பிரார்த்தித்தனர். தீனதயாள சமர்த்தரும் ஒரு தேங்காயை அந்த மராட்டிய அம்மணியின் பக்கம் உருட்டி விட்டார். பக்கத்திலிருந்தவர்கள் அவரிடம் "உமது வயது என்ன"? என்றதற்கு 60 என்று அம்மணி பதிலளித்தார்.

சத்குருவின் கிருபையால் ஒரு வருடத்தில் அந்த மூதாட்டிக்கு அழகான ஆண் குழந்தை பிறந்தது. அனைவரும் ஸ்ரீசுவாமி மஹராஜின் கருணையைப் புகழ்ந்தனர். யாராவது அக்கல்கோட் மஹராஜின் பெருமையைப் பற்றி கூறினால் அந்த அம்மணியின் கண்களில் கண்ணீர் தாரை தாரையாகப் பெருக்கெடுக்கும். கலியுக அவதாரியின் அருள் பெற்ற அந்தத் தம்பதியர் நீடுழி வாழ்ந்தனர்.

குருகடாட்சம் பரிபூரணம்

## 32. அதிகாரியின் கர்வம்

அக்கல்கோட்டிலிருந்து ஏழு மைல் தொலைவில் மொகலாயியில் கேசி என்ற கிராமம் உள்ளது. அந்தக் கிராமத்தில் அப்பா பாடீல் என்ற பக்தர் இருந்தார். ஸ்ரீசமர்த்தர் அவ்வப்போது அங்கு செல்வதுண்டு.

ஒரு தடவை கேசியில் உள்ள ஆஞ்சநேயர் ஆலயத்தில் சுவாமிகள் தங்கியிருந்தார். சுவாமிகளின் வருகையால் ஆனந்தமடைந்த அப்பாபாடீலும் தரிசனம் செய்து சுவாமிகளுடன் வந்திருந்த அனைத்து பக்தர்களுக்கும் உணவளித்து மகிழ்ந்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



நலதுர்கா மாவட்டத் துணை ஆட்சியாளரும் சுவாமிகளின் வருகையைக் கேள்விப்பட்டுத் தமது அதிகாரிகளுடன் தரிசனத்திற்கு வந்தார். அவருடன் வந்த தாலுக்தார் சமர்த்தரைத் தமது ஊருக்கு வருமாறு அழைத்தார். சுவாமிகளும் "லகான்பூட்டிய குதிரையுடன் வந்தால் வருகிறேன்" என்று பதிலளித்தார். அதனுடைய பொருள் அவருக்கு விளங்கவில்லை. அதாவது, உன்னுடைய ஆணவம் குறைந்த பிறகு உன்னுடன் வருகிறேன் என்பது அர்த்தம்.

அந்தத் தாலுக்தாரும் தன்னுடைய லகான்பூட்டிய குதிரையை சுவாமிக்காக அளித்துவிட்டு தாம் இன்னொரு குதிரையில் செல்லலாம் என்று நினைத்து, அந்த ஊரில் குதிரையை விலைக்கு வாங்குவதற்காகச் சென்று பார்த்தார். அப்போது அப்பா பாடீலின் வீட்டில் நின்றிருந்த அழகான குதிரையை 300 ரூபாய் கொடுத்து வாங்கலாம் என்று வீட்டிற்குள் சென்றார். அப்பா பாடீலும் அவரது குடும்பத்தினரும் ஆஞ்சநேயர் கோவிலில் சுவாமி சேவையில் இருந்ததால் வீட்டில் வேலைக்காரி மட்டுமே இருந்தாள். அவள் பலமுறை அவரிடம் கூறியும் கேளாமல், பலவந்தமாக அந்த குதிரையை இழுத்து வர முயற்சித்துக் கொண்டிருந்தார். அந்த வேலைக்காரப் பெண்மணியும் ஓடோடி வந்து அப்பாவிடம் நடந்ததைக் கூறியதும் பாடீல் தமது வீட்டிற்கு விரைந்தார்.

தாம் ஆசையாகக் குழந்தைபோல் வளர்த்த அந்தக் குதிரையை விட்டுவிடுமாறும் அதற்குப் பதிலாக நான்கு குதிரைகளைத் தாம் வாங்கித் தருவதாக எவ்வளவோ கூறியும் தாலுக்தார், "நான் ஒரு அதிகாரி என்பதை மறந்து விட்டாயா? எனக்கு இந்தக் குதிரைதான் வேண்டும்'' என்று பிடிவாதமாகயிருந்தார். கடைசியாக வெறுங்கையுடன் திரும்பிய தாலுக்தார் சமர்த்தரைத் தன் குதிரையில் வருமாறு அழைக்கவும் சுவாமிகள் "யாம் வரமாட்டோம். நீயே உட்கார்ந்து போ" என்று மறுத்து விட்டார்.

இந்நிகழ்ச்சிக்குப் பிறகு கிராமத்து அதிகாரியான அப்பா பாடீல், வேலை நிமித்தம் நலதுர்கா ஆட்சியாளர் அலுவலகத்துக்கு சென்ற போது, அந்த தாலுக்தார் தமக்குக் குதிரையை விற்காததற்காகவும் தம்மை அவமரியாதை


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



செய்ததற்காகவும் அவர்மீது பொய் வழக்குப் போட்டு இன்னும் எட்டு நாட்களுக்குள், "உமக்கு விலங்கு மாட்டுகிறேன் பார்" என்று சூளுரைத்துக் கடுமையாகத் திட்டி அனுப்பினார்.

ஆனால் என்னே ஆச்சரியம்! அந்த தாலுக்தார் மீது அவரது அரசாங்க விரோதச் செயல்களுக்காக வழக்கு தொடரப்பட்டு எட்டு நாட்களுக்குள் கைகளில் விலங்கு மாட்டி, வேலையும் பறிபோனது. பதவிவரும்போது பணிவும் வரவேண்டும் என்ற தத்துவத்தை அறியாத அந்தக் கர்வம் பிடித்த அதிகாரியின் கதை இவ்வாறாகச் சோகமயமாக முடிந்தது.

தூய்மையான பக்தர்கள் வழிக்கு யாராவது வந்தால் ஸ்ரீசுவாமிகள் அவர்களை விடுவதில்லை. சுவாமியின் பக்தர்களிடம் தேவாதி தேவர்களே அன்பு செலுத்தும் போது, சாதாரண மனிதர்கள் எம்மாத்திரம்?

குருகடாட்சம் பரிபூரணம்

## 33. மைசூர் நரசப்பாவிற்கு வைகுண்ட தரிசனம்

60 வயது நிரம்பிய நரசப்பா என்ற பக்தர் மைசூரிலிருந்து அக்கல்கோட் வந்து தங்கியிருந்தார். கன்னடம் மட்டுமே தெரிந்த அவருக்கு மராத்தியும், இந்தியும் சில வார்த்தைகளே தெரிந்திருந்தன. அதனால் ஸ்ரீசமர்த்தரிடம் தமது மனதில் உள்ள எண்ணங்களை வெளியிட முடியாமல் தவித்தார். தினமும் ஸ்ரீசுவாமி மஹராஜை தரிசனம் செய்தபிறகு அவரது சன்னதியில் அமைதியாக அமர்ந்திருந்தார்.

ஸ்ரீகளின் தர்பாரில் அவ்வப்போது கீதை பாராயணம் செய்யப்படும். ஸ்ரீதத்தாத்திரேய புவா என்ற சாஸ்திரிகள் உபன்யாசம் செய்வார். அப்போது ஒரு நாள் தூரத்தில் அமர்ந்திருந்த நரசப்பாவைக் கண் சைகையால் சமர்த்தர் தமக்கு அருகில் வருமாறு அழைத்தார். மிகவும் மகிழ்ச்சியுடன் சுவாமிகளைச் சாஷ்டாங்கமாக வணங்கிவிட்டுக் கைகளை கூப்பி நின்றார் நரசப்பா. பகவத் கீதை பாராயணம் செய்பவர்களுக்கு அதன் பிரதிகளைக் கொடுப்பது வழக்கம். அதை கவனிக்கும் ஒரு பக்தரிடமிருந்து சுவாமிகள் ஒரு நூலை வாங்கி நரசப்பாவிடம் கொடுத்து, "பகவத்கீதையைப் படி, நீ நினைத்தது நடக்கும்" என்று ஆசீர்வதித்தார். நரசப்பாவும் தமக்குச் சமஸ்கிருதமோ, இந்தியோ



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தெரியாததால் அதை எப்படி படிப்பது? என்று சந்தேகத்துடன் அதை திறந்து பார்த்தபோது, ஆச்சரியம் தாங்க முடியவில்லை. ஆம்! அது கன்னட மொழியில் இருந்ததே அதற்குக் காரணம்.

பாராயணத்தை முடித்துவிட்டுத் திரும்பிக் கொண்டிருந்த தத்தாத்திரேய புவாவிடம் தமக்குக் கீதை கற்றுக் கொடுக்குமாறு நரசப்பா வேண்டினார். அவரது கையிலிருந்த புத்தகத்தை வாங்கிப் பார்த்த புவா அது கன்னட மொழியிலிருந்ததைக் கண்டு ஆச்சரியமடைந்தார். உடனே விறுவிறுவென்று நூல்களை விநியோகித்த பக்தரிடம், "கன்னட பகவத்கீதை உள்ளதா?" என்று விசாரித்தார். அவரும், இல்லை என்று கூறினார். அன்று விநியோகிக்கப்பட்ட அனைத்துப் பிரதிகளையும் வாங்கிச் சோதித்த போதும் அவை யாவும் சமஸ்கிருதத்திலேயே இருந்தது கண்டு, இது ஸ்ரீசுவாமிகளின் லீலையே என்று உணர்ந்து மகிழ்ந்தார். நரசப்பாவிற்குப் பகவத்கீதை கற்றுத் தருவதாக உறுதியளித்தார்.

அது ஒரு நடுநிசி வேளை. தத்தாத்திரேய புவாவும் இன்னொரு சந்யாசியும் வேத உபநிடதங்களைப் பற்றி விவாதித்துக் கொண்டிருந்தபோது அருகில் நரசப்பா நன்றாக உறங்கிக் கொண்டிருந்தார். திடீரென்று தூக்கம் கலைந்த நரசப்பா, "ஆஹா ஸ்ரீசுவாமி சமர்த்தர் ஈஸ்வரனே" என்று ஆனந்தக் கண்ணீருடன் கூறினார்." "எதை வைத்து அப்படிச் சொல்கிறீர்கள்?" என்று அந்த இருவரும் கேட்டதற்கு நரசப்பா, "ஸ்ரீசுவாமி சமர்த்தர் என்னை வைகுண்டத்திற்கு அழைத்துச் சென்றார். தங்கமயமான அந்த இடத்தில் அழகிய சிம்மாசனத்தில் குடையின் கீழ் தேவர்கள் சாமரம் வீச, ஸ்ரீராமன் சீதையுடன் அமர்ந்திருந்தார். அருகே இலட்சுமணனும் பரத சத்ருக்கனர்களும் கீழே அனுமானும் அமர்ந்திருந்த அந்தத் திவ்ய தரிசனத்தைக் காட்டி மீண்டும் என்னை அழைத்து வந்து விட்டார்" என்று சொல்லி முடித்தார். அந்த நிகழ்வுக்குப் பிறகு நரசப்பா தாமாகவே சிரிப்பதும் அழுவதுமாக அந்தப் பரமானந்த நிலையிலேயே இரவு முழுவதும் விழித்திருந்தார்.

பிறகு நரசப்பாவின் கைகளில் கட்டி ஏற்பட்டு ஒருவாரம் வரை பொறுத்திருந்தும் குணமாகாததால் சமர்த்தரிடம் சென்று வேண்டினார். அப்போது சுவாமிகள் புகை பிடித்துக் கொண்டிருந்தார். உடனே சமர்த்தர், "நல்லது, உன் கையை


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இப்போதே குணமாக்குகிறேன்" என்று கூறி அந்த புண்ணின் மீது புகையை ஊதினார். சில நாட்களில் கட்டி மறைந்தது.

சுவாமிகளின் எண்ணிலடங்காத் திருவிளையாடல்களில் இதுவும் ஒன்று. ஸ்ரீ சமர்த்தரின் சாமர்த்தியங்களையும் பக்தர்கள் மேல் அவர் வைத்திருந்த தணியாத பேரன்பு பற்றியும் இனிவரும் பக்கங்களில் மேலும் பார்ப்போம்.

குருகடாட்சம் பரிபூரணம்

## 34. வாமன்புவாவிற்கு பிரத்யட்ச ஆசி

வாமன் புவா படோத்கர் என்ற பக்தரின் உடல்நிலை மிகவும் மோசமாக **(Multiple Disorder)** இருந்தது. பரோடா என்ற ஊரில் ஸுரசாகரம் என்ற இடத்தில் சுதாமனுடைய வீட்டில் வசித்து வந்தார். அவர் படும் அவஸ்தையால் அந்த வீட்டிலிருந்த அனைவரது நிம்மதியும் பறிபோனது. அவரால் அமரவோ, நடக்கவோ, தூங்கவோ, சாப்பிடவோ எதுவும் முடியவில்லை. சிறுநீரகம், மூலநோய், கண்பாதிப்பு இன்னும் பலநோய்கள் முற்றிய நிலையில் வாழ்வதா? இறப்பதா? என்ற துன்பத்தின் எல்லையில் இருந்தார்.

அந்த நிலையிலும் அவர் ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜின் நாம ஜபத்தையும் பிராணாயாமத்தையும் விடாமல் செய்து கொண்டிருந்தார். அக்கல்கோட்டுக்குத் தம் நிலையை விளக்கி, தமக்கு உடல்நலம் அருளுமாறு சுவாமிகளுக்குக் கடிதம் அனுப்பியிருந்தார். வெகு நாட்கள் காத்திருந்தும் எந்தப் பதிலோ, பிரசாதமோ வராமல் போகவே மிகவும் ஏமாற்றமடைந்தார்.

ஒருநாள் நடுநிசி, இரவு பனிரெண்டு மணியளவில் யாருக்கும் தெரியாமல் கஷ்டப்பட்டு எழுந்து சென்று அருகிலிருந்த ஸுரசாகர ஏரியில் தண்ணீரில் மூழ்கி இறந்து விடுவதாகத் தீர்மானித்து அப்படியே நீரிலும் இறங்கிவிட்டார். அப்போது சற்றும் எதிர்பாராத விதத்தில் பக்தவத்சல, கருணாசாகர ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜ் பிரசன்னமாகி, புவாவை பார்த்து மிகவும் கோபமாக, "மூர்க்கனே! உன்வினை நீ



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அனுபவிக்காமல் எப்படிக் கழியும்! இன்னும் உனக்கு ஆயுசு இருக்கும்போது எதற்காக வீணே உயிரை விட நினைக்கிறாய்? என்னை ஏன் தொந்தரவு செய்கிறாய்? இயற்கையான மரணத்தைத் தழுவாமல் ஏன் தண்ணீரில் மூழ்கி வீணே உயிரை மாய்த்துக் கொள்கிறாய்?" என்று பலவாறாகத் திட்டித் தரதரவென்று இழுத்து வந்து அவரை வீட்டு வாசலில் கொண்டு வந்துவிட்டார். பிறகு அவரது தலையில் கைவைத்து, "உன் நோய் முற்றிலும் நீங்கும். சேஷ்டை செய்யாமல் அமைதியாக இரு" என்று ஆசி கூறிச் சிறிது தூரம் வரை சென்று மறைந்து விட்டார்.

இதற்குள்ளாக வாமன் புவாவை அவரது வீட்டில் எங்கு தேடியும் காணாமல் உறவினர்கள் வாசலில் வரவும், சுவாமிகள் புவாவிற்கு ஆசி கூறிவிட்டு, அவர்களது கண்களிலிருந்து மறையவும் சரியாக இருந்தது.

இந்த அதிசயத்தைக் கண்ட அனைவரும் தம் கண்களைத் தாமே நம்ப முடியாமல் திகைத்து நின்றிருந்தனர். எங்கும் நிறைந்த பரம்பொருளின் அவதாரமான ஸ்ரீசமர்த்தரின் ப்ரத்யட்ச தரிசனத்தையும் ஆசியையும் பெற்ற வாமன்புவா சிறிது நாட்களில் தமது உடல் உபாதைகளிலிருந்து விடுபட்டு நலமடைந்தார்.

ஒரு தத்தஜெயந்தியின்போது வாமன்புவா அக்கல்கோட் வந்து ஸ்ரீசுவாமிகளைத் தரிசித்து பயபக்தியுடன் கைதொழுது நின்றார். சுவாமிகள் அவரைப் பார்த்து, "என்ன புவா? குளத்தில் மூழ்கி உயிரை விட நினைத்தவன் நீதானே? அந்த ஸுரசாகரத்தை அசுத்தமாக்க நினைத்தாயே?" என்று சிரித்துக் கொண்டே கூறினார். சுவாமியின் சாட்சாத்காரத்தை அனுபவித்த புவாவும் கண்களில் நீர் மல்க நன்றிப் பெருக்குடன் அமைதியாக நின்றிருந்தார்.

அப்போது அக்கல்கோட்டில் கொடிய பஞ்சம் ஏற்பட்டது. சுவாமியின் சமஸ்தானத்தில் வருவாய் ஏதுமில்லாமல் அந்த வருட தத்த ஜெயந்தியை மிகவும் சிக்கனமாக நடத்துவது என்று அதை கவனிக்கும் பக்தர்கள் நினைத்திருந்தனர். அவர்களைப் பார்த்துச் சமர்த்தர் மிகவும் கோபமாக, "உங்க அப்பனுடைய சிரார்த்தத்தை சிக்கனமாக நடத்து! இங்கே அனைவருக்கும்


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இனிப்பு, நெய்யுடன் திருப்தியாக அன்னதானம் நடக்கட்டும்!" என்று ஆணையிட்டார். சிறிது நேரத்தில் ஒருபெரிய பணக்காரர் அங்கு வந்து, "அன்னதானத்திற்குத் தேவையான செலவு எவ்வளவானாலும் அடியேன் ஏற்றுக் கொள்கிறேன்" என்று கூறியதும் அனைவருக்கும் கவலை நீங்கியது. அந்த வருடம் தத்த ஜெயந்தி சீரும் சிறப்புமாகச் சுவாமிகளின் ஆசியால் நடந்தேறியது.

குருகடாட்சம் பரிபூரணம்

## 35. பிராணாயாமம்

வாமன் புவா படோத்கர் (தண்ணீரில் மூழ்கி தற்கொலை செய்து கொள்ள முயன்ற போது சுவாமிகளால் பிரத்தியட்சமாகத் தோன்றிக் காப்பாற்றப்பட்டவர்) பிராணாயாமம் செய்யும் வழக்கம் உள்ளவர். ஒரு தடவை அக்கல்கோட் வரும் வழியில் கடப்பாவிற்கு ரயிலில் வந்து இறங்கினார். அப்போது அவரது நாசியில் ஸூரிய நாடி (வலது) ஓடிக்கொண்டிருந்தது. ஆனால் சத்குருவை தரிசிக்கும் போது சந்திர நாடி (இடது) இருந்தால் நல்லது என்று நினைத்த அவர் எவ்வளவோ முயன்றும் தமது நாடியை (சுவாசத்தை) மாற்ற இயலவில்லை.

ஒரு குதிரை வண்டியில் கடப்பாவிலிருந்து புறப்பட்டு அக்கல்கோட்டிலிருந்த இராமன் ஆலயத்துக்கு வந்து சேர்ந்தார். அங்கேயும் தமது சுவாசபந்தனத்தால் மூச்சை வேறு நாசிக்கு மாற்ற முயன்றும் பலனில்லை. பிறகு சமர்த்தரின் தரிசனத்திற்கு வந்து, தாம் அன்புடன் கொண்டு வந்திருந்த பழங்களைச் சுவாமிகளுக்கு அர்ப்பணித்து விட்டு சுவாமிக்கு நமஸ்காரம் செய்து நின்றார்.

சுவாமிகள் தமது கைவிரல்களை மூக்கின்மேல் பிராணாயாமம் செய்வதைப்போல வைத்துக் கொண்டு, வாமன் புவாவை நோக்கி, "என்ன செய்வது? சத்குருவின் தரிசனத்தின் போது ஏன் சந்திரநாடி வரவில்லை?" என்று வினவி பிறகு, "மூக்கின் பாஷைகளை விட்டு தள்ளு! அப்படிக் காற்றை அடக்குவதால் என்ன ஆகப்போகிறது? மூக்கிலிருந்து காற்றை



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அடக்கினால் அது வாய் மூலமோ அல்லது மலத்துவாரத்தின் மூலமோ வெளியேறப் போகிறது. அவ்வளவுதானே! இனிமேல் அப்படி செய்யாதே" என்று அருளினார். பின்பு சத்குருநாதர் பின்வரும் சுலோகத்தைப் பாடினார்.

"த்யானமூலம் குரோர் மூர்த்தி :। பூஜாமூலம் குரோர் பதம்।।

மந்த்ரமூலம் குரோர் வாக்யம்। மோக்ஷமூலம் குரோர் க்ருபா।।

"ந தத் பாஸ்யதே ஸுர்யோ ந சசாங்கோ ந பாவக:।

யத்கத்வா ந நிர்வதந்தே தத் தாம பரமம் மம।।"

பிறகு, "எப்போதும், ஆனந்தமாக இரு" என்றும் ஆசி கூறினார்.

சமர்த்தரின் இந்த அமிர்தமயமான திருவாக்கில் மகிழ்ச்சியுற்ற புவாவும், சுவாமிகளை நோக்கி, "நிர்உபாதிக், நிர்விகார, ப்ரஹ்மானந்த சத்குருவே எங்கும் நிறைந்திருக்கும் பரம்பொருள் என்று உணராமல், பிராணாயாமத்தில் என் மனதைச் செலுத்தி என் காலத்தை வீணடித்துவிட்டேன். என்னை மன்னித்து அருள்வீராக, இனிமேல் இந்த சுவாசபந்தனத்தில் இறங்கமாட்டேன்" என்று பிரார்த்தித்தார்.

பரமதயாள சுவாமிகளும், "அடேய், ஆன்மா சந்திர சூரியனுமல்ல, அது உதயமாவதும் இல்லை. அஸ்தமனமாவதும் இல்லை. அது என்றும் எப்போதும் மாறாமல் உள்ளது என்பதை அறிவாயாக" என்று அருளி அடியவர்களுக்குப் பக்தி மார்க்கமே சிறந்தது என்ற பேருண்மையை உபதேசித்தருளினார்.

ஸ்ரீசமர்த்தரின் மறு அவதாரமான சீரடி சாயிபாபாவும், இந்தக் கருத்தையே "யாரும் பிறக்கவுமில்லை. இறக்கவும் இல்லை" **(None is Born, None Dies.)** என்று போதித்தார்.

குருகடாட்சம் பரிபூரணம்

## 36. ஊமையைப் பேச வைத்தல்

ஒரு வாய் பேச முடியாத பிராம்மணர் சுவாமிகளுக்குப் பன்னிரண்டு வருடகாலம் தொடர்ந்து பக்தி செய்து வந்தார். அவர்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



மீது கருணை பொழியச் சமர்த்தர் திருவுளங்கொண்டு தாம் சுவைத்த தாம்பூலத்தை அவரிடம் கொடுத்து, "இதைச் சாப்பிட்டு உனது வேலையை ஆரம்பி" என்று அருளினார். சுவாமிகளின் உச்சிஷ்டத்தை உண்ட அந்த ஊமையும் மடமடவென்று பேசி அனைவரையும் ஆச்சரியத்திலாழ்த்தினார்.

மஹாகவி காளிதாசனுக்குத் தேவி மஹாகாளி தமது தாம்பூலத்தை அளித்துப் பேசவைத்து உலகமே போற்றும் உத்தமக் கவிஞனாக்கியதை இங்கே நினைவு கூறுவோம்.

ஒரு சாதகனுக்கு அன்னையும், பிதாவும், தோழனும், உறவினரும், உண்மையான ஞானமும், சொத்தும் தமது குருவேயன்றி வேறு யாருளார்?

குருகடாட்சம் பரிபூரணம்

## 37. பாண்டு ஆசாரி

அக்கல்கோட்டிலிருந்து ஆறுமைல் தொலைவில் உள்ள மைந்தர்கீ என்ற ஊரில் பாண்டு என்கிற பொற்கொல்லர் (ஆசாரி) வாழ்ந்து வந்தார். இவர் சுவாமி சமர்த்தரின் பரம பக்தர். கடன் தொல்லையால் அவதிப்பட்ட அவரிடம் ஒரு பணக்காரர் தங்க இழைகளைக் கொடுத்து, அவற்றை உருக்கி நகை செய்து கொடுக்குமாறு வேண்டினார்.

தங்கத்தைப் பார்த்ததும் ஆர்வ மிகுதியாலும் தமது கடன் தொல்லையிலிருந்து விடுபடும் ஆசையாலும் அவற்றை விற்றுத் தமது கடன்களைத் திருப்பிக்கொடுத்தார். பிறகு வெள்ளியினால் நகைகளைச் செய்து அவற்றுக்குத் தங்க முலாம் பூசி தனவந்தரிடம் கொடுத்து விட்டார். எப்படியும் தாம் தண்டிக்கப்படுவது உறுதி என்று நிச்சயித்த ஆசாரி சுவாமியின் நாமத்தை ஜபித்தபடி காலங்கழித்தார்.

அந்த நாளும் வந்தது. போலி தங்க நகைகளைக் கொடுத்துத் தம்மை ஏமாற்றியதாகப் பாண்டுவை கைது செய்து நடவடிக்கை எடுக்குமாறு தனவந்தர் அரசாங்கத்திடம் புகார் கொடுத்தார். அப்போது நாட்டில் பஞ்சம் நிலவியதால் யாரையும்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சிறையில் அடைக்காமல் கசையடி மட்டும் கொடுத்து, பிறகு வழக்கை மீண்டும் நடத்துவதாக அரசாங்கத்தில் முடிவெடுக்கப்பட்டிருந்ததால், பாண்டுவையும் கசையடி மட்டும் கொடுத்து வீட்டிற்கு அனுப்பி வைத்தனர்.

மீண்டும் வழக்கு விசாரணைக்கு வந்தபோது பாண்டு ஆசாரியைக் கைது செய்து அதிகாரிகள் அவரது தண்டனையை நிர்ணயிக்க நாள் குறித்தனர்.

அன்றைய தினம் அக்கல்கோட்டில் சமர்த்தர் காலையில் எழுந்ததும் வெந்நீரில் அவரைக் குளிப்பாட்ட பக்தர்கள் தயார் செய்து கொண்டிருந்தபோது சுவாமிகள் அவசரம், அவசரமாக, “இன்று குளியல் இல்லை. உடனே பல்லக்கைத் தயார் செய்யுங்கள். வெளியூர் போக வேண்டும்” என்று கூறினார். சுவாமிகள் எங்கே போகிறார் என்பதை யாராலும் ஊகிக்க முடியாது. ஏனென்றால் அவர் கிழக்கு நோக்கிப் போவது என்றால் முதலில் வடக்கில் சென்று, மேற்கு திசையில் வந்து பிறகு கிழக்குப்புறம் செல்வார். பக்தர்களும் சுவாமிகளுடன் புறப்பட்டனர்.

மதியம் மூன்று மணியளவில் மைந்தர்கீ சென்றடைந்த சுவாமிகள் சாப்பிடாமலேயே நேராக நீதிமன்றத்திற்கு விறுவிறுவென்று சென்றார். சுவாமி சமர்த்தரைச் சற்றும் எதிர்பாராத நீதிபதியும் தமது இருக்கையைவிட்டு எழுந்து நமஸ்கரித்துச் சுவாமிகளை தமது இருக்கையிலேயே அமருமாறு பிரார்த்தித்தார். தமக்கு அருள் செய்யச் சுவாமிகளே நேரில் வந்ததைக்கண்டு பாண்டுவுக்கு மகிழ்ச்சி மேலோங்கியது. ஆனால் நீதிபதியோ தம்மைப் பார்க்கவே சுவாமிகள் வந்ததாக நினைத்துக் கொண்டிருந்தார்.

குற்றவாளிக்கூண்டில் நின்றிருந்த பாண்டுவைப் பார்த்ததும் சுவாமிகள், “இங்கே வா” என்று தமதருகில் வரவழைத்தார். தாய்ப்பசுவிடம் கன்று ஓடிவருவதைப் போல பாண்டுவும் உடனே சுவாமிகளிடம் வேகமாக வந்து கைதொழுது நின்றார். பக்தவத்சல,கருணாசாகர, ஆபத்பாந்தவனான சமர்த்தர் ஒரு கைதியிடம் இவ்வளவு பிரியமாக நடந்து கொள்வதைப் பார்த்த நீதிபதிக்கு ஆச்சரியமாக இருந்தது. அருகே நின்ற பாண்டுவிடம் சுவாமிகள் “பதட்டப்படாதே, உட்காரு”! என்று அமைதிப்படுத்தி அமரச்சொன்னார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சிறிதுநேரத்தில் சுவாமிகள் நீதிமன்றத்தை விட்டு வெளியில் செல்லும்போது பாண்டுவையும் தம்முடன் அழைத்துச் சென்றார். அக்கல்கோட் சுவாமிகளே நேரில் வந்து பாண்டுவைத் தம்முடன் அழைத்துச் சென்றதால் பாண்டுவை அரசாங்கமும் விடுதலை செய்து வழக்கை முடித்தது.

பாண்டு தாம் இனிமேல் இந்தத் தவற்றைச் செய்ய மாட்டேன் என்று சபதம் எடுத்துக்கொண்டு சுவாமிகளுடன் அக்கல்கோட் சென்று சேவை செய்யலானார்.

குருகடாட்சம் பரிபூரணம்

## 38. போலீஸ் - துறவியானார்

மைந்தர்கீயில் ஒரு இஸ்லாமியர் சிறைத் தலைமைக் காவலாளியாகப் (ஜமாதார்) பணிபுரிந்து வந்தார். ஒரு நாள் மாலை கைதிகளை எண்ணும்போது ஒருவன் தப்பியோடிய செய்தி கேட்டு அதிர்ச்சியுற்றார். அவன் எங்கு தேடியும் கிடைக்கவில்லை. கைதியைத் தப்பிக்க வைத்த குற்றத்திற்காகத் தன் மீது பழிவந்து தண்டனையும் அவமானமும் அடைய நேரிடுமே என்று மிகுந்த கவலையடைந்தார்.

அவர் சுவாமி சமர்த்தரின்பால் மிகுந்த பக்தியுடையவராகயிருந்தார். சுவாமிகளிடம் மானசீகமாக, “சத்குருவே, அந்தக் கைதியை மீண்டும் பிடித்து அரசாங்கத்திடம் ஒப்படைக்க அருள் செய்வீராக! அப்படிச் செய்துவிட்டால் நான் எனது போலீஸ் பதவியை ராஜினாமா செய்து விட்டு, என்றும் தங்களது அன்புத் தொண்டனாவேன்” என்று உறுதிமொழி எடுத்துக் கொண்டார்.

மறுநாள் காலையில் குதிரை மீது சவாரி செய்து கொண்டே சிறைக்கண்காணிப்பில் ஈடுபட்டிருந்த ஒரு காவலாளி ஒரு மறைவான பள்ளத்தில் அந்தக் கைதி ஒளிந்திருப்பதைப் பார்த்து அவனைப் பிடித்து வந்து இஸ்லாமிய ஜமாதாரிடம் ஒப்படைத்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஜமாதாருக்கு சொல்லவொண்ணா மகிழ்ச்சி ஏற்பட்டது. அந்தக் கைதியிடம், "இரவு முழுவதும் எப்படி அங்கேயே ஒளிந்திருந்தாய்? நீ தப்பிக்க முயற்சிக்கவில்லையா?" என்று கேட்டார்.

அதற்கு அந்தக் கைதியும், "நான் பள்ளத்தில் இருந்து ஏறி தப்பிக்க முயன்றபோது ஒரு சந்நியாசி என்னை அடித்து விடுவதாக பயமுறுத்தினார். இரவு முழுவதும் அவர் இங்கேயே சுற்றிக் கொண்டிருந்ததால் என்னால் தப்பிச்செல்ல முடியவில்லை" என்று பதிலளித்தார்.

அப்போதுதான், ஜமாதார் தமது பிரார்த்தனையை ஏற்று அக்கல்கோட் சுவாமி மஹராஜே இங்கே வந்து தமக்கருள் செய்துள்ளார் என்பதை அறிந்து பெருமகிழ்ச்சியுற்றார்.

கைதியை ஒப்படைத்து விட்டு கூடவே, தாம் சுவாமிக்கு வாக்களித்தபடி தமது பதவியையும் துறந்து அக்கல்கோட் விரைந்தார்.

சமர்த்தரைத் தரிசித்த ஜமாதாருக்கு வேறு வருமானமில்லாததால் பசியோடிருப்பதைப் பார்த்த சுவாமிகள் சோளப்பாவிடம், ''இவருக்குத் தினமும் இரண்டு ரொட்டிகளைக்கொடு" என்று ஆணையிட்டார். எட்டு நாட்கள் கழிந்தன.

வேலையில்லாத இஸ்லாமியருக்குத் தினமும் உணவு அளிக்கச் சிறிதும் விருப்பமில்லாத சோளப்பாவும், அவரைச் சுவாமிகளின் அருகில் அமரக்கூட விடாமல் துரத்தியடித்தார்.

சர்வாந்தர்யாமியான சமர்த்தரும் இதைப்பொறுக்காமல், ஜமாதாரை நோக்கித் தமது பாதுகைகளை வீசியெறிந்து, "மைந்தர்கீக்கு போ" என்று ஆசியருளினார். ஜமாதாரும் சுவாமிகளின் திருப்பாதுகைகளைத் தமது தலையின் மீது வைத்துக்கொண்டு பேரானந்தமாகத் தமது ஊருக்குத் திரும்பிச் சென்றார். தமது வீட்டிலேயே பாதுகைகளை வைத்துப் பூஜிக்கலானார். ஒரு இந்து சந்யாசியுடைய காலணிகளை வைத்து ஜமாதார் பூஜை செய்து வழிபடுவதும், வேலையை ராஜினாமா செய்து வருமானத்துக்கு வழியில்லாமல் போனதும்


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அவரது மனைவிக்கும், இஸ்லாமிய சமூகத்திற்கும் பிடிக்க வில்லை. ஆகவே, ஜமாதாரை வீட்டை விட்டே வெளியேற்றினர்.

ஜமாதாரும் சமர்த்தரின் பாதுகைகளுடன் வெளியேறி ஒரு இடிந்த வீட்டில் சென்று வசிக்கலானார். எப்போதும் சுவாமிகளின் நாமத்தை ஜபித்துக்கொண்டேயிருந்த அவரிடம் பக்தர்கள் தமது குறைகளைக் கூறி சுவாமிகளின் ஆசி பெற்றுத் தருமாறு வந்தனர். ஜமாதாரும் அவர்களுக்குக் குருநாதரின் பாதுகைகளின் கீழ் இருந்த மண்ணையே பிரசாதமாக அளித்தார்.

நாளடைவில் அவரைத் தேடி நாலாபுறங்களிலிருந்தும் மக்கள் வந்து சுவாமிகளின் பாதுகைகளைத் தரிசித்து இகபரசுகமடைந்தனர். (ஸ்ரீ ஸாயி ஸமர்த்த குருபாதுகை புதுச்சேரியில் அடியேன் இல்லத்தில் கற்கோவில் கட்டும்வரை இருக்கும். பக்தர்கள் தரிசித்து குருகடாஷம் பரிபூரணமாக பெறலாம்.) ஜமாதாருக்கு தேவைக்கு அதிகமாகவே உணவும், பொருளும், பேரும் புகழும் வந்தடைந்தன. இதைப் பார்த்த அவரது மனைவியும் மனம் மாறி அவரை வீட்டிற்கு வருமாறு அழைத்துப் பயபக்தியுடன் சேவை செய்யலானார்.

மைந்தர்கீயிலிருந்து ஆறுமைல் அருகிலேயே அக்கல்கோட் இருந்ததால் ஜமாதார் அடிக்கடி வந்து சமர்த்தரைச் சேவித்து வந்தார்.

சுவாமிகள் அவரைப் பார்த்து, "பீர்ஸாஹேப்" (முஸ்லீம்களின் சாது) என்று அன்புடன் அழைத்தார். மக்களும் அவரை ஒரு "அவுலியா" வாகவே பாவித்து மரியாதையுடன் பழகினர்.

பின்னாளில் ஜமாதார் சுவாமிகளின் பாதுகைகளை ஒரு கோவில் கட்டி அதில் பிரதிஷ்டை செய்து ஒரு பிராம்மணரை நியமித்து இந்து சாஸ்திரப்படி பூஜைகளையும் விழாக்களையும் தொடர்ந்து நடத்திப் பரமபதமடைந்தார்.

"மனிதன் கொடுப்பது ஒரு போதும் நிலைப்பதில்லை!

இறைவன் கொடுப்பது ஒரு போதும் அழிவதில்லை!"

என்பது இந்த ஜமாதாரின் அனுபவத்திலிருந்து நமக்கு விளங்குகிறதல்லவா!

எவ்வாறு கடவுள் தமது பக்தர்களைக் காக்கும் பொருட்டுத் தன் நிலையிலிருந்து கீழிறங்கி, மனித வடிவில் அவதரித்து அருள்புரிகிறாரோ, அதே போலவே, இறைவனின்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



திருத்தூதர்களிடம் அசைக்க முடியாத நம்பிக்கையும் பக்தியும் கொண்ட இந்த ஜமாதாரைப் போன்ற பக்தர்களும் அவதரிப்பதாகவே எண்ணத் தோன்றுகிறது.

இந்தச் சரணாகதி தத்துவத்தை நாம் உணர்ந்து "நான், எனது" என்ற பற்றுகளிலிருந்து விலகிப் பிறவிப்பெருங் கடலினின்று விடுபடுவோமாக.

பற்றுக பற்றற்றான் பற்றினை!

குருகடாட்சம் பரிபூரணம்

## 39. அன்னதானப் பிரபு

அக்கல்கோட்டுக்கும் சோலாப்பூருக்கும் இடையில் உள்ளது ராம்பூர் என்ற கிராமம். அங்கே ராவ்ஜீ பாட்டீல் தமது பேத்தி விடாபாயுடன் வசித்து வந்தார். இருவரும் சமர்த்த மஹாராஜின் அத்யந்த பக்தர்கள்.

அவ்வப்போது சுவாமிகள் ராம்பூருக்கு விஜயம் செய்வது வழக்கம். ஒரு தடவை சுவாமிகள் அங்குவந்து பதினாறு நாட்கள் முகாமிட்டிருந்தார். கூடவே சோளப்பா, கணபதிராவ், ராம்பாவு தாடிவாலே, மஹாதேவ்பட், பாபா சாஹேப் யாதவ் முதலிய பக்தர்களும் வந்திருந்தனர்.

ராவ்ஜீ பாட்டீல் தமது மனதிற்குள் அக்கல்கோட்டில் நாற்பது பேருக்கு அன்னதானம் செய்வதாக நினைத்திருந்தார். தற்செயலாகச் சுவாமிகளே தமது ஊருக்கு வந்திருந்ததால் இந்தச் சந்தர்ப்பத்தில் செய்வது சாலச் சிறந்தது என்று எண்ணினார். ஒரு நாள் அவரது பேத்தி விடாபாயி நாற்பது பேருக்கு வகையாகச் சமையல் செய்தார். சுவாமிகளைத் தமது இல்லத்திற்கு அழைத்து வந்து, ராவ்ஜீ மங்கள ஸ்நானம் செய்வித்துப் பதினாறு வகை உபசாரங்களையும் செய்து மகிழ்ந்தார். மதிய வேளையானதும் சமர்த்தரை உண்ண வருமாறு அழைத்தார்.

இதற்குள்ளாகச் சுவாமி சமர்த்தர் ராம்பூருக்கு விஜயம் செய்துள்ள செய்தி கேட்டு நாலாபுறங்களிலிருந்தும் ஆயிரக்கணக்கான பக்தர்கள் தரிசிக்கக் குழுமிவிட்டனர். தம்மை உண்ண அழைத்த ராவ்ஜீயிடம், "அனைவருக்கும் சாப்பாடு போடு! பிறகு சாப்பிடுகிறேன்" என்று திருவாய் மலர்ந்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இதைக்கேட்ட ராவ்ஜீயும் விடாபாயியும் செய்வதறியாது திகைத்து நின்றனர். ஏனென்றால் வெறும் நாற்பது பேருக்கு மட்டும் சாப்பாடு தயாரிக்கப்பட்டிருக்கும்போது, அங்குத் திரண்டிருந்த ஆயிரக்கணக்கான பக்தர்களுக்கு எப்படி உணவளிக்க முடியும்? என்று கவலையுற்றார்.

முற்றிலும் உணர்ந்த குருநாதரும், அவர்களிடம் ஒரு கூடையை எடுத்து வரச்சொன்னார். அதில் இனிப்பு போளி, சாதம் மற்றும் கறிவகைகளை நிரப்பச் சொல்லி அதன்மீது பூஜையிலிருந்த கண்டோபா, தேவி மற்றும் சாளக்கிராமங்களை (ஜீவனுள்ள ஒரு வகைக்கற்கள். இமயமலையில் கண்டகி நதியில் முக்திநாத ஸ்தலத்தில் விஷ்ணுவின் அம்சமாக கிடைக்கின்ற அவற்றைப் பூஜித்துப் பால் அபிஷேகம் செய்தால் மகிழ்ச்சியால் சுற்றும். மந்திராலய மஹான் ஸ்ரீமத் ராகவேந்த்ர சுவாமிகளின் ஜீவபிருந்தாவனத்தின் மீது (சமாதி) சுமார் நானூறு சாளக்கிராமங்கள் உள்ளன) நிரப்பி அவற்றின் மேல் இன்னும் சில போளிகளை வைத்து மூடச் சொன்னார். விடாபாயிடம் அந்த கூடைக்கு அன்னபூரணி பூஜை செய்யுமாறு கூறி, பிறகு அதைத் தலையில் சுமந்து கொண்டு துளசி மாடத்தை மூன்று முறைகள் சுற்றி வலம் வருமாறு பணித்தார். முடிந்ததும் அந்தக் கூடையைத் தமதருகில் வைக்கச் சொல்லிவிட்டு, குருமஹராஜ், "இப்போது சமையலறையிலிருந்து அனைவருக்கும் வயிறு நிறைய உணவு பரிமாறுங்கள். ஆனால் பதார்த்தங்களை வெளியே எடுத்து வந்த பிறகு, சமயலறையை திரும்பிப் பார்க்க வேண்டாம்" என்று கட்டளையிட்டார்.

அவ்வாறே ராவ்ஜீயும் பக்தர்களும் பரிமாற ஆரம்பித்தனர். முதல் பந்தியிலேயே சுமார் நானூறு பேர் சாப்பிட்டு முடித்தனர். இரவு பதினோரு மணி வரை தொடர்ந்து பந்தி நடந்து கொண்டேயிருந்தது.

சுவாமிகளிடம் அவர் பசியோடிருப்பாரே என்று இப்போதாவது சாப்பிட வர வேண்டும் என்று பிரார்த்தித்த பாட்டீலிடம், "இன்னும் எங்க அப்பா, தாத்தா, எல்லாம் வரவேண்டியிருக்கிறது. அனைவரும் வந்து சாப்பிட்ட பிறகு நான் சாப்பிடுகிறேன்" என்று பதிலளித்தார்.

பின்பு சோலாப்பூரிலிருந்து அரசு ஊழியர்கள் குழு ஒன்று சுவாமிகளைத் தரிசிக்க வந்தது. அவர்களுக்கும் உணவு பரிமாறப்பட்டது. பிறகே பரமதயாளரான சமர்த்தர் உணவு உட்கொண்டார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



40பேருக்குச் சமைத்த உணவுப் பண்டங்களை, கருணை கடலான ஸ்ரீசுவாமி மஹாராஜின் அருளால் 4000 பேருக்கு மேல் சாப்பிட்டதைக் கண்ட அனைவரும், "ஸ்ரீசுவாமி சமர்த்த மஹாராஜுக்கு ஜே!" என்று பக்திப்பரவசத்துடன் வாழ்த்தி வணங்கிச் சென்றனர்.

சுவாமிகள் தமக்குப் பக்கத்தில் வைத்திருந்த அன்னக் கூடையிலிருந்த பண்டங்களை மறுநாள் காலையில் அனைவரும் பிரசாதமாக பெற்று மகிழ்வுடன் தமது இல்லங்களுக்கு சென்றனர்.

அன்னதானப்பிரபு சுவாமி சமர்த்தரைப் பணிந்து எல்லா வளமும் பெறுவோமாக!

குருகடாட்சம் பரிபூரணம்

## 40. ஆவியிடமிருந்து விடுதலை

பஸல் என்ற ஊருக்கு (அக்கல்கோட்டிலிருந்து பனிரெண்டு மைல்) ஸ்ரீசுவாமிகள் விஜயம் செய்தபோது, கூடவே காசிநாத்பந்த், கணபதிராவ் ஆகிய பக்தர்களும் சென்றனர். ஊருக்கு வெளியே முகாமிட்டிருந்த சமர்த்தர் அவர்களிடம், "யாம் இங்கு வந்திருப்பதை ஊர்மக்களுக்கும், பவானி தேவிக்கும் (அம்மன் கோவிலில்) தெரியப்படுத்துங்கள்" என்று கூறி அனுப்பினார்.

அப்போது சோலாப்பூரிலிருந்து ஒரு தையற்காரர் தமது குடும்பத்துடன் சுவாமிகளைத் தரிசிக்க வந்திருந்தார். அவரைப் பார்த்து சமர்த்தர், " என்னடா? எனக்குச் சாப்பாடு போட மாட்டாயா"? என்று வினவியதும் தையற்காரர் அந்த ஊர்மக்களின் உதவியுடன் ஐம்பது பேர் சாப்பிடும் அளவுக்கு உணவு தயார் செய்தார்.

சுவாமிகளும் பவானி தேவி ஆலயத்திற்கு வந்தார். அவரைக் குளிப்பாட்டி, சந்தனாதி வாசனை திரவியங்களை பூசி, ஆரத்தி செய்து வழிபட்டனர். அன்று அமாவாசையாதலால், பக்கத்து கிராமங்களிலிருந்தும் மக்கள் ஸ்ரீசமர்த்தரைத் தரிசிக்க வந்து கொண்டேயிருந்தனர். அனைவருக்கும் சாப்பாடு போடுமாறு சுவாமிகள் கட்டளையிடவே சுமார் ஐம்பது பேருக்கு சமைத்த உணவு, ஏறக்குறைய ஐநூறு பேர் சாப்பிட்ட பின்பும்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அள்ள அள்ளக் குறையாமல் அட்சய பாத்திரம் போன்று வளர்ந்து கொண்டேயிருந்தது.

அனைவரும் உணவு உண்டபின், சமர்த்த குருநாதரின் தர்பாரில் கூடினர். தையற்காரரும் அருகில் வந்து அமர்ந்தார். அவரது உடம்பில் ஒரு ஆவி வெகு நாட்களாகக் குடிகொண்டு படாதபாடு படுத்திக் கொண்டிருந்தது.

ஸ்ரீதத்தாத்திரேய அவதாரியான சமர்த்தரின் முன்னால் அமர்ந்ததும் அது சேட்டை செய்ய ஆரம்பித்து, சுவாமிகளைப் பலவாறாக இகழ ஆரம்பித்தது. அது சுவாமிகளைப் பார்த்து, "சந்யாசிக்கு எதுக்கு இந்த விளையாட்டெல்லாம்?" என்று கேட்டதும் சமர்த்தர், "மாதர்சோதா (வசை)! இவன் கைகளைப் பின்னால் கட்டுங்கள்" என்று கட்டளையிட்டார். வெகுநேரம் வரை ஆடிய அந்த ஆவி பிறகு சுவாமிகளின் பாதங்களில் வீழ்ந்து வணங்கி "இந்த அனாதைக்கு முக்தியளியுங்கள்" என்று பிரார்த்தித்தது. பரமதயாளரான சுவாமியும் அதை ஆசீர்வதித்து அந்த (தையற்காரரின்) உடம்பிலிருந்து வெளியேற்றி அனுக்ரஹம் செய்தார்.

ஆவியின் பிடியிலிருந்து தப்பிய தையற்காரரும் தமது மனைவி குழந்தைகளோடு சோலாப்பூருக்கு மகிழ்ச்சியாக திரும்பினார். ஒவ்வொரு பௌர்ணமியன்றும் அக்கல்கோட் வந்து சுவாமிகளைத் தரிசிப்பதை வழக்கமாக்கிக் கொண்டார். ஜெய ஜெய சுவாமி சமர்த்த!

குருகடாட்சம் பரிபூரணம்

## 41. ஏழையின் உணவு

ஒரு ஏழைப் பிராம்மணப் பெண்மணி ஸ்ரீசமர்த்தருக்காக உணவு சமைத்து அக்கல்கோட் எடுத்து வந்தார். அவர் ஏழையாதலால் சுவாமிகளின் அருகில் போகவிடவில்லை. வெகுதூரத்திலேயே நின்று கொண்டு மனதில், "சுவாமி இந்த ஏழையின் உணவை இரண்டு கவளமாவது உண்ண மாட்டாரா?" என்று ஏக்கத்துடன் நினைத்துக் கொண்டிருந்தார்.

அதே வேளையில் ஸ்ரீசமர்த்தர், "பிராம்மணியின் சாப்பாட்டை யார் தடுத்தது? என் கால் செருப்பின் தூசியை சாப்பிடும் கயவர்களே!" என்று திட்டி அந்த அம்மணியைப் பார்த்து, "இங்கே வா!" என்று அழைத்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



குசேலர் தமக்காகப் பேரன்புடன் கக்கத்தில் வைத்து வியர்வையில் நனைந்து கொண்டு வந்த அவலைப் பேராவலுடன் கேட்டுத்தின்ற ஸ்ரீகிருஷ்ணரைப் போல, அந்தப் பெண்மணியின் தட்டிலிருந்து எடுத்துச் சுவாமிகள் மிகவும் ருசித்துச் சாப்பிட்டார். பிறகு பரமதயாளரான சமர்த்தர் அப்பெண்மணியிடம், "உனக்கு ஒரு சேட்டைக்காரப் பையன் பிறப்பான்" என்று ஆசியருளினார்.

தமது விருப்பத்தை வெளியிடு முன்னரே தாமாகவே அருள்புரிந்த ஸ்ரீசமர்த்த மஹாராஜைப் பார்த்து அந்தப் பெண்மணி, "சுவாமி நான் எத்தனையோ சாதுக்களைத் தரிசித்திருக்கிறேன். ஆனால் தங்களைப் போன்ற ஒரு சத்குருவை இன்று தான் தரிசிக்கும் பேறு பெற்றேன்" என்று கூறி மகிழ்ச்சியுடன் தம் ஊருக்குச் சென்றார்.

அந்த பிராம்மணிக்கு 45வயது ஆகியும் புத்திர பாக்கியம் இல்லாமல் இருந்தது. ஸ்ரீசமர்த்தரின் ஆசியால் ஒரு வருடத்தில் அவளுக்கு அழகிய ஆண்குழந்தை பிறந்து அவர் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கினார்.

தீனதயாளரான சுவாமிக்கு ஏழை, பணக்காரன், இந்து முஸ்லீம் என்ற பாகுபாடு ஏது? பக்தர்களின் விருப்பங்களை உடனுக்குடன் தீர்த்து வைப்பதில் அவருக்கு நிகர் அவரே.

குருகடாட்சம் பரிபூரணம்

## 42. விநாயக் வாஸுதேவ்

மும்பையில் அரசு மேலதிகாரியாக மிகவும் செல்வாக்குடனும் ஆங்கில அறிவுடனும் இருந்த விநாயக வாஸுதேவ் என்பவர் ஸ்ரீசமர்த்தரின் பக்தர். ஒரு தடவை அவர் அக்கல்கோட்டுக்குச் செல்வதாகக் கூறியவுடன், நான், நீ என்று ஏறக்குறைய இருநூறு பேர் அவர்தம் குடும்பத்தினருடன் புறப்பட்டனர். அவர்கள் அனைவரும் கடப்பா ரயில்வண்டி நிலையத்திற்கு வந்தடைந்தனர். அவர்கள் வரும் செய்தி கேட்டு, அக்கல்கோட் சமஸ்தானத்திலிருந்து சாரட் வண்டிகள், குதிரைகள், யானைகள், அதிகாரிகள் மற்றும் சேவகர்களை மன்னர் அனுப்பியிருந்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



பக்தவத்சலனான சுவாமிகளும், "எமக்கும் குதிரை வரட்டும். நாமும் அங்கு செல்வோம்" என்று கூறியவுடன் பல்லக்கு தயாரானது. சுவாமிகளும் கடப்பா நோக்கி விரைந்தார். பாதி வழியில் "கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது" போல ஸ்ரீசமர்த்தரே தங்களுக்கு அருள்புரிய வருவதைப் பார்த்த வாஸுதேவரும் அவர்தம் குடும்பத்தினரும் வண்டியிலிருந்து இறங்கி ஓடோடிச் சென்று சத்குருவின் பாதங்களில் வீழ்ந்து வணங்கினர். அவர்களுடைய மகிழ்ச்சியை வார்த்தைகளால் கூறமுடியாது. பின்னர் சமர்த்தர், "பல்லக்கை எடு" என்றவுடன் அக்கல்கோட் திரும்பி வந்தனர். வாஸுதேவருடன் வந்த பிற பக்தர்களுக்கு அக்கல்கோட்டில் தரிசனம் கிடைத்தது.

சில நாட்கள் தங்கியிருந்த வாஸுதேவர் சுவாமிகளிடம் மும்பைக்குத் திரும்பிச் செல்ல உத்தரவு கேட்டபோது, ஸ்ரீசமர்த்தர், "சீக்கிரம், சீக்கிரம், சீக்கிரம்" என்று விரைவுப்படுத்தி அனுப்பி வைத்தார்.

கடப்பா ஸ்டேஷனுக்கு வாஸுதேவர் செல்வதற்குள்ளாக அவருடன் வந்திருந்த பக்தர்கள் அவருக்கு முன்பே அங்கிருந்து சென்றிருந்தனர். அப்போது ஒரு யானையின் அம்பாரி மீது சவாரி செய்தவர்கள் கதிகலங்கிப் போயிருந்தார்கள். ஏனென்றால், புகை வண்டியின் விசில் சத்தத்தை அதுவரை கேட்டிராத யானை, அதைக் கேட்டதும் மதம் பிடித்து அங்கும் இங்குமாக ஓடிக் கொண்டிருந்ததே அதற்குக் காரணம். இதைப் பார்த்த வாஸுதேவரும் சுவாமிகளை மனதில் பிரார்த்தித்து, அந்த யானையின் பின்னால் ஓடிச் சென்று அதை நிற்குமாறு பணித்தார். மதம் பிடித்த யானையும் வாஸுதேவர் கட்டளையிட்டதும் ஆட்டுக்குட்டிபோல ஓரிடத்தில் அமைதியாக நின்றது. அவர் சுவாமிகளிடம் ஊருக்கு கிளம்ப உத்தரவு கேட்டபோது ஏன் உடனே போ! என்று மூன்று முறை (சீக்கிரம்) கூறினார் என்பதின் அர்த்தம் புரிந்து, அனைவரும் சத்குரு நாதரின் புகழ்பாடிக் கொண்டே மும்பாய் சென்றடைந்தனர்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 43. சுவாமியே பாண்டுரெங்கன்

ஒரு சமயம் விநாயக் வாஸுதேவர் மும்பையிலிருந்து அக்கல்கோட் வந்திருந்தார். காலை ஒன்பது மணியளவில் ஸ்ரீசமர்த்தர் இன்னும் மஞ்சத்திலேயே படுத்துக் கொண்டிருந்தார். ராவ்ஸாஹேப் டவளே என்பவர் சுவாமிக்குச் சாமரம் வீசிக் கொண்டிருக்கும்போது, சுவாமி அவரைப்பார்த்து, "உனக்குச் சாமரம் வீசத் தெரியவில்லை. எழுந்திரு!" என்று கூறினார். பக்கத்திலிருந்த சஹாஜி மஹாராஜா (மன்னர்) சாமரத்தை எடுத்துக்கொண்டு எழுந்து நின்று பயபக்தியுடன் சாமரம் வீசலானார்.

அன்றைக்குச் சோளப்பா, சுவாமிகளுக்குத் தலையில் தொப்பியும் அழகிய தங்க ஜரிகை வேலைப்பாடு கொண்ட துணியில் தைத்த பெரிய அங்கியும் அணிவித்திருந்தார். திடீரென்று சமர்த்தர் தொப்பியைக் கழற்றி எறிந்தார். மேலங்கியை எடுத்துக் கிழித்து அதைத் தலைமுதல் பாதம்வரைப் போர்த்திக் கொண்டார். "பண்டரீபுரம் விடலனுக்குத் துன்பம்" என்று பல தடவை மீண்டும் சொல்லியவாறே பொலபொல வென்று கண்ணீர் வடித்தார். இதைச் சற்றும் எதிர்பார்க்காத பக்தர்களும் இன்று என்ன பிரச்சினையோ? ஏன் சுவாமிகள் இவ்வாறு செய்கிறார் என்று விளங்காமல் நாள் முழுவதும் துக்கத்திலேயே ஆழ்ந்திருந்தனர்.

வாஸுதேவருக்கு விடுமுறை இல்லாத காரணத்தால் அன்று இரவே மும்பைக்குத் திரும்பினார். பார்சி ரோட் ஸ்டேஷனுக்கு ரயில் வந்தபோதுதான் அவருக்கு ஒரு செய்தி கிடைத்தது. என்னவென்றால், பண்டரீபுரத்தில் இருக்கும் ஸ்ரீபாண்டுரெங்கனை யாரோ ஒரு முஸ்லீம் கற்களால் அடித்து அவரது கால்களையும் ஒடித்துவிட்டான் என்பதே அந்த செய்தி. வாஸுதேவருக்கு அப்போதுதான் ஸ்ரீசுவாமிகள் அக்கல்கோட்டில் கூறியதும், அதற்காகத்தான் அவரும் அந்த கல்லடிகளைத்தாமே வாங்கியது போலத் துடித்ததும் நினைவுக்கு வந்தது. சக



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



பிரயாணிகளிடம் இந்த விஷயத்தைக் கூறியதும் அனைவரும் ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜே பாண்டுரெங்கனின் அவதாரம் என்பதைப் புரிந்து பக்திப்பரவசத்துடன் சென்றனர்.

சத்குரு ஸ்ரீசீரடி சாயிபாபாவின் பரமபக்தரான தாஸ்கணு மஹராஜும், இதையே, "சீரடியே என்னுடைய பண்டரீபுரம்" "சாயிபாபாவே எமது கிருஷ்ணன்" என்று பாடுவதை இங்கே நினைவு கூறலாம்.

சத்குரு ஸ்ரீசுவாமி சமர்த்தரின்பால் கொண்ட பரம பக்தியினால், இந்த வாஸுதேவர் மும்பையில் மகாலட்சுமி என்ற இடத்தில் ஸ்ரீசமர்த்தருக்கு ஒரு (மடம்) கோவில் கட்டி அதில் ஒரு பிராம்மணரை நியமித்து நித்ய பூஜைகளைச் செய்வித்தார்.

குருகடாட்சம் பரிபூரணம்

## 44. கோரிக்கை நிறைவேற்றுதல்

பங்குச்சந்தையில் கொடிகட்டிப் பறந்த ஒரு பிராம்மணருக்குக் குழந்தை இல்லாததால் கானகாபூருக்குச் சென்று ஸ்ரீ நிருஸிம்ஹ சரஸ்வதி சுவாமிகளிடம் தமக்குக் குழந்தை பிறந்தால் ஆயிரம் பேருக்கு அன்னதானம் செய்வதாக வேண்டிக் கொண்டார்.

தத்தாவதாரியான ஸ்ரீ நிருஸிம்ஹ சரஸ்வதியின் அருளால் ஒரு வருடத்தில் அவருக்கு ஆண் குழந்தை பிறந்தது. ஆனால் பங்குச் சந்தையில் ஏற்பட்ட பெரும் சரிவினால் அவருக்குப் பெருத்த நஷ்டம் உண்டாகித் திவாலானார். அந்த வருத்தத்திலேயே சில நாட்களில் அவரும் காலமானார்.

கைக்குழந்தையுடன் கணவனை இழந்த அந்த பிராம்மணரின் மனைவி, தமக்கே வருமானமில்லாத போது ஆயிரம் பேருக்கு எப்படி அன்னதானம் செய்து தமது கணவரின் வேண்டுதலை நிறைவேற்றுவது என்ற கவலையில் ஆழ்ந்தாள். தமது கவலையை ஒரு தோழியிடம் கூற அவளும், "நீ கானகாபூருக்கு குழந்தையுடன் சென்று தரிசனம் செய். அவரே அவரது கோரிக்கையை நிறைவேற்ற ஒரு வழி நிச்சயம் செய்வார்" என்று யோசனை கூறினாள்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



குழந்தையுடன் கானகாபூருக்கு வந்து தத்தாத்திரேயரைத் தரிசனம் செய்து அங்கேயே சேவை செய்துக்கொண்டிருந்த அந்த பிராம்மணியின் கனவில் ஸ்ரீ நிருஸிம்ஹ சரவஸ்வதிகள் தோன்றி, "நீ அக்கல்கோட் சென்று ஸ்ரீ சுவாமி சமர்த்த மஹாராஜுக்கு உணவளித்தால் உனது வேண்டுதல் நிறைவேறும்" என்று அருளி மறைந்தார்.

மறுநாள் அக்கல்கோட் வந்து ஸ்ரீ சமர்த்தரை வணங்கி நின்றவளைத் தம் அருகே அழைத்த சுவாமிகள் "எனக்கு உணவு கொடு!'' என்று அருளினார். அவளும் சுவாமிகளுக்காக நைவேத்தியம் தயாரித்து எடுத்து வந்து அர்ப்பணித்தார். அதை மிகவும் ரசித்து அன்புடன் சாப்பிட்ட குருநாதர் தம் வயிற்றைத் தடவிவிட்டு, ஏப்பம் விட்டுக்கொண்டே, "ம்! ஆயிரம் பேருக்கு அன்னதானம் அளித்துவிட்டாய் போ!" என்று ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார்.

தமது வேண்டுதலைத் தாம் கூறாமலே எல்லாமறிந்த பரம சத்குரு தம்முடைய உணவை மகிழ்ச்சியாக உண்டு, வேண்டுதலையும் நிறைவேற்றிக் கொடுத்ததை நினைத்து அந்த கைம்பெண் மனநிறைவோடு தம் மகனுடன் ஊருக்குத் திரும்பிச் சென்றாள்.

இதன்மூலம் நமக்குச் சில விஷயங்கள் தெளிவாகின்றன. ஒன்று, நாம் இறைவனிடம் எதையாவது கேட்டுப் பெறலாமே தவிர, நீ இதைச் செய்தால் நான் உனக்கு இதைச் செய்கிறேன் என்று சரிசமமா ; நின்று வியாபாரம் பேசக்கூடாது. ஏனென்றால் சர்வ வல்லமை படைத்த ஆண்டவனால் நமது விருப்பதை மிக எளிதாக நிறைவேற்ற முடியும். ஆனால் நிலையில்லாத மனிதராகிய நம்மால் நம்முடைய வாக்குறுதிகளை நிறைவேற்ற முடியாமல் போகலாம்! ஆகவே பிரார்த்தனை மட்டுமே செய்யவும்.

இரண்டாவதாக, கடவுளிடம் செய்து கொண்ட வேண்டுதல்களை நாம் இறைவனின் அவதாரங்களாகிய சத்குருக்களின் மூலமும் நிறைவேற்றிக் கொள்ளலாம்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 45. அக்னிஹோத்ரி சேஷாச்சார்யா

அக்னி ஹோத்திரம் என்கிற ஹோமத்தைத் தினமும் தவறாமல் செய்துகொண்டு இரந்துண்டு வாழ்ந்து வந்த சேஷாச்சாரியர் ஸ்ரீ சுவாமிகளின் பரம பக்தர். தினமும் சமர்த்தரைத் தரிசிப்பது வழக்கம். சேஷாச்சாரியர் எப்போது வந்தாலும் தமது திருப்பாதங்களை அவருக்குக் காண்பித்து ஸ்பரிச ஆசீர்வாதம் கொடுப்பார் ஸ்ரீ சமர்த்தர். சேஷாச்சாரி தமது மூக்குப்பொடி டப்பாவை சுவாமிகளின் முன்வைக்க, சுவாமியும் அதிலிருந்து ஒரு சிட்டிகை எடுத்து நாசியில் இழுப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். குருநாதர் எவ்வளவு கோபமாக இருந்தபோதும் யாருமே அவரை நெருங்க முடியாத சூழ்நிலையிலும், சேஷய்யருக்கு மட்டும் தமது பாத தரிசனத்தை அருள சுவாமி மஹராஜ் மறந்ததேயில்லை. அப்படி ஒரு பாசம், சேஷய்யரின் தூய பக்தியின் மீது.

நாட்டின் பல்வேறு திசைகளிலிருந்தும் ஸ்ரீ சுவாமி மஹராஜின் தரிசனத்திற்காக ஆயிரக்கணக்கான பக்தர்கள் அக்கல்கோட்டில் திரண்டனர். அவர்கள் சமர்த்தருக்காகப் பலவிதமான இனிப்புப் பண்டங்களையும் பழங்களையும் அர்ப்பணித்தனர். அவற்றையெல்லாம் சத்குரு சிறுவர், சிறுமியர்களுக்கும், பக்தர்களுக்கும், வண்டி மாடுகள், குதிரைகள், நாய்களுக்கும், பகிர்ந்தளிப்பது வழக்கம். ஆனால் சேஷய்யாவிற்கு மட்டும் ஒரு நாள் கூட, ஒரு இனிப்பைக் கூடச் சமர்த்தர் வழங்கவில்லை. இதனால் சேஷய்யா தம்மீது சுவாமிகளுக்கு அன்பு இல்லையோ! என்று ஆதங்கப்பட்டார். ஒரு நாள் தரிசனத்திற்குச் சென்ற பொழுது அங்கே கண்கவர் வண்ணங்களில் விதவிதமாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த இனிப்புகளைப் பார்த்து ஆசைப்பட்ட சேஷய்யா சுவாமிகளிடமே வாய்விட்டு, "சுவாமி! எனக்கும் இனிப்பைக் கொடுங்கள்" என்று கேட்டுவிட்டார். ஆனால் சுவாமிகள் அவருக்கு எதையும் கொடுக்கவுமில்லை. பேசவுமில்லை. இதனால் அக்னி ஹோத்ரியின் வருத்தம் கூடியது.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



மறுநாளிலிருந்து சுவாமி சமர்த்தர் அவருக்குத் தரிசனம் கொடுப்பதை நிறுத்திவிட்டார். எப்போது சேஷய்யர் வந்தாலும் சால்வையைப் போர்த்திக் கொண்டு தூங்கி விடுவார். சேஷய்யரும் தரிசிக்காமல் போவதில்லை என்று விடாப்பிடியாக எவ்வளவு நேரம் காத்திருந்தாலும் சமர்த்தரும் படுக்கையிலேயே இருப்பார். சில சமயங்களில் சேஷாச்சாரிக்கு நன்றாக வசை மழையும் பொழிவார் சமர்த்தர்.

ஒரு நாள் மஹராஜ் பூங்காவில் இருந்தபோது சேஷாச்சாரியும் அங்கே அக்னிஹோத்திரத்திற்குத் தேவையான வரட்டிகளை காயவைப்பதற்காக சென்றிருந்தார். தம்மீது அளவில்லாத அன்பு கொண்டிருந்த ஸ்ரீசுவாமி சமர்த்தர் திடீரென்று தம்மை ஏன் ஒதுக்குகிறார்? தாம் செய்த தவறுதான் என்ன? என்று தீவிரமாக யோசித்துக் கொண்டிருந்தார். ஒரு வேளை தாம் இனிப்புப் பண்டங்களைக் கேட்டதுதான் சுவாமிகளின் கோபத்திற்கு காரணமோ? என்று பலவாறு சிந்தித்தார்.

பிறவித்துயரை வேரறுத்து முக்தி என்ற பேரின்பத்தைச் சுவாமிகள் தமக்காக அளிப்பதற்காகவே இனிப்பு போன்ற அற்ப ஆசைகளிலிருந்து தம்மை விலக்கி, வைராக்கியத்தை அனுக்ரஹிப்பதாக உணர்ந்த சேஷாச்சாரியர், திடீரென்று சாணி உருண்டைகளைத் தம் வாயில் வைத்துக் கொண்டு கண்களில் நீர் மல்க, சுவாமிகளின் தரிசனத்திற்குச் சென்றார். இனிப்புக் கேட்ட தம் வாய்க்கு மாட்டுச் சாணத்தைத் தண்டனையாகக் கொடுத்த சேஷாச்சாரியாரைக் கண்டவுடன் சுவாமிகள், “என்ன, வயிறு நிறைய பேடாக்களை சாப்பிட்டாயா! கொண்டு வா பொடி டப்பாவை” என்று கலகலப்பாக கூறி வாய்விட்டுச் சிரித்தார். தம் வயிற்றின் மீது கைகளை வைத்து குலுங்கி குலுங்கிச் சிரிக்கும் சமர்த்தரைப் பார்த்து சேஷாச்சாரிக்கு ஆனந்தக் கண்ணீர் பெருகியது. குருவை சரணடைவோமாக!

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



## 46. திருடனைப் பிடித்தல்

படோத்யாவில் வசித்து வந்த அரிச்சந்திர கோபால்ஜி என்பவரது வீட்டில் சுமார் இரண்டாயிரம் ரூபாய் (இப்போது பல லட்சங்கள்) பெறுமான பொருட்கள் திருடுபோயிற்று. எவ்வளவோ முயன்றும் திருடனைப் பிடிக்க முடியவில்லை. மிகவும் துயருற்ற அரிச்சந்திரர் அக்கல்கோட் வந்து சுவாமிகளைத் தரிசித்து, திருட்டு பற்றிக் கூறினார். அதற்கு ஸ்ரீ சமர்த்தர், "அந்தத் திருடனை மொகலாயியில் உள்ள அமுக் என்ற கிராமத்தில் பிடித்து வைத்திருக்கிறார்கள்" என்று அருளினார். உடனே அந்தக்கிராமத்துக்குச் சென்ற அரிச்சந்திரரும் திருடனைப் பிடித்து, தமது வீட்டில் அவன் திருடிச் சென்ற பொருட்கள் அனைத்தையும் திருப்பி வாங்கிக் கொண்டு மகிழ்ச்சியுடன் ஊருக்குத் திரும்பினார்.

இப்படிச் சர்வ சாட்சியாக, பிரத்யட்சமாக நம்முடன் வாழ்ந்து, வழிகாட்டும் மஹானை வேறு எங்கு போய்த் தேடுவது?

குருகடாட்சம் பரிபூரணம்

## 47. இறந்த கன்றை உயிர்ப்பித்தல்

நரசப்பா சுதார் ஒரு அக்கல்கோட்வாசி. ஒரு சமயம் அவரது எருமையின் கன்று பாம்பு தீண்டி இறந்தது. அந்தத் துக்கத்தைத் தாங்காத எருமை தன் இறந்து போன கன்றின் பக்கத்திலேயே ஐந்தாறு தினங்களாக உண்ணாமலும் உறங்காமலும், அதை யாரும் நெருங்க முடியாதபடி மிகவும் கோபாவேசமாகவும், பாலும் கொடுக்காமல் இருந்து வந்தது.

தற்செயலாக ஸ்ரீ சுவாமி சமர்த்தர் நரசப்பாவின் வீட்டிற்கு விஜயம் செய்தபோது, நரசப்பா தம் வீட்டு எருமையின் துயர சம்பவத்தை சமர்த்தரிடம் கூறி, "இறந்த கன்று உயிர் பிழைத்து வந்தாலன்றி, இந்த எருமையைக் குணப்படுத்த முடியாது" என்று பிரார்த்தித்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இதைக்கேட்டவுடன் இறந்துபோன எருமைக்கன்றின் பக்கத்தில் சுவாமிநாதர் சென்று தமது திருப்பாதங்களால் தடவியவுடன், அனைவரும் ஆச்சரியப்படும் விதத்தில் கன்று உயிர் பெற்று எழுந்து தமது இருப்பிடத்திற்குச் சென்று அமர்ந்தது.

கன்று உயிருடன் நடந்து வந்த காட்சியைக் கண்ட தாய் எருமையின் மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை. சில தினங்களில் அதன் உடலும் உள்ளமும் உற்சாகமடைந்து முன்பு போலவே நிறையப் பாலை தமது ஆருயிர்க் கன்றுக்கும் நரசப்பாவின் குடும்பத்திற்கும் கொடுக்க ஆரம்பித்தது.

மனிதர்களுக்கு மட்டுமின்றி அனைத்து ஜீவராசிகளின் மேலும் தம் கருணை மழையைப் பொழியும் பரமகுரு ஸ்ரீசுவாமி மஹராஜின் பாதம் பணிந்தவர்களுக்கு ஒரு போதும் துன்பம் இல்லையே.

குருகடாட்சம் பரிபூரணம்

## 48. எமலோகத்திலிருந்து கடிதம்

பாபா சாஹேப் ஜாதவ் ஒரு அரசாங்க உயர் அதிகாரியாகப் பணியாற்றியவர். அவருக்குக் குழந்தைப் பாக்கியம் இல்லை. மேலும் அவரது மனைவியும் இறந்துவிடவே, ஸ்ரீ சமர்த்தரிடம் தான் மறுமணம் புரிய ஆசீர்வதிக்குமாறு வேண்டினார். ஆனால் சுவாமிகள் அனுமதி அளிக்காததால், தமது பதவியைத் துறந்து சொத்து அனைத்தையும் ஸ்ரீசுவாமி மஹராஜின் திருப்பாதங்களில் அர்ப்பணித்துவிட்டு சன்யாசம் மேற்கொண்டார். அவருக்கு மாதம் பத்துரூபாய் அக்கல்கோட் சமஸ்தானத்திலிருந்து ஓய்வூதியம் வழங்கப்பட்டது. வெறும் கௌபீனம் (கோமணம்) மட்டும் அணிந்து குருநாதரின் சரணாரவிந்தங்களையே தியானித்துக் கொண்டு இருந்தார்.

ஒரு நாள் மதியம் பனிரெண்டு மணியளவில் ஸ்ரீ சமர்த்தர் அரண்மனைக்கு அருகிலிருந்த விறகுக் கடையில் அமர்ந்திருந்தார். அப்போது அங்கே பாபா சாஹேப் ஜாதவும் இருந்தார். சுவாமிகள் ஜாதவை கும்பார் (குயவன்) என்று



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அழைப்பது வழக்கம். சமர்த்தர் ஜாதவைப் பார்த்து "கும்பார்! உன் பெயருக்குக் கடிதம் வந்திருக்கிறது" என்ற மறை பொருளை உணர்ந்து (அதாவது எமலோகத்திலிருந்து கடிதம்) திரும்பிப் பார்த்தபோது, எமதூதர்கள் மிகவும் பயமுறுத்தும் தோற்றத்தில் அவரை நெருங்கி வந்து கொண்டிருந்ததைப் பார்த்தார். உடனே குருநாதரின் பாதங்களில் வீழ்ந்து கைகளால் இறுகப் பற்றிக்கொண்டு, "சுவாமி! நான் இறப்பதற்காக அஞ்சவில்லை. எனக்கென்று எந்த ஆசையும் இவ்வுலகில் இல்லை. ஆனால் இன்னும் நான் தங்கள் திருப்பாதங்களுக்கு மனமார சேவை செய்யவில்லை என்ற ஏக்கம் உள்ளது. ஆகவே இப்போது என்னை எமலோகம் அனுப்ப வேண்டாம்" என்று பிரார்த்தித்தார். பக்தவத்சலனான தயாளரும் தமக்கெதிரிலிருந்த ஒரு பெரிய காளை மாட்டை சுட்டிக் காட்டி "போ! மாட்டுப்பக்கம்!" என்று சொன்னதும் சட்டென்று அந்த காளை மாடும் உயிரை விட்டு கீழே விழுந்தது.

எமலோகத்திலிருந்து வந்த தூதர்களிடமிருந்து தம் பக்தரை விடுவித்து, பெரிய உடம்புடன் துன்பப்படும் காளையின் உயிரை எடுத்துச் செல்லுமாறு உத்தரவிட்டதன் மூலம் காளைக்கு விடுதலையும், ஜாதவுக்கு அந்த மாட்டின் மீதமிருந்த ஆயுட்காலத்தை மாற்றியும் அருளினார் ஸ்ரீ சுவாமி சமர்த்தர்.

படைத்தல், காத்தல் மற்றும் முடித்தல் போன்ற முத்தொழிலையும் நடத்தும் பரமாத்மாவின் அவதாரமான சுவாமி மஹராஜை வணங்கியவர்க்கு இகபர சுகம் நிச்சயம் கிடைக்கும்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



## 49. ஹரிபாவு என்ற ஸ்ரீ சுவாமி சுதன்

"சுத" என்றால் வாரிசு, பரம்பரை, நூல் (பஞ்சிலிருந்து வருவதால்) அல்லது மகன் என்று பொருள். ஸ்ரீசுவாமி சமர்த்தருக்குப் பல்லாயிரக் கணக்கான பக்தர்கள் இருந்தப் போதிலும் சுவாமிகளே தம் திருவாயால் ஒரு பக்தரைத் தம்முடைய வாரிசாக அறிவித்த ஒரு அற்புத நிகழ்ச்சி இந்தப்புனித சரித்திரத்தில் கட்டாயம் இடம்பெறக் கூடியதாகும். 'சுவாமி சுதன்' என்பதன் பொருள் சுவாமியின் திருக்குமாரன் என்பதாகும். அத்தகைய புண்ணியவான் எப்படி இருந்தார் என்பதையும், சுவாமிகள் எவ்வாறு அவருக்கு முக்தியையும் அழியாப் புகழையும் அருளினார் என்பதையும் விரிவாக இங்கே பார்ப்போம்.

கனோஜா பிராம்மணருக்கு ஸ்ரீசமர்த்தர் பத்தாயிரம் ரூபாய் பரிசளித்த சம்பவத்தில் அவருடன் அக்கல்கோட் வந்த அவரது நண்பர் கோவிந்தராவுக்கு ஸ்ரீசமர்த்தர் தமது பாதுகைகளை அளித்துப் பக்தி செய்யுமாறு பணித்து மும்பைக்கு அனுப்பியதை முன்பே கண்டோம்.

கோவிந்தராவ் மும்பைக்குத் திரும்பியதும் தமது நண்பர் லட்சுமணன் விநாயக் பண்டிதரிடம் ஸ்ரீசுவாமிகளின் மகத்துவத்தைப் பற்றி விளக்கினார். அந்தச் சமயம் லட்சுமணன் வைக்கோல் வியாபாரம் செய்து தொழிலில் நஷ்டமடைந்து நிறையக் கடன் தொல்லையால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். இன்னும் எட்டு தினங்களுக்குள் தமது கடன் தொல்லையிலிருந்து ஸ்ரீசுவாமி சமர்த்தர் தம்மை விடுவித்து விட்டால் சுவாமிகளின் சரணதாசனாக மாறிவிடுவேன் என்று மனதிற்குள் சங்கல்பம் செய்துகொண்டார். கோவிந்தராவும் "நீ நினைப்பது நிச்சயம் நடக்கும்" என்று அறுதியிட்டுக் கூறினார்.

ஏழுநாட்களாகியும் தமக்குக் கடன் தீர எந்த வழியும் பிறக்காததால் தம் விதியின் கொடுமையை எந்தச் சுவாமியாலும் தீர்க்க முடியாதோ என்று சஞ்சலப்பட ஆரம்பித்தார் லட்சுமணன்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



"நம்பினவர்க்கு நாராயணன்" என்ற திருவாக்குப்படி எட்டாம் நாள் ஹரிபாவு என்ற மராட்டியர் (மும்பை மாநகராட்சி ஊழியர்) தமது நண்பரான கஜானன் ஸ்ரீதர் க்ஷத்ரி என்பவருடன் அதிகாலையில் லட்சுமணன் பண்டிதரின் வீட்டிற்கே வந்தார். ஹரிபாவுவும் கஜானனும் சேர்ந்து மண்டியில் ஒரு கடை நடத்தி அது நஷ்டத்தில் இயங்குவதாகவும் அந்தக் கடையை லட்சுமணன் பண்டிதருக்குத் தாங்கள் தர விரும்புவதாகவும் தெரிவித்தனர். பதிலுக்குத் தங்களுடைய கடனை லட்சுமணன் பண்டிதரே அடைக்க வேண்டும் என்றும் ஒப்பந்தம் செய்து கொண்டனர். அவரும் இதற்குச் சம்மதித்தார்.

மாலையில் ஒரு மார்வாடி அந்தக் கடைக்கு இரண்டாயிரம் ரூபாய் வியாபார நிமித்தமாகப் பணம் வந்திருப்பதாகக் கூறி லட்சுமணன் பண்டிதரை அவரது வீட்டிற்கே வந்து சந்தித்து பணத்தையும் கொடுத்து விட்டுச் சென்றார்.

பரமசத்குரு ஸ்ரீசுவாமிகளிடம் விண்ணப்பித்தபடி எட்டு நாட்களில் தமது தலைவிதியே மாறி கடன் தொல்லையும் தீர்ந்து, புதிதாக வியாபார வாய்ப்பும் கிடைத்ததை எண்ணி லட்சுமணன் பண்டிதருக்கு மட்டற்ற மகிழ்ச்சியேற்பட்டது. அவரது அனுபவத்தின் மூலம் ஸ்ரீசமர்த்தரைப் பற்றிப் கேள்விப்பட்ட ஹரிபாவு மற்றும் கஜானனும் அக்கல்கோட் சென்று சுவாமிகளைத் தரிசிக்கப் பேராவல் பூண்டனர். இந்த மூவரும் சேர்ந்து மறுநாளே அக்கல்கோட் வந்து சேர்ந்தனர்.

ஹரிபாவு மற்றும் க்ஷத்ரி பதினைந்து நாட்கள் விடுமுறை எடுத்துக்கொண்டு லட்சுமணன் பண்டிதருடன் ஸ்ரீசமர்த்தரைத் தரிசித்து வணங்கிக் கூப்பிய கைகளுடன் நின்றிருந்தனர். அவர்களைப் பார்த்து சுவாமிகள், "வியாபாரம் செய்தீர்கள் நஷ்டம் ஆனது. என்னைத் துதித்தீர்கள், இரண்டாயிரம் ரூபாய் பணம் கிடைத்தது" என்று சர்வ சாட்சியாக அனைத்தையும் சொன்னதும் அவர்களுக்கு ஆச்சரியம் தாங்க முடியவில்லை. சிவ, பிரம்மா, விஷ்ணுவின் முக்குணங்களும் சேர்ந்த தத்தாத்திரேயரிடம் மறைக்க ஏதுமில்லை. அனைத்தையும் படைத்து, காத்து, முடிக்கும் பரமாத்மாவின் சன்னதியில் பேருவகையுடன் கண்களில் ஆனந்தக் கண்ணீருடன் அமைதியாக நின்றிருந்தனர்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அன்று இரவு மூவரும் தூங்கியிருந்த போது அவர்களது துணிமணிகள் எல்லாம் காணாமல் போய்விட்டன. மறுநாள் காலையில் குருநாதரிடம் சென்று விபரத்தைக் கூறியதும் சுவாமிகள், "சுக்கு வந்ததும் இருமல் போயிற்று" என்று சொல்லிவிட்டு மூவருக்கும் துணிமணிகள் அளிக்க உத்தரவிட்டார். அதன்படி, கஜானனுக்குத் தலையில் வேஷ்டியை (பரிவட்டம் போல) கட்டச் சொன்னார். லட்சுமணன் பண்டிதருக்கு பட்டுத் துணி போர்த்தப்பட்டது. (பொன்னாடை).

பின்னர் ஹரிபாவுவை மிகவும் பாசத்துடன் தமது திருக்கரங்களால் கைகளைப் பிடித்து தமதருகில் வரவழைத்த தயாசாகர சமர்த்தர் ஹரியிடம், "நீ உன்னுடைய குலத்திற்கு முழுக்குப் போட்டு விட்டு, என்னுடைய மகனாகிவிடு" என்றார். யாரும் சற்றும் எதிர்பாராத, அது வரை சுவாமிகளிடமிருந்து கேட்காத வார்த்தைகளைக் கேட்டு அனைவரும் திடுக்கிட்டனர்.

மும்பையிலிருந்து சுவாமிகளுக்காகக் கொண்டு வந்திருந்த பழங்களை அர்ப்பணித்து நின்ற ஹரியிடம் சுவாமிகள், அவர்கள் செலவுக்கு எடுத்து வந்திருந்த முன்னூறு ரூபாய் பணத்திலிருந்து "வெள்ளை, வெள்ளை எடுத்து வா" என்று உத்தரவிட்டார். ஹரிபாவுக்கு அதன் பொருள் விளங்கவில்லை. எனவே சமர்த்தரிடம், "சுவாமி! வெள்ளை என்றால் என்ன?" என்று வினவ, ஸ்ரீகுருநாதரும், தமது பாதங்களை வெளியே நீட்டிக் காட்டினார். அதிலிருந்து சுவாமிகள் தமக்கு வெள்ளிப்பாதுகைகளை அர்ப்பணிக்குமாறு வேண்டுகிறார் என்று புரிந்து கொண்ட ஹரிபாவு மும்பைக்கு திரும்பியதும் 200 ரூபாய் செலவில் ஸ்ரீசமர்த்தருக்கு அழகான வெள்ளிப்பாதுகைகளைச் செய்வித்து அதன்மேல் வெள்ளிக் கவசமும் போடச் சொன்னார்.

15 தினங்கள் விடுமுறை எடுத்துக்கொண்டு ஹரியும் நண்பர்களும் சேர்ந்து மீண்டும் ஒருதடவை அக்கல்கோட் வந்தனர். மூவரும் சுவாமிகளைப் பிரார்த்தித்துக் கைதொழுது நின்றவுடன் பக்தவத்சல ஸ்ரீசமர்த்தர் ஹரிபாவுவைப் பார்த்து,

"குரூர் பிரம்மா குரூர் விஷ்ணு : குரூர் தேவோ
மஹேஸ்வர:।
குருரேவ பரப்ரஹ்ம தஸ்மை ஸ்ரீகுரவே நம:।।"



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



(குருவே அனைத்துக் கடவுளரும் ஆவார்) என்றும், கஜானனைப் பார்த்து,

"ஆகாஷாத் பதிதம் தோயம் யதா கச்சதி சாகரம் ।

ஸர்வ தேவ நமஸ்கார கேசவம் பிரதி கச்சதி॥"

(எவ்வாறு ஆகாயத்திலிருந்து விழும் மழை நீரானது கடைசியில் கடலில் சென்று கலக்கிறதோ அதைப் போல, எந்த தெய்வத்தை வணங்கினாலும் அவை அனைத்தும் கேசவனையே சென்று அடையும்) என்றும், லட்சுமணன் பண்டிதருக்கு

"இதமேவ சிவம் இதமேவ சிவம்

இதமேவ சிவம் இதமேவ சிவம்"

என்றும், மூவருக்கும் தனித்தனியாக மந்திரங்களை உபதேசித்து அருளினார்.

ஹரிபாவு தான் ஆசையுடனும் பக்தியுடனும் சுவாமிகளின் ஆணைப்படி மும்பையிலிருந்து செய்து எடுத்து வந்திருந்த வெள்ளிப்பாதுகைகளை ஸ்ரீசமர்த்தருக்கு அர்ப்பணித்தார். அவற்றை மிகவும் பிரியமாக உடனே தமது திருப்பாதங்களில் அணிந்து கொண்டருளினார் சுவாமிகள்.

சரியாகப் பதினான்கு நாட்கள் அந்தப் பாதுகைகளை அணிந்திருந்த ஸ்ரீசமர்த்தரிடமிருந்து எப்படியாவது தாங்களே கேட்டுப் பெற வேண்டிப் பலரும் முயற்சி செய்வதை அறிந்த சுவாமிகள், "இது எனது ஆத்மலிங்கம் ஆகும். இதை யாம் ஒருவருக்கும் அளிக்க மாட்டோம்" என்று கூறினார்.

அன்று தம்மைத் தரிசிக்க வந்த ஹரிபாவுவைத் தமதருகில் அழைத்த சமர்த்தர் அவரிடம், "நீ உன்னுடைய தொழில் மற்றும் வேலையை விடுத்து கடற்கரையில் (மும்பையில்) ஒரு பெரிய கோட்டையைக் (மடம்) கட்டி கொடியை நாட்டுக" என்று ஆசீர்வதித்துத் தாம் பதினான்கு நாட்களாக அணிந்து புனிதப்படுத்திய வெள்ளிப்பாதுகைகளைத் தமது தலை, முகம், வாய், கைகள் மற்றும் உடலின் அனைத்துப் பாகங்களிலும் தேய்த்து ஹரிபாவுவைக் கைகூப்பி நிற்குமாறு சொல்லி விட்டு, அவரது தலையில் பாதுகைகளை வைத்து அருளினார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இப்புவியில் யாருக்கும் கிட்டாத பெரும் பேறாக எண்ணிய ஹரிபாவும் அந்த வெள்ளிப் பாதுகைகளைத் தமது சிரமேல் வைத்துச் சுவாமிகளின் நாமங்களைக் கூறி ஆனந்தக் கூத்தாடியபடியே தமது இருப்பிடத்துக்குச் சென்றார்.

அன்று இரவு ஸ்ரீசமர்த்தர் ஊருக்கு வெளியே இருந்த அரசமரத்தினடியில் சென்று தங்கினார், கூடவே ஹரிபாவு, கஜானன், லட்சுமணன் பண்டிதர் மற்றும் பக்தர்கள் சென்று சுவாமிகளுடன் தங்கினர். நடுநிசியில் அனைவரும் தூங்கிக் கொண்டிருந்தபோது சுவாமிகள் திடீரென்று எழுந்து சென்று அந்த மரத்தின் மேலே நோக்கி "சாலா (வசை)! கீழே எனது பால கோபாலன் தூங்கிக் கொண்டிருக்கிறான். போ இங்கிருந்து!" என்று திட்டியவுடன் ஒரு எரிப்பந்து அங்கிருந்து வெளியேறி வானத்தில் சென்று மறைந்தது. இந்த அதிசயக் காட்சியை ஹரிபாவுவும் நண்பர்களும் படுத்துக் கொண்டே கண்டு திகைத்தனர்.

பின்பு சுவாமிகள் தமது படுக்கையில் சென்று தூங்கியவுடன் ஹரி எழுந்து சென்று அவரது திருப்பாதங்களை மெதுவாகப் பிடித்துச் சேவை செய்ய ஆரம்பித்தார். அப்போது சுவாமிகளுக்கும் ஹரிபாவுக்கும் இடையே நீண்டதொரு உரையாடல் அதிகாலை வரை தொடர்ந்து நடைபெற்றது. அதன் சாரம் அவர்களுக்கு மட்டுமே தெரியும். ஒருவேளை ஸ்ரீ சமர்த்த குருநாதர் அந்தத் தனிமைக்காகவே அக்கல்கோட் சந்தடியிலிருந்து வெளியே சென்று தங்கியிருப்பாரோ என்று எண்ணத் தோன்றியது.

பின்னர் விடிந்ததும் சுவாமிகள் ஹரிபாவுக்குத் தமது தொப்பி, நீண்ட அங்கி, அங்க வஸ்திரங்கள், ஆத்மலிங்கம் மற்றும் அனைத்தையும் பேரன்புடன் அளித்து விட்டு, "நீ உன்னுடைய சம்சார (உலக வாழ்க்கையிலிருந்து) பந்தத்திலிருந்து முற்றிலும் விலகுவாயாக" (சன்யாசம்) என்று திருவாய் மலர்ந்து அருளினார்.

ஹரிபாவு தம் நண்பர்களுடனும், சுவாமிகள் தமக்களித்த அனைத்துப் பொருட்களுடனும், உபதேசங்களுடனும் மும்பைக்குத் திரும்பினார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



"மந்திரமூலம் குரோர் வாக்யம்" என்பதற்கிணங்க ஹரிபாவு சன்யாசம் மேற்கொள்வதற்கான பூர்வாங்க வேலைகளைச் செய்யலானார்.

முதலில் தம்மிடம் இருந்த நூற்றுக்கணக்கான பவுன் நகைகளையும், நிலபுலன்கள், பசுமாடுகள் மற்றும் அனைத்துச் சொத்துக்களையும் விற்றுப் பணமாக்கி பிராம்மணர்களை அழைத்து முறைப்படி தான தர்மங்களைச் செய்தார்.

இது அவருடைய மனைவி தாராபாய்க்குச் சிறிதும் பிடிக்கவில்லை. தாராபாயின் கழுத்திலும், கைகள், காதுகளில் இருந்த அனைத்து நகைகளையும் கழற்றிக் கொடுக்குமாறு வேண்டினார். பின்பு தாலிக்கயிற்றில் இருந்த சிறிய பொன்னையும் கூட விட்டு வைக்காமல் அதையும் எடுத்துத் தானம் செய்துவிட்டார். வெறும் மஞ்சள் கயிறு மட்டுமே தாராபாயின் கழுத்திலிருந்தது. துக்கத்தில் கதறி அழுது கண்கள் வீங்கிய தாராபாய்க்கு அப்போது வயது இருபதுக்குள்ளாகவே இருந்தது.

சுவாமிகள் அனுக்ரஹத்தால் வைராக்கியத்தைப் பெற்ற ஹரிபாவுக்கு அவர் சன்யாசம் மேற்கொண்ட போது வெறும் இருபத்தைந்து வயதே ஆகியிருந்தது. அவ்வளவு இளம் வயதில் ஞானமும் வைராக்கியமும் குருவருளால் கிடைக்கப் பெற்ற "சுவாமி சுதன்" காவி உடையை அணிந்தார். தாராபாய்க்கு ஒரு வெள்ளைச் சேலையைக் கொடுத்துக் கட்டிக் கொள்ளச் செய்தார்.

தமது இளவயது மகன் சன்யாசம் மேற்கொண்ட செய்தியைக் கேட்டவுடன் பதறிப்போன ஹரியின் தாய் காகுபாயி கோவாவிலிருந்து ஓடோடி வந்து எவ்வளவோ சமாதானம் சொல்லியும் அவரது நிலையை மாற்ற முடியாமற்போனது.

சுவாமி சுதன் முதலில் "காமாட்டிபுரா"வில் மடத்தை நிறுவினார். பின்பு சிமாபாயி பேல்வாலி என்ற பக்தையின் அழைப்பை ஏற்று, 'காந்தே வாடி' என்ற இடத்தில் மடத்தை அமைத்தார். இவரை தரிசிக்க அனைத்துத் தரப்பு மக்களும் நாள்தோறும் வந்த வண்ணம் இருந்தனர். தமது இனிமையான குரலில் தாமே ஸ்ரீசமர்த்தர் மீது படைத்த "அபங்கம்" என்ற கவிதைகளை ஆடிப்பாடிப் பக்திப்பரவசத்தை அனைவருக்கும் ஊட்டினார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அக்கல்கோட்டுக்கு வருபவர்களிடம் ஸ்ரீசுவாமிகளும், 'தரியாகினாரே' (கடற்கரை, அதாவது மும்பைக்கு) போகுமாறு சொல்லிக் கொண்டிருந்தார். அவ்வாறு வந்த பக்தர்களிடம் சுவாமிசுதனும் அக்கல்கோட்டில் அவர்களுக்கு ஏற்பட்ட அனுபவங்களைத் தாமாகவே கூறி அனைவரையும் வியப்பிலாழ்த்தினார். அவர் சுவாமிகளுடைய திருக்குமாரனே என்பதில் எள்ளளவும் சந்தேகம் இல்லை என்பது நிரூபணமாயிற்று.

(இந்நூலாசிரியருக்கு எங்கே வேலை கிடைக்கும் என்று கேட்டதற்கு ஸ்ரீசுவாமிகள் "தரியாகினாரே" என்று ஆசி கூறியதற்கு இணங்க புதுச்சேரி (கிழக்கு கடற்கரை)யில் பணி புரிந்துகொண்டுள்ளார். மேலும் அவர்தம் திருப்புகழை பாடவும் கோவிலை நிர்மாணிக்கவுமே புதுவைக்கு அனுப்பியுள்ளதாக தோன்றுகிறது).

நரஸோஜி என்ற பார்சிக்கு அவரது இழந்த கண்பார்வையைச் சுவாமிசுதன் மீண்டும் அளித்ததால் சுவாமி சுதனின் புகழ் பார்சி மக்களிடம் பரவியது. நாநா ஸோஹ்னி என்ற நாஸ்திகரை மாற்றிச் சமர்த்த பக்தியில் லயிக்கச் செய்து ஸ்ரீசுவாமிகளின் பாதுகைகளை அளித்தார் சுவாமிசுதன். நாநாவும் குருபாதுகைகளை நாகரே என்ற ஊரில் (ரத்னகிரி மாவட்டம், மஹாராஷ்டிரா) ஸ்தாபிதம் செய்து பூஜித்து வந்தார். இன்றளவும் அந்தக் கோவில் செயல்படுகின்றது.

ஸ்ரீ அக்கல்கோட் மஹராஜின் பரிபூரண கிருபையால் அனைத்துச் சித்திகளையும் பெற்று "சுவாமிசுதன்" என்று பெயரிடப்பட்ட ஹரிபாவுவின் புகழ் பரவி நாலாபுறமிருந்தும் அவரைத் தரிசித்துத் தமது துன்பங்களிலிருந்து விடுபட்ட பக்தர்கள் ஸ்ரீசுவாமி சமர்த்தரின் பக்தியில் ஈடுபட்டனர்.

கி.பி. 1870 சித்திரை மாதத்திலிருந்து சுவாமிகளின் உத்சவத்தை ஆரம்பித்து வைத்தார் சுவாமிசுதன். ஒரு சமயம் அக்கல்கோட் வந்திருந்த சுவாமிசுதன் முரளீதர் கோவிலில் தமது அமிர்ததுல்யமான குரலில் சுவாமிகளின் பஜனை செய்வதைக் கேட்க பலரும் திரண்டனர். அந்தக் கோவிலின் சுவர் மிகப்பழமையாக இருந்ததால் பஜனையின் நடுவே அது பக்தர்களின்மீது இடிந்து விழும் நிலையில் இருந்ததைக் கண்ணுற்ற ஸ்ரீசமர்த்தர் பஜனை முடியும் வரை அந்த சுவரை விழாமல் அனுக்ரஹித்து பிறகு அனைவரும் சென்ற பிறகு விழச் செய்தார்.

ஒருசமயம் துவாரகாநாத் என்ற வக்கீல் மும்பையிலிருந்து தனது துணைவியாருடன் ஸ்ரீசமர்த்தரைத்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தரிசிக்க வந்திருந்தார். அப்போது சுவாமிகள் ஷேக்நூருதீன் பாபா தர்காவின் அருகிலுள்ள புளியந்தோப்பில் இருந்தார். இரவு ஒன்பது மணியளவில் தரிசிக்க வந்த துவாரகாவிடம், "உனக்கு ஒரு மகன் வேண்டி வந்திருக்கிறாய். ஆனால் என்னுடைய ஹனுமான் அங்கே முரளீதர் கோவிலில் இருளில் இருக்கிறானே, அவனை நீ கவனிக்க மாட்டாயா?" என்று வினவினார்.

சுவாமிகள் சொன்னது புரியாமல் நின்ற வக்கீலிடம் புஜங்கா என்ற அடியவர், முரளீதர் கோவிலில் ஸ்ரீசுவாமிசுதன் இருளில் இருப்பதாகவும், அங்கே விளக்கு வைத்து வருமாறு சமர்த்தர் சொல்வதாகவும் விளக்கினார். வக்கீலும் சுவாமிசுதனுக்கு வெளிச்சம் ஏற்பாடு செய்து மறுபடியும் சமர்த்தரிடம் வந்து நின்றார். அவரிடம் சுவாமிகள் பொட்டுக்கடலை வாங்கி வருமாறு பணித்தார். அவர் அதைக்கொண்டு வந்ததும் சுமார் ஒருமணிநேரம் வரை கடலையை வைத்து விளையாடி விட்டு, சிறிது பிரசாதமாக வக்கீல் தம்பதிக்கு அருளினார். ஒரு வருடத்தில் அவர்களுக்கு அழகான ஆண்குழந்தை பிறந்தது. அதாவது சுவாமிசுதனுக்குச் செய்யும் சேவையால் ஸ்ரீசமர்த்தர் மகிழ்ந்து நம் குறைகளை நீக்குவார் என்பது உண்மை.

ஒரு சமயம் சுவாமிசுதன் அக்கல்கோட் வந்தபோது ஸ்ரீசமர்த்த குருநாதர் அரண்மனையில் இருந்தார். அவ்வப்போது சுவாமிகள் அரண்மனையில் தங்குவது வழக்கமாக இருந்தது. அப்போது யாருக்கும் தரிசனம் கிடையாது. அரண்மனைக்குள் முக்கியமாக ஆண்களுக்கு அனுமதியில்லை.

அரண்மனை வாசலில் சாஷ்டாங்கமாகத் தரையில் விழுந்து கும்பிட்ட சுவாமிசுதன் மூன்று நாட்கள் வரை அப்படியே வணங்கியபடியே இருந்தார். அந்தப் பக்தியை வார்த்தைகளால் யாரால் வர்ணிக்க இயலும். மூன்றாம் நாள் தாய்ப்பசு கன்றினை நோக்கி மலையிலிருந்து ஓடி வருவதைப் போன்று குருமகராஜர் ஓடோடி வந்து சுவாமிசுதனை எழுப்பி அளவில்லாத அன்போடு அரண்மனைக்குள் அழைத்துச் சென்றார். அந்த மூன்று நாட்களும் சுவாமிசுதன் பக்திப் பெருக்கோடு வடித்த பல கீர்த்தனைகள் குருபக்திக்கு ஒரு எடுத்துக்காட்டாக விளங்கின. அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சுவாமிசுதனுக்கு அரண்மனைக்கு எப்போது வந்தாலும் அனுமதி அளிக்கப்பட்டது.

சுமார் நான்கு வருடங்களுக்குப் பிறகு ஒருமுறை அக்கல்கோட் வந்திருந்த சுதனிடம் சுவாமிகள் தாம் தமது



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அவதார நோக்கத்தைக் கூடிய விரைவில் முடித்துக் கொள்ளப் போவதாகவும், தமக்குப் பிறகு சுவாமிசுதனே ஆன்மீகச் சேவையை தொடர்ந்து செய்ய வேண்டும் என்றும் கூறினார். ஸ்ரீசமர்த்தரின் மீது அளவில்லாத பக்தி பூண்டு அனைத்து உலக வாழ்க்கையையும் தியாகம் செய்து அவராகவே வாழ்ந்து கொண்டிருந்த சுதனுக்குக் குருநாதர் சமாதி அடையப் போகிற செய்தி பேரிடியாக விழுந்தது.

சுவாமி இல்லாமல் தான் எப்படி உயிர்வாழ முடியும் என்று கதறிக் கண்ணீர் வடித்த சுவாமிசுதன் சமர்த்தருக்கு முன்பாகவே தான் உயிர்விட வேண்டும் என்று தீர்மானித்தார். அந்தக் கணத்திலிருந்து அவரது உடல்நிலை மோசமாகத் தொடங்கியது.

கி.பி. 1874 ஆவணி மாதத்தில் சுவாமிசுதனின் உடல்நிலை மிகவும் மோசமானதை தொடர்ந்து, ஸ்ரீசமர்த்தர் அவரை மும்பையிலிருந்து அக்கல்கோட் வருமாறு பலமுறை அழைத்தும் வராததால், ஸ்ரீ பாதபட் மற்றும் கிருஷ்ணப்பாவை அனுப்பிக் கையோடு அழைத்து வருமாறு பணித்தார். ஆனால் சுவாமிசுதன் வரவேயில்லை.

ஸ்ரீசமர்த்தருக்குக் கோபம் வந்தது. "அவனை குண்டுகட்டாக கட்டியோ அல்லது ஒரு பெட்டியில் போட்டுக் கொண்டோ இழுத்து வாருங்கள்" என்றும் "அவன் வரவில்லை என்றால் அவனை சுட்டுத் தள்ளுவதற்காகப் பீரங்கியை தயார் செய்து விடுவேன்" என்றும் பலவாறாக சொல்லிக் கொண்டிருந்தார்.

இறுதியில் ஆவணி மாத பிற்பகுதியில் பிரதமை தினத்தன்று சுவாமிசுதன் யோக சமாதி அடைந்தார். அவருடைய பக்தர்களுக்கு அது யாராலும் ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாக இருந்தது. இவ்வளவு இளம் வயதில் துறவும் பூண்டு, பல்லாயிரக்கணக்கான பக்தர்களுக்கு ஸ்ரீசமர்த்தரின் வழியில் நடக்கச் செய்து பக்தி சாம்ராஜ்யத்தை ஏற்படுத்திய சுவாமிசுதனின் முடிவு அனைவரையும் சோகத்திலாழ்த்தியது.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 50. சுந்தரி (குரங்கு)

அக்கல்கோட் சமஸ்தானத்து ராணுவ அதிகாரி ஒரு பெண் குரங்கை 'சுந்தரி' என்று பெயரிட்டு வளர்த்து வந்தார். நாளாக ஆக அது சேட்டைகள் பல செய்ய ஆரம்பித்தது. வருவோர் போவோரைக் கடிப்பது, பயமுறுத்துவது, பொருட்களைப் பிடுங்குவது என்று ரகளை செய்து கொண்டிருந்தது. ஓரிரண்டு தடவை அந்த அதிகாரியையே கடிக்கச் சென்றதால் கோபமடைந்த அவர் சுந்தரியை சுட்டுத் தள்ளுமாறு தமது படைவீரர்களுக்கு ஆணையிட்டார்.

இதை அறிந்து கொண்ட சுந்தரியும் அந்த வீரர்களிடம் அகப்படாமல் தப்பிச் சென்று கண்டோபா கோவிலுக்குப் பின்னால் சென்று ஒளிந்து கொண்டது. இதைப்பார்த்த சுவாமிகளின் சேவகரான புஜங்கா நேராகக் குருநாதரிடம் வந்து விஷயத்தைக் கூறி, "அதை இங்கே அழைத்து வரவா?" என்று வினவினார். சுவாமிகளும், "அழைத்து வா!" என்று ஆசியருளினார். மீண்டும் கோவிலுக்குச் சென்ற புஜங்கா சுந்தரியைப் பார்த்து, "உன்னை சுவாமி சமர்த்தர் அழைக்கிறார் வா!" என்றதும் நன்கு பழகிய நாய்க்குட்டி வாலை ஆட்டிக் கொண்டே வருவதைப் போலச் சுந்தரியும் அவர் பின்னாலேயே நன்றியுடன் ஓடி வந்தது.

சத்குருவைப் பார்த்ததும் ஓடோடிச் சென்று அவர்தம் பாதங்களில் விழுந்து குட்டிக் கரணம் போட்டு வணங்கிய சுந்தரியைப் பார்த்து சுவாமிகள், "என்னடி! மனிதர்களைக் கடிக்கிறாயாமே? உனக்குத் திமிரு அதிகம் ஆயிடுச்சு. இனிமே யாரையாவது கடிச்சேன்னா லட்ச லட்சமாக சவுக்கடி விழும் பாரு!" என்று எச்சரித்தார்.

அதற்குப்பிறகு சுந்தரி யார் வம்புக்கும் போகாமல் மிகவும் அமைதியாகச் சுவாமிகள் எங்கிருந்தாலும் அதற்குப் பக்கத்திலுள்ள மரங்களிலேயே கூடவே சென்று கொண்டிருந்தது. குருவும் அதற்குத் தம்முடைய தலைப்பாகையைப் போட்டு வேடிக்கை பார்ப்பார். தம் கழுத்திலிருந்து மாலைகளைப் போடுவார். அதற்கு உண்ண இனிப்புகளைக் கொடுத்து மகிழ்வார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



வெகுகாலம் சுவாமிகளின் அரவணைப்பில் வாழ்ந்த அந்த குரங்கு முக்தியடைந்த பிறகு மிகவும் மரியாதையுடன் அதற்கு இறுதி ஊர்வலம் எடுத்து, பக்தர்கள் கண்டோபா கோவில் அருகே சமாதி அமைத்தனர். சத்குருவின் தர்பாரில் அடைக்கலம் புகுந்த மனிதர்களுக்கு மட்டுமின்றி, விலங்குகளுக்கும் சிறந்த வாழ்வும் முக்தியும் கிடைக்கும் என்பதற்கு சுந்தரியின் கதையும் ஒரு சான்றாகும்.

"மனம் ஒரு குரங்கு, அதை ஸ்ரீசமர்த்தரிடம்

அர்ப்பணித்து விட்டால் அமைதியும்

மகிழ்ச்சியும் தாமே வரும்"

குருகடாட்சம் பரிபூரணம்

## 51. மீனவக் கப்பல்

மும்பையில் 'தாணே' என்ற ஊரில் லட்சுமணன் என்ற மீனவர் ஒரு பெரிய கப்பலுடன் மீன்பிடி தொழில் செய்து வந்தார். ஒரு சமயம் எதிர்பாராதவிதமாக வந்த புயலில் சிக்கிக் கப்பல் மூழ்க ஆரம்பித்தது. எவ்வளவோ முயன்றும் காப்பாற்ற முடியாததால் கடல் தண்ணீர் கப்பலுக்குள் நுழைந்தது. பீதியில் அனைவரும் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்தனர்.

லட்சுமணன் இரண்டு மூன்று முறை அக்கல்கோட் வந்து ஸ்ரீசுவாமிகளை தரிசித்துச் சென்றிருந்தார். மனித முயற்சிகள் தோல்வியாகும் போது தெய்வத்திடம் முறையிட நினைத்து லட்சுமணன் மனமுருகச் சுவாமி சமர்த்தரிடம் வேண்டிக் கொண்டார். "அக்கல்கோட்டில் வசிக்கும் எங்கள் அன்புத்தாயே! ஓடிவந்து எங்களைக் காப்பாற்று! உன்னை விட்டால் கதி யாருளர்?" என்று முழு நம்பிக்கையுடன் தொழுதார்.

அவ்வமயம் சத்குருநாதர் சோளப்பாவின் வீட்டில் பலகையில் அமர்ந்திருந்தார். திடீரென்று கீழே இறங்கிய சமர்த்தர் தமது வலது கையால் கீழேயிருந்து எதையோ மிகவும் பலமாக "ம்..ம்..ம்.." என்று மேலே கொண்டு வர முயற்சித்தார். சிறிது நேரத்திற்குப் பிறகு மீண்டும் பலகையின் மீது அமர்ந்த



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சுவாமிகளின் கையிலிருந்து நீர் தாரை தாரையாக வந்து கொண்டிருந்தது. அங்கே அமர்ந்திருந்த அடியவர்கள் அந்த நீரைச் சுவைத்துப் பார்த்தபோது உப்புக் கரித்தது.

ஆச்சரியத்துடன் சுவாமிகளிடம், "குருநாதா! இந்த உப்புத் தண்ணீர் உங்கள் கையில் எப்படி வந்தது?" என்று வினவினர். சமர்த்தரும், "கப்பலை மேலே தூக்கி விட்டேனல்லவா?" என்று பதிலளித்தார். ஒன்றும் புரியாத அடியவர்கள் முழித்தனர். நான்கு நாட்களுக்குப் பிறகு லட்சுமணன் தம் குடும்பத்தாருடனும் சுவாமிநாதரால் காப்பாற்றப்பட்ட அனைத்து மீனவர்களுடனும் தங்களது நன்றியைத் தெரிவிப்பதற்காக அக்கல்கோட் வந்து சேர்ந்தனர்.

பராக்கிரமரான, சர்வ வல்லமை பொருந்திய, பக்தவத்சல ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜ் தங்களைக் காப்பாற்றியநிகழ்ச்சியை அனைவரிடமும் கூறி மகிழ்ந்தனர். அதற்குப் பிறகுதான் அடியவர்களுக்குச் சுவாமிகள் சோளப்பாவின் வீட்டில் நிகழ்த்திய அற்புதம் தெரியவந்தது.

இதேபோன்ற ஒரு நிகழ்ச்சி சீரடி சாயிபாபாவின் திருவிளையாடல்களிலும் உள்ளது. ஒரு சமயம் ஒரு இரும்புப் பட்டறையில் ஒரு பெண் தனது கைக்குழந்தையை மடியில் வைத்துக் கொண்டே, உலைக்கு அருகில் அமர்ந்து காற்று அடித்துக் கொண்டிருந்தாள். அவளது நோய்வாய்பட்ட கணவன் ஏதோ வேண்டுமென்று குரல் கொடுத்தவுடன் குழந்தை தன் மடியில் இருந்ததை மறந்து அவசர அவசரமாக எழுந்து ஓடினாள்.

எழுந்த மறுகணமே அக்குழந்தை கொழுந்து விட்டெரியும் நெருப்பில் விழப்போன போது, "பாபா!" என்று அலறியதும் அக்குழந்தை தாமாகவே அவளது கைகளில் வந்து விழுந்தது. அவள் சாயிபக்தையாதலால் பாபாவை அழைத்ததும் அக்கணமே அவளது குழந்தை காப்பாற்றப்பட்டது.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அதே வேளையில் சீரடியில் பாபா திடீரென்று எழுந்து சென்று துவாரகாமாயி (மசூதித் தாய்) யில் என்றும் அணையாமல் எரிந்து கொண்டிருக்கும் "துனி" (Dhuni) என்கிற ஹோம குண்டத்தில் தமது திருக்கரங்களை நுழைத்து மேலே எதையோ தூக்கிவிட்டார். துனியின் நெருப்பு பட்டு பாபாவின் கைகளில் தீப்புண்கள் உண்டானது. (வெகு காலம் வரை அதற்கு தினமும் நெய் தடவி துணியைச் சுற்றும் சேவையை குஷ்டரோகத்தால் பாதிக்கப்பட்டிருந்த பாகோஜி ஷிண்டே என்ற ஒரு அடியவருக்கு அருளி அதன்மூலம் தமது ஸ்பரிச ஆசீர்வாதத்தை அளித்து நலமடையச் செய்தார்).

"கைகளை வெறுமனே எரியும் நெருப்பில் ஏன் விட்டீர்கள்?" என்று அடியவர்கள் கேட்டபோது, பாபா ஒன்றும் பேசவில்லை. சில நாட்களுக்குப் பிறகு தனது குழந்தையையும் கணவனையும் அழைத்துக் கொண்டு சீரடிக்கு வந்த அந்த பக்தை நடந்ததை அனைவரிடமும் கூறி எங்கும் நிறைந்திருக்கும் பரமாத்மாவின் அவதாரமான, கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வந்து காப்பாற்றும் தீன தயாளரான சத்குரு ஸ்ரீ சாயிநாதரின் புகழைப்பாடி பாபாவிடம் நன்றி தெரிவித்து, அந்த துனியிலிருந்து வரும் சாம்பலான "உதி" (Udhi) பிரசாதத்தைப் பெற்றுக் கொண்டு ஊருக்கு திரும்பிச் சென்றாள். சாயிபாபாவும் ஸ்ரீ சமர்த்தரும் தத்த அவதாரிகளே என்பதற்கு இதுவும் ஒரு சான்றாகும்.

பஞ்ச பூதங்களையும் அடக்கி ஆளும் சாயி, சமர்த்த மஹராஜர்களின் பாதம் பணிவோம். பயமின்றி ஆனந்தமுடன் வாழ்வோமாக!

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



## 52. பெண்ணை ஆணாக்கியது

மொகலாயி என்ற ஊரின் அருகேயுள்ள ஜோகாயியில் "ஆம்பே" என்கிற இடம் உள்ளது. அந்த ஊரிலிருந்த மலைக்கு ஸ்ரீசுவாமிநாதர் ஒரு சமயம் வந்து சேர்ந்தார். அம்மலை உச்சியில் ஒரு விவசாயியின் ஐந்து வயது மகள் தனது மாடுகளை மேய்க்க வருவது வழக்கம். அச்சிறுமிக்கும் குருநாதருக்குமிடையே நட்பு மலர்ந்தது. தினமும் சுவாமிகளுடன் விளையாடிவிட்டு மதிய நேரத்தில் தான் எடுத்து வந்திருந்த உணவை அவருடன் பகிர்ந்து சாப்பிட்டுச் சென்று கொண்டிருந்தாள் அந்த சிறுமி. என்னே அவளது பாக்கியம்!

இப்படி இருக்கையில் பணத்திற்கு ஆசைப்பட்டு அந்த சிறுமியின் தந்தையார் அவளை ஆண் பிள்ளை போல் வேடமிட்டு ஒரு குழந்தையில்லா செல்வந்தருக்கு விற்றுவிட்டார்.

அந்தக்கால வழக்கப்படி பால்ய விவாஹம் நடத்தத் தீர்மானித்து, அந்தப் பெண்ணுக்கு (ஆணுக்கு) ஒரு மணப்பெண்ணைத் தேர்ந்தெடுத்துத் திருமணம் நிச்சயிக்கப்பட்டது. கோலாகலமாக யானைகள், குதிரைகளுடன் பல்லக்கில் மணமகனை (சிறுமி) ஊர்வலமாக வாத்தியங்களுடன் அழைத்துச் சென்று மணமகள் வீட்டை அடைந்தனர்.

மணமகனை வரவேற்று அவனது கால்களில் மஞ்சள் பூசுவதற்காக குனிந்த மணமகள் வீட்டாருக்கு தூக்கி வாரிப் போட்டது. ஆம்! அங்கே, ஆணின் பாதங்களுக்குப் பதிலாக ஒரு பெண்ணின் அழகிய கால்களே இருந்தன.

விஷயம் காட்டுத்தீ போலப் பரவியதும் திருமணம் நிறுத்தப்பட்டது. அவமானத்தால் கொதித்தெழுந்த செல்வந்தர் நேராக அரண்மனைக்குச் சென்று மன்னரிடம் புகார் கொடுத்தார். ஒரு விவசாயி தனது பெண்ணைப் பையன் என்று சொல்லித் தன்னை ஏமாற்றிவிட்டதற்காக அவருக்கு மிகப்பெரிய தண்டனை அளிக்குமாறு வேண்டினார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இந்த விசித்திரமான வழக்கை விசாரித்த மன்னரும் மிகவும் கோபமடைந்தார். அந்த சிறுமியைக் கொல்லவும் விவசாயியின் வீட்டைத் தீக்கிரையாக்கி அவரை நாடு கடத்தவும் உத்தரவிட்டார்.

மலை உச்சிக்குச் சிறுமியைக் கொல்வதற்காக இழுத்துச் சென்று கொண்டிருந்த படைவீரர்களிடம் அச்சிறுமி கண்ணீருடன், "ஐயா! என்னைக் கொல்வதற்கு முன்னால் ஒரு சிறு வேண்டுகோள். மலையுச்சியிலுள்ள மாமரத்தினடியில் உள்ள எனது தாத்தாவை ஒரே ஒரு முறை பார்த்துவிட்டு வர அனுமதியுங்கள்" என்று மன்றாடிக் கேட்டுக் கொண்டாள். அவளைப் பார்த்து மனமிரங்கிய வீரர்களும் அதற்குச் சம்மதித்தனர்.

அவளை நேராக மாமரத்திற்கு அழைத்துச் சென்றனர். பரமதயாளரான ஸ்ரீசுவாமிநாதரைக் கண்டதும் ஓடோடிச் சென்று அவர்தம் பாதங்களைத் தம் கண்ணீரால் நனைத்த அந்தச் சிறுமி நடந்த சம்பவங்களைக் கூறித் தம்மைக் காக்குமாறு மன்றாடினாள். "தாத்தா! நான் தங்களுடைய தர்ம புத்திரியாவேன். உங்களைத் தவிர யாராலும் என்னைக் காப்பாற்ற முடியாது" என்று விண்ணப்பித்துவிட்டு சுவாமிகளுக்குப் பின்னர் போய்ப் பயத்தில் நடுநடுங்கியவாறே ஒளிந்து கொண்டாள்.

மரணத்தின் வாயிலில் தள்ளப்பட்ட அந்த அப்பாவிச் சிறுமியைத் தமது திருக்கரங்களால் வாரி மடியில் அமர்த்திக் கொண்ட தீனதயாளரான குருநாதர் அவளிடம், "பயப்படாதே! அந்தக் காலனே (எமனே) பிரத்தியட்சமாக உன்னைக் கொண்டு செல்ல வந்தாலும், அவனையும் துரத்தி விடுவேன்" என்று அபயமளித்தார். பிறகு அந்தப்படை வீரர்களைப் பார்த்து தாம் நரசிம்ம அவதாரம் எடுத்தபோது இருந்த கோபக்கனலாய் மாறிய சுவாமிகள், "அடேய்! உடனே போய் மன்னனையும் அந்தச் செல்வந்தனையும் இங்கே அழைத்து வாருங்கள். இல்லையேல் உங்களை இங்கேயே எரித்துச் சாம்பலாக்கி விடுவேன்" என்று கர்ஜித்தார். அதைக் கேட்டதும் வயிறு கலங்கிய வீரர்களும் அவர்களை அழைத்து வர ஓடிப் போனார்கள்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சிறிது நேரத்தில் மன்னரும், அந்தச் சிறுமியைத் தத்து எடுத்து வளர்த்த செல்வந்தரும், பிறரும் மலையுச்சிக்கு ஓடி வந்தார்கள். சத்குருவின் பயங்கரமான அனல்கக்கும் பார்வையைத் தாங்க முடியாமல் நடுநடுங்கியவாயே நின்றிருந்தவர்களைப் பார்த்து சுவாமிகள், "பாருங்க! இவள் பெண்ணா, பையனா என்று கூறி சிறுமியைப் பார்க்க சொன்னபோது, அனைவரது கண்களும் ஆச்சரியத்தில் அகல விரிந்தன! ஆம்! தாங்கள் இதுவரை பார்த்த அந்த சிறுமி தத்தாத்திரேய அவதாரியான பரமபுருஷ ஸ்ரீ சமர்த்த சுவாமிகளின் பெருங்கருணையால் ஆண்பிள்ளையாக மாறி விட்டிருந்தாள்.

அவளது வளர்ப்பு தந்தையான செல்வந்தர் உடனே ஓடிச் சென்று சுவாமிராஜரின் திருப்பாதங்களில் பணிந்து தமது தவறை மன்னிக்குமாறு வேண்டினார்.

சுவாமிகளும் அவரை மன்னித்துவிட்டு, "போ! இந்தப் பையனுக்குத் திருமணம் நடத்து!" என்று ஆசியருளி அனைவரையும் அனுப்பி வைத்தார்.

ஏற்கனவே நிச்சயிக்கப்பட்டபடியே பையனாக மாறிய இந்த சிறுமிக்கும் மணமகளுக்கும் விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

இதுகாறும் இவ்வுலகில் யாரும் செய்திராத அற்புதச் செயல் இதுவன்றோ! நம்மைப் படைத்த பிரம்மனுக்கே நம்மை வேறு பாலராக (ஆணை பெண்ணாகவோ, பெண்ணை ஆணாகவோ) மாற்ற அதிகாரமில்லாத போது, மும்மூர்த்திகளின் அம்சமான ஸ்ரீதத்தாத்திரேய அவதாரியான ஸ்ரீசுவாமி சமர்த்தர் தன்மீது அளவற்ற பக்தி கொண்ட அந்தச் சிறுமியை மரணத்தின் விளிம்பிலிருந்து காப்பாற்றிய தோடல்லாமல், பெரிய செல்வந்தரின் ஒரே வாரிசாகவும் ஆக்கி அழகிய பெண்ணுடன் திருமணமும் நடத்தி வைத்து, அனைவரின் உள்ளத்திலும் நீங்காத இடம் பெற்றுவிட்டார். செயற்கரிய செய்பவரே நமது சுவாமி சமர்த்தர்!

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 53. கோடி தீர்த்தம்

ஸ்ரீசமர்த்தர் இராமேஸ்வரத்திற்கு விஜயம் செய்த போது கோவிலின் அருகிலிருந்த கோடி தீர்த்தத்திற்குக் குளிக்கச் சென்றார். அங்கிருந்த பூசாரிகளிடம் தமக்குத் தீர்த்தம் கொடுக்குமாறு வேண்டியபோது, அவர்கள் அதற்குப் பணம் கேட்டனர். சத்குருவோ, “நானோ சன்யாசி, என்னிடம் பணம் ஏதுமில்லை. ஆகவே என்னைத் தீர்த்தத்தால் குளிப்பாட்டுங்கள்' என்று பணிவாக வேண்டினார். அவர்களோ, “பணமில்லாதவர்களுக்கு எதற்குக் கோடி தீர்த்தம்! இலவசமாக தீர்த்தம் வழங்கமாட்டோம்!” என்று பிடிவாதமாக மறுத்தனர்.

அதனால் கோபமுற்ற சுவாமிகளும், “தீர்த்தம் இங்கிருந்து போய்விடும்! நீங்கள் சும்மா உட்கார்ந்திருங்கள்” என்று கூறி விட்டு அவ்விடத்தை விட்டு அகன்றார்.

“மாதவனடியாரை மனம் நோகப் பண்ணினால் மாடு ஆடு ஜன்மம் வந்து சேரும்” என்ற ‘மதுரையின் ஜோதி' ஸ்ரீமந் நடன கோபால நாயகியாரின் திருவாக்குப்படியே ஸ்ரீதத்தாவ தாரியின் மனம் நோகச் செய்ததன் விளைவாகக் கோடி தீர்த்தம் முழுவதும் புழுக்கள் நெளிந்து துர்வாசனை வீசத் தொடங்கியது. பல்லாண்டு காலமாகப் பவித்ரமான தூய தீர்த்தமாக விளங்கியதும், அந்தப் பூசாரிகளின் பகற்கொள்ளைக்கு ஆதாரமாகவும் இருந்த கோடி தீர்த்தம், ஸ்ரீசுவாமிகளை அவமதித்ததால் நாசமானது.

இதற்குக் காரணம் அத்துறவியிடம் குளிக்கப் பணம் கேட்டதன் விளைவாகத்தான் என்று உணர்ந்து கொண்ட பூசாரிகளும் அவரை இராமேஸ்வரத்தின் மூலை முடுக்குகளிலும், வனங்களிலும், கடற்கரையிலும் தேடிப்பார்த்தனர். எங்கு தேடியும் சுவாமிகள் தென்படவில்லை. தீர்த்தமும் துர்நாற்றமடைந்து ‘தீர்த்தம்' என்ற மதிப்பை இழந்தது.

பின்பு சுவாமிகளைத் தேடி நாலா புறங்களிலும், வெளியூர்களிலும் தேடிக் கொண்டே சிருங்கேரி ஸ்ரீசாரதாம்பாள் மடத்தை அடைந்தனர். அப்போதிருந்த ஜகத்குருவிடம் நடந்த விஷயங்களைத் தெரிவித்து, சுவாமிகள் எங்கே இருக்கிறார்


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



என்பதைத் தங்களுக்குத் தெரிவிக்க வேண்டும் என்று பிரார்த்தித்தனர்.

யோகசமாதியில் அமர்ந்து தியானம் செய்த பிறகு விழித்துக்கொண்ட ஜகத்குரு, அந்த பூசாரிகளை நோக்கி, "அடே அறிவிலிகளே! அந்த சன்யாசி வேறு யாருமில்லை. பிரத்தியட்சமான ராமேஸ்வரரே தத்தாவதாரியாக பாரத தேசமெங்கும் சுற்றி பக்தர்களுடன் திருவிளையாடல்களைப் புரிந்து கொண்டு பேசும் தெய்வமாக நம்மிடையே உலவிக் கொண்டிருக்கிறார். அவர் தற்போது ராமேஸ்வரத்திலேதான் இருக்கிறார். அவர்தம் திருவடிகளில் வீழ்ந்து மன்னிப்புக் கோரினால் பக்தவத்சலன் நிச்சயம் அருள்புரிவார். இனிமேலாவது பக்தர்களிடம் மரியாதையாகவும் அன்புடனும் நடந்து கொள்ளுங்கள். இறைவன் நன்கொடையான கோடி தீர்த்தம் அனைவருக்கும் பொதுவானது. அதை விற்பதற்கு உங்களுக்கு அதிகாரமில்லை. நியாயமான முறையில் உங்களுக்குக் கிடைக்கும் தட்சிணைகளைப் பெற்றுக் கொண்டு, உண்மையே பேசி உத்தமராய் வாழ்வீராக!" என்று அறிவுறுத்தி ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார்.

இரு தினங்களுக்குப் பிறகு இராமேஸ்வரத்திற்குத் திரும்பி வந்த பூசாரிகள் நேராக இராமலிங்கரைத் தரிசிக்கக் கோவிலுக்குச் சென்றபோது, என்னே ஆச்சரியம்! அங்கே சிவலிங்கத்திற்குப் பதிலாக சாட்சாத் பரமசத்குரு ஸ்ரீசுவாமி சமர்த்த மஹாராஜரே அமர்ந்திருந்தார். ஓடோடிச் சென்று அவர்தம் பாதகமலங்களில் வீழ்ந்து வணங்கித் தங்களை மன்னிக்குமாறு வேண்டி மனம் திருந்திய பூசாரிகளைப் பார்த்துக் குருநாதர், "போங்கள்! உங்கள் எண்ணம் போலவே பலன் கிடைக்கும்!" என்று ஆசீர்வதித்து மறைந்தார்.

அங்கிருந்து நேராகக் கோடி தீர்த்தத்திற்கு வந்த பூசாரிகள் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்தனர். ஆம்! பல்லாண்டு காலமாக வற்றாத புண்ணிய தீர்த்தமான கோடி தீர்த்தம் முன்பு போலவே தூய்மையாகக் காட்சியளித்தது.

இவ்வாறு பூசாரிகளின் கர்வத்தைப் போக்கி, ஏழை எளியவர்களுக்கும் கோடி தீர்த்தம் கிடைக்க வழி வகுத்தார் ஸ்ரீசமர்த்தர்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 54. காஞ்சிபுரத்தை மீட்டுத் தந்த வள்ளல்

தமிழ்நாட்டின் புகழ்பெற்ற திருத்தலமான காஞ்சிபுரத்தில் சிவகாஞ்சி, விஷ்ணு காஞ்சி என்ற இரு ஊர்கள் உள்ளன. முன்பு ஒரு சமயம் இவ்விரு ஊர்களும் வைஷ்ணவர்களின் கையில் இருந்தன. அப்போது அப்பகுதியை ஆட்சி செய்து கொண்டிருந்த அதிகாரிகள் ஒரு நிபந்தனை விதித்தனர். அதாவது சிவகாஞ்சி மற்றும் விஷ்ணு காஞ்சிக்கு உரிமை கொண்டாடுபவர்கள் அவற்றிற்கு உரிய மூல ஆதாரங்களையும் பத்திரங்களையும் சர்க்காரிடத்தில் (ஆட்சியாளர்களிடம்) காண்பித்து மெய்ப்பிக்க வேண்டும் என்றும், அவ்வாறு செய்யவில்லையென்றால் இரண்டு ஊர்களையும் அரசாங்கம் ஜப்தி செய்து தன் வசமாக்கிக் கொள்ளும் என்பதே அது.

ஆனால் வைஷ்ணவர்களிடம் அந்த ஊர்களுக்குரிய தான பத்திரங்கள் இல்லாததால் அரசாங்கம் அவற்றை ஜப்தி செய்துவிட்டது. இந்நிலையில் ஸ்ரீசுவாமி சமர்த்தர் தேச சஞ்சாரம் செய்து கொண்டே சிவகாஞ்சிக்கு விஜயம் செய்தார். தத்தாவதாரியின் வருகையைக் கேள்வியுற்ற வைஷ்ணவர்களும் சிவகாஞ்சிக்கு வந்து சுவாமிகளைத் தரிசித்துத் தங்களது குறைகளையும், ஜப்தி செய்ததினால் தங்களது வாழ்வாதாரம் பாதிக்கப்பட்டு உண்ண உணவுக்கே துன்புறும் நிலையையும் எடுத்துக் கூறி, இந்த சங்கடத்திலிருந்து தங்களைக் காப்பாற்றுமாறு பணிவுடன் வேண்டி நின்றனர்.

அவர்கள் மீது கருணை கொண்ட சத்குருநாதர் அவர்களிடம், “அந்த அதிகாரிகளை இங்கே அழைத்து வாருங்கள்” என்று கட்டளையிட்டார். அவர்கள் வந்தவுடன் அதிகாரிகளிடம் சுவாமிகள், “என்னடா! எங்களது ஊர்களை ஜப்தி செய்து எங்களைப் பட்டினியால் சாகடிக்கிறீர்களா?” என்று வினவியதும் அவர்களும், “மஹராஜ்! இந்த ஊர்களின் பத்திரங்களைக் காண்பித்தால் தங்களிடமே திருப்பி தந்துவிடுவதாக அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது” என்று பணிவுடன் பதிலளித்தனர்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தயாநிதியான சுவாமிகளும் அவர்களிடம் அங்கே ஓடிக் கொண்டிருந்த நதியில் ஒரு குறிப்பிட்ட இடத்தைச் சுட்டிக்காட்டி, "இங்கே நதியில் மூழ்கிக் கிடக்கும் ஒரு பெரிய கல்லை (பாறை), எடுத்து வாருங்கள். அதில் எழுதியிருப்பதைப் பாருங்கள்" என்று திருவாய் மலர்ந்தார்.

சுவாமிகளின் அருள்வாக்குப்படியே நீரில் மூழ்கிக்கிடந்த ஒரு பாறையை அகற்றி மேலே கரைக்கு எடுத்து வந்து பார்த்தபோது, என்னே ஆச்சரியம்! அந்த பாறையில் சிவகாஞ்சி மற்றும் விஷ்ணு காஞ்சி ஆகிய இரண்டு ஊர்களை யார் யாருக்கு தானமாக வழங்கியது, எந்த நாளில், எதற்காகத் தான மளிக்கப்பட்டது என்பதற்கான அனைத்து ஆதாரங்களும் செதுக்கி வைக்கப்பட்டிருந்தன. அந்த ஆதாரத்தைப் படித்துப்பார்த்துத் திருப்தியடைந்த அதிகாரிகளும் குருநாதரைச் சாஷ்டாங்கமாக வணங்கி, ஜப்தி செய்திருந்த ஊர்களைச் சைவர்கள் மற்றும் வைஷ்ணவர்களிடமே திருப்பித்தந்து விட்டுச் சென்றனர்.

அனைவரும் பறிபோன தங்களது வாழ்வாதார உரிமைகளை மீட்டுக் கொடுத்த ஸ்ரீசுவாமிநாதருக்குப் பூஜைகளும் நைவேத்தியங்களும் மற்றும் பதினாறு வகை (ஷோடச உபச்சாரம்) சேவைகளையும் செய்து மகிழ்ந்து தமது நன்றிகளை செலுத்தினர்.

"ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜ்கீ ஜெய்!" என்று விண்ணதிர ஜெயகோஷமிட்டுத் தத்தம் மனைவி, குழந்தைகளுடன் மகிழ்ச்சியுடன் இல்லங்களுக்குச் சென்றனர்.

இவ்வாறாகச் சுவாமிகளின் திருப்பாதங்கள் பட்ட இடமெல்லாம் புனிதமாகவும் பக்தர்களின் மகிழ்ச்சிக்கும் அமைதிக்கும், நல்வாழ்வுக்கும் வழிகாட்டியாக அமைந்ததே பரமானந்தமான சத்தியமாகும்.

குருவின் பாதம் பணிவோம்! இகபர சுகம் அடைவோம்!

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# 55. மஹா சமாதி லீலை

"எவரும் பிறப்பதுமில்லை; அழிவதுமில்லை" என்ற சத்குரு ஸ்ரீசாயிபாபாவின் திருவாக்குப்படி ஆத்மா பிறப்பதுவுமில்லை, இறப்பதுவுமில்லை. ஜீவாத்மாவே அழியாத போது பரமாத்மாவினுடைய திருஅவதாரிகள் எப்படி மறைய முடியும் என்ற கேள்வி நம்முன்னே எழுகின்றதல்லவா?

ஜகத்குரு ஸ்ரீஆதிசங்கரரின் அத்வைதத் தத்துவத்தின்படி இறைவன் தன்னையே அனைத்து ஜீவராசிகளாகவும் பிறப்பித்துக் கொண்டு, காத்து, பின்பு அழித்தும் முத்தொழில்களையும் ஒரு விளையாட்டாகச் செய்து கொண்டிருக்கிறான். இந்தப் படைப்பின் இரகசியம் எவராலும் இதுவரை அறியமுடியவில்லை. "கண்டவர் விண்டிலர், விண்டவர் கண்டிலர்" என்ற கூற்றுப்படி இந்த இரகசியத்தை அறிந்தவர்கள் சொல்லியதில்லை; வெறும் வாய்மொழிகளால் பேசுபவர்களுக்கு உண்மையிலேயே தெரியாது என்பதே ஆன்றோரின் வாக்கு.

ஜீவாத்மா தனது பாவ, புண்ணியங்களுக்கேற்றவாறு மீண்டும் மீண்டும் பல பிறவிகளெடுத்தும், மாண்டும் போகும் ஒரு கொடிய சுழலில் சிக்கித் தவிக்கிறது. இதை விடுவிப்பதற்காக (முக்தி) பரமாத்மாவே அவ்வப்போது தன் நிலையிலிருந்து கீழிறங்கிப் (அவதார) பற்பல இடங்களில், பற்பல பெயர்களில் தோன்றி மானுட சமுதாயத்திற்கு வழி காட்டி அருள்கிறான்.

அவ்வாறு உதித்த அவதாரிகளும் மனித சமுதாயத்திலே சிலகாலம் வாழ்ந்து பிறகு ஓரிடத்தில் "சமாதி" யடைந்து தமது தெய்வீக உடல்களை மனிதரின் புறக்கண்களிலிருந்து மறைத்துக் கொள்கிறார்களே ஒழிய, பக்தர்களின் பக்குவத்திற்கேற்றார் போல் அவர்களுக்குத் தமது தரிசனமும் தந்து என்றும் மரணமில்லாத பெருவாழ்வு வாழ்ந்து கொண்டே யிருக்கிறார்கள் என்பதே சத்தியமான பேருண்மையாகும்.


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



நமது பாரத புண்யபூமியில் லட்சக்கணக்கான யோகியர்கள், தபஸ்விகள், ரிஷிகள், முனிகள், மஹான்கள், அவதார புருஷர்களின் திருச்சமாதிகளில் இன்றளவும் அவர்கள் வாழ்ந்து கொண்டும், கேட்டவர்க்குக் கேட்டபடி அருள் பாலித்தும் வருவது கண்கூடு. எடுத்துக்காட்டாகச் சில.

1. மதுரை ஆளும் மங்கையர்க்கரசியாம் அன்னை மீனாட்சியின்பால் வளர்ந்து மெய்ஞ்ஞானியான பரமசத்குரு ஸ்ரீமத் குழந்தையானந்த சுவாமிகள் (ஒன்பது இடங்களில் இவர்தம் திருச்சமாதிகள் உள்ளதாகப் பேசப்படுகிறது). இவர் திருவண்ணாமலை ஸ்ரீ சேஷாத்திரி சுவாமிகளின் ஞான குருவானவர். மதுரை காளவாசலில் இவரைத் தரிசித்து அருள் பெறலாம்.

2. கரூர் அருகில் உள்ள நெரூரில் ஸ்ரீ சதாசிவ பிரம்மேந்திர சுவாமிகள் ஜீவ சமாதியில் இன்றும் சகல சக்திகளுடன் குடியிருந்து அரசாள்கிறார். இவர்தம் திருச்சமாதிகள் மூன்று இடங்களில் உள்ளன. நெரூர், மானாமதுரை மற்றும் கராச்சி (பாகிஸ்தான்).

3. மந்திராலய மஹான் ஸ்ரீமத் ராகவேந்திர சுவாமிகள் இன்றும் பக்தர்களுடன் கனவிலும் நனவிலும் வாழ்ந்து வழிகாட்டிக் கொண்டிருப்பதை திரு. அம்மன் சத்தியநாதன் சான்றுகளுடன் எழுதி வரும் "ஸ்ரீ ராகவேந்திரர் மகிமை" (ஏழு பாகங்களுக்கும் மேலாக ஆராய்ச்சி தொடர்ந்து கொண்டுள்ளது) மூலம் படித்துத் தெளியலாம்.

4. குரு தத்தாத்திரேயரின் அவதாரிகளான, முறையே:

i) ஸ்ரீ பாத ஸ்ரீ வல்லபரின் திருமேனி ஒரு பூமாலையாக மாறி கிருஷ்ணா நதியில் சென்று விட்டது. எனினும் சுவாமிகள் நெடுங்காலம் தவமிருந்த இடமே, (குரவப்பூர்) தற்போது பூஜைக்குரிய இடமாக விளங்குகிறது. இத் திருத்தலம் கர்நாடகாவின் ரெய்ச்சூர் மாவட்டத்தினருகே கிருஷ்ணா நதியின் (மந்திராலயம் பக்கம்) நடுவே தீவில் (ஓடத்தில் செல்லவும்) அமைந்துள்ளது.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ii) ஸ்ரீ நிருசிம்ம சரஸ்வதி ஸ்வாமிகளும் தமது அவதார காலம் முடிந்தவுடன் தமது திருப்பாதுகைகளை பக்தர்களுக்கு அடையாளமாகவிடுத்து கர்தலீவனத்திற்குச் சென்று மறைந்து விட்டார். இத்திருத்தலத்தில் மதிய ஆரத்தி முடிந்து அனைவரும் "மதூகரி" என்ற பிரசாதம் பெறும் வேளையில் சுவாமிகளும் ஏதோ ஒரு ரூபத்தில் வந்து செல்கிறார். இந்த புண்யஸ்தலம் கர்நாடகா, மஹாராஷ்டிரா எல்லையில் ''கானகாபூரில்'' (GANAGAPUR) அமைந்துள்ளது.

iii) நமது கதையின் நாயகராகிய ஸ்ரீஅக்கல்கோட் சுவாமி மஹராஜரின் திருச்சமாதி சோலாப்பூர் (மஹாராஷ்டிரா), அருகே 40.கி.மீ. தொலைவில் அக்கல்கோட்டில் அமைந்துள்ளது. இந்த அத்தியாயத்தில் விரிவாகக் காண்போம்.

iv) சத்குரு ஸ்ரீ சீரடி சாயிபாபாவின் திருச்சமாதி சீரடி (Shirdi) (கோபர்காம் தாலுக்கா, அஹமத் நகர் மாவட்டம், நாசிக் அருகே, மஹாராஷ்ட்ரா)யில் அமைந்து, பிறவிக்கடலில் தத்தளிப்போரின் கலங்கரை விளக்கமாக இன்றும் பிரகாசத்துடன் விளங்குகிறது. "என் சமாதியின் ஒவ்வொரு புழுதி மண்ணும் உங்கள் கேள்விகளுக்குப் பதில் சொல்லும்! என் ஒவ்வொரு எலும்பும் உங்கள் சேவைக்காகக் காத்திருக்கிறது!" என்ற பாபாவின் திருவாக்கு இன்றளவும் நிறைவேற்றப்படுகிறது.

v) சத்குரு சீரடி சாயிபாபாவின் சம காலத்தவரான ஷேகாம் (Shegoan) ஸ்ரீ கஜானனன் மஹராஜின் ஜீவசமாதி லட்சக்கணக்கான பக்தர்களின் பிரார்த்தனைகளை உடனுக்குடன் நிறைவேற்றும் பவித்திரமான ஸ்தலமாக மஹாராஷ்ட்ராவில் ஷேகாம் என்ற ஊரில் சிறந்து விளங்குகிறது.

5. இன்று இந்தியாவில் மிகப் பிரசித்தியடைந்து விளங்கும் கோவில்களிலெல்லாம் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட சித்தர்களின் ஜீவசமாதிகளே அந்தந்த தெய்வங்களின்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



காரியதரிசிகளாகப் பக்தர்களின் வேண்டுதல்களைப் பரிசீலித்து நிறைவேற்றி வருகின்றார்கள். ஆனால் அந்த மஹான்கள் "எல்லாப் புகழும் இறைவனுக்கே!" என்று அர்ப்பணித்துத் தமது பெயர்களைக் கூட வெளியிடாமல் அருளாட்சி செய்து கொண்டிருக்கின்றனர். சில உதாரணங்கள் இங்கே தரப்பட்டுள்ளன.

i) திருமலை திருப்பதி - ஸ்ரீ கொங்கணவரின் ஜீவ சமாதியின் மேல்தான் மூலவர் நின்ற திருக்கோலத்தில் அருள் பாலிக்கிறார்.

ii) மதுரை மீனாட்சியம்மன் - ஸ்ரீ வல்லபசித்தர். (துர்கையம்மன் அருகே)

iii) பழனிமுருகன் - ஸ்ரீ போகர் (முருகனின் நவபாஷாண சிலையை நிறுவியவர்)

iv) சபரிமலை - ஸ்ரீ ஐயப்பன் தாமே மகர ஜோதியாக வாழ்கிறார்.

v) திருச்செந்தூர் - மூவர் சமாதி (கடற்கரையில் நாழிக் கிணறு அருகே உள்ளது).

vi) ஸ்ரீரங்கம் - விசித்திரமான பூலோக வைகுண்டம், 12 ஆழ்வார்களில் ஒருவரும், ஸ்ரீ ஆண்டாள், ஸ்ரீமத் நித்யஸ்ரீ சுகந்த தூப தீர்த்தார்ய சுவாமிகள் மற்றும் பல அவதாரிகள் ஸ்ரீ ரங்கநாதரின் கர்ப்பகிரகத்துக்குள்ளே சென்று அவருடனே கலந்து விட்டனர். அவர்தம் திருமேனிகளே அப்பரஞ்சோதியில் இரண்டறக் கலந்து விட்டன. மேலும் ஸ்ரீமத் ராமானுஜர் (120 வருடங்கள் நமக்காக வாழ்ந்தவர்) சுவாமிகளின் ஜீவசமாதியை கோவிலுக்குள்ளேயே, ஸ்ரீரங்கன் தாமே அவரை சுற்றிப் போகுமாறு அமைத்துள்ளார். அவர்தம் திருமேனி இன்றும் பாடம் செய்யப்பட்டுப் பாதுகாத்து வரப்படுகிறது.

vii) பண்டரீபுரம் - மஹாபக்த விஜயம் செய்து பற்பல அற்புதங்களை நிகழ்த்திக் கொண்டிருக்கும் ஸ்ரீ பாண்டுரெங்கனின் கோவில் படிகளிலெல்லாம் மஹாத்மாக்களின் சமாதிகளே உள்ளன.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



viii) மதுரை அழகர்கோயில் - ஸ்ரீ ராமதேவர் (யோக நரசிம்மர் சன்னதி)

ix) வடலூர் அருட்பிரகாச இராமலிங்க சுவாமிகள் நெய்வேலி சாலையில் மேட்டுக்குப்பம் சித்திவளாகத்தில் தம் புற உடலை ஒளி உடம்பாக மாற்றிக் கொண்டு இன்றளவும் உலவுகிறார்.

6. இறைவன் ஒருவனே! அவர்தம் தூதுவர்கள் எந்த மதத்தினராயினும் அவர்களின் திருவிளையாடல்கள் அனைத்தும் ஒரே மாதிரியாக உள்ளன என்பதற்கு, பிற மதகுருமார்களின் சமாதிகளின் புனிதத்தையும் பிரகாசத்தையும் அறிந்து கொள்வதன் மூலம் நமக்கு விளங்கும்.

I இந்தியாவிலுள்ள இஸ்லாமிய குருமார்களின் தர்காக்கள் உலகப் பிரசித்தி பெற்றவை. அவற்றுள் சில.

i) ஃபரீத் பாபா - தற்போது பாகிஸ்தானிலுள்ள ஃபரீத்கோட். (அமிர்தரஸிலுள்ள சீக்கியர்களின் பொற்கோவிலுக்கு அடிக்கல் நாட்டிய குரு.)

ii) ஹஜ்ரத் அலி தாஜுத்தீன் பாபா - நாக்பூர் (மஹாராஷ்ட்ரா)

iii) பந்தே நவாஜ் - ஆஜ்மீர் (உ.பி)

iv) கரீப் நவாஜ் - பீஜப்பூர் (கர்நாடகா)

v) தாவூஜி பாபா - சித்தூர்கட் (ராஜஸ்தான்) - ராஜஸ்தானிலுள்ள சித்தூர்கட் தாவூஜி பாபா தர்க்காவிற்கு இந்நூலாசிரியரின் தந்தையார் ஸ்ரீமான் சாயிபாபா சுப்பிரமணியன் அவர்கள் கி.பி. 1960 வாக்கில் சென்றிருந்தபோது, தர்க்காவிற்குள் அவரை தவிர யாரும் இருக்கவில்லை. சத்குரு ஸ்ரீ ஷீரடி சாயிபாபாவின் சரணதாசராகிய அவர், தாவூஜிபாபாவிடம் தமது குரு சாயிபாபா பற்றி ஒரு சந்தேகம் கேட்டார். அதாவது, சாயிபாபா "உலகிலுள்ள அனைத்து மஹான்களும் ஒரே மாலையாகச் செயல்படுவதாகவும் (சந்தமாலா) அதில் தாம் ஒரு பூ என்றும் அடக்கத்துடன் கூறிய கருத்துப்படி, தாங்களும் (தாவூஜிபாபாவும்) அந்த சந்தமாலையில்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



இருக்கிறீர்களா?" என்று மனதிற்குள் வினவினார்.

இதை கேட்டவுடன் அதை ஆமோதிப்பது போல, தாவூஜி பாபாவின் தர்கா (சமாதி) விலிருந்து ஒரு வெண்புகை மண்டலம் சிறிது சிறிதாக மேலெழும்பி தர்காவின் மேற்கூரை (Domb) வரை எழுந்து பின்பு அதே போலவே சமாதியில் மீண்டும் அடங்கியது. அந்த அதிசய காட்சியைக் கண்டு பிரமித்துப் போன தந்தையார் வெளியேவந்து பார்த்தபோது, ஒருவர் தர்காவின் கணக்கு வழக்குகளைக் கவனித்துக் கொண்டு இருப்பதைப் பார்த்து, தாம் கண்ட அதிசயக் காட்சியைப் பற்றி அவரிடம் விளக்கினார். அவரைப்பார்ப்பதற்கு தமிழர் போல தோன்றவே தானும் தமிழ்நாட்டிலிருந்து (மதுரை) வந்திருப்பதாக கூறியதும் அவரோ ஆச்சரியப்படாமல், இந்த தாவூஜி பாபா பரம சத்யமான மஹான் என்பதாலேயே தமது சொத்து முழுவதையும் தர்காவிற்கு அர்ப்பணித்து விட்டு அங்கேயே தங்கி விட்டதாக கூறியது, தாம் கண்டது முழுவதும் உண்மையே என்பதை மேலும் உறுதிபட செய்தது. இவ்வாறாக மஹான்கள் அனைவரும் ஒரே முதலாளி (இறைவன்) யின் கீழ் வேலை பார்க்கும் அதிகாரிகளாகச் செயல்படுவதை நாம் உணர்ந்து அவர்தம் பாதங்களைச் சரணடைவோமாக!

vi) ஷேக் நூருத்தீன் பாபா – அக்கல் கோட்

vii) சிக்கந்தர் பாதுஷா – மதுரை, திருப்பரங்குன்றம் மலை உச்சி

viii) நாகூர் பாபா – நாகப்பட்டினம்

ix) மோதி பாபா – சென்னை, பாந்தியன் சாலை

x) "ஞானி, ஈஸ்வரப்ரதிநிதி" என்று ஸ்ரீசமர்த்தரால் வருணிக்கப்பட்ட மதுரை ஸ்ரீமஸ்தான் பாபா.

அடியேனுடைய குடும்பத்தினர் மற்றும் உறவினர்கள், நண்பர்களுக்கும் ஸ்ரீ மஸ்தான் பாபாவிற்கு நேரடியாக பலவருடங்கள் சேவை செய்யும் வாய்ப்பு கிட்டியதே இந்த பிறவியின் பெரும் பாக்கியமாகும்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



xi) சையத் சுல்தான் அவுலியா பாதுஷா, சம்சுதீன்பாபா – நபிகள் நாயகத்தின் வழித் தோன்றல்களின் தர்கா, மதுரை கோரிப்பாளையம். (ஸ்ரீமஸ்தான் பாபாவின் சமாதியும் 1995-ல் இங்கே அமைக்கப்பட்டுள்ளது)

xii) சிவஸ்ரீ படே பாபா – புதுவை, சின்னபாபு சமுத்திரம்.

xiii) 'செத்தும் கொடுத்தான் சீதக்காதி'– என்ற சீமானை யாரும் மறந்திருக்க மாட்டார்கள் (கீழக்கரை). திருச்செந்தூர் முருகன் கோபுரப் பணிக்கு நன்கொடையாக அவர் கொடுத்தனுப்பிய ஒரு உப்பு மூட்டை முருகன் சந்நதியில் திறந்தபோது நவரத்தினங்களாக மாற்றிய பேரருளாளர்.

II) i) இறைத்தூதர் இயேசு பெருமானும் இறந்த பின்பு மூன்றாம் நாள் கல்லறையிலிருந்து தமது திருமேனியுடன் எழுந்து வந்தார் என்று நம்பப் படுகிறது.

ii) அன்னை ஆரோக்கிய மாதா கொடிய நோய்களிலிருந்து மக்களை இன்றளவும் காப்பாற்றி அருட்கடலாக வேளாங்கண்ணியில் வீற்றிருப்பது கண்கூடு.

III) ஸ்ரீ முகையதீன் ஆண்டவர் இந்தியாவிற்கு அவர்தம் காலம் வரையில் ஒரு முறை கூட வராமலேயே இன்றும் அவரின் திருப்பெயரால் உள்ள லட்சக் கணக்கான பள்ளிவாசல்களில் தமது சாந்நித்தியத்தை வெளிப்படுத்தி அருளாட்சி செய்து கொண்டிருக்கிறார். இந்நூலாசிரியரின் தந்தையாருக்கு கி.பி.1990 வாக்கில் வீட்டு மாடி -யிலிருந்து பிரார்த்தித்தபோது, மதுரை தெற்கு வாசல், மொஹைதீன் ஆண்டவர் பள்ளிவாசலின் மீது பல அடி உயரத்திற்கு வளர்ந்து கரிய திருமேனியுடன் நீண்ட பச்சை வண்ண கஃப்னியுடன் நின்று தரிசனம் கொடுத்து நிரூபித்துள்ளார். அன்னவர்க்கே சரண் நாங்களே.

வாசகர்களுக்கு மனதில் ஒரு சந்தேகம் எழத் தோன்றும். ஸ்ரீ சுவாமி சமர்த்தரின் மஹாசமாதி லீலையை நேரடியாக கூறாமல் இவ்வளவு நெடிய முன்னுரை எதற்காகவென்று? ஸ்ரீசுவாமி சிவானந்தரின் திருவாக்குப்படி **"SEE GOD IN ALL"** என்பதை வலியுறுத்தி, சாதி சமய வேறுபாடுகளிலிருந்து மனித



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



சமுதாயத்தை திசை திருப்பி, இறைவனிடமும் இறைத் தூதர்களிடமும் அன்பும் நம்பிக்கையும் ஊட்ட எடுக்கப்பட்ட அடியேனின் சிறு முயற்சியே இது.

இப்போது ஸ்ரீசுவாமி மஹாராஜரின் சமாதி லீலையைப் பார்ப்போம்.

குருகடாட்சம் பரிபூரணம்

(இன்றைய டில்லி) அஸ்தினாபுரம், சேலிகேடே **(CHELI KHEDE)** கிராமத்தில் கி.பி. 1149ம் வருடம், கணபதி ஆலயத்து ஆலமரத்தடியிலிருந்து, எட்டு வயது பாலகனாக மண்ணைப் பிளந்து அவதரித்த, சற்குரு ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜின் புனிதப் பயணம் பாரத தேசமெங்கும் நடைபெற்றது. மங்கள் வேடா (சோலாப்பூர்) வுக்கு கி.பி. 1838ல் வந்து சுமார் 12 ஆண்டு காலம் பக்தர்களுக்கு அருள்பாலித்த குருநாதர் பின்பு பண்டரீபுரம், உடுப்பி, ராமேஸ்வரம், காஞ்சிபுரம் மற்றும் மதுரை மாநகரங்களுக்கு விஜயம் செய்தார்.

பல பிறவிகளில் மக்கள் செய்த புண்ணியத்தின் பயனாக அக்கல்கோட் சமஸ்தானத்திற்கு கி.பி. 1857 வாக்கில் விஜயம் செய்து, கண்டோபா கோவிலில் மூன்று நாட்கள் எவருடனும் பேசாமலும் எதையும் புசிக்காமலும் மௌனவிரதம் அனுஷ்டித்த ஸ்ரீசமர்த்தரை, ஒரு இஸ்லாமிய அன்பர் சோளப்பாவின் வீட்டிற்கு அழைத்துச் சென்று உணவளிக்க வேண்டியதிலிருந்து தொடங்கிய சுவாமிநாதரின் திருவிளையாடல்களை இதுவரை படித்து மெய்சிலிர்த்தோம்.

ஸ்ரீ சுவாமி சமர்த்தர் தாம் மஹா சமாதியடையும் காலம் நெருங்குவதைச் சில குறிப்புகளின் மூலம் பக்தர்களுக்கு உணர்த்திக் கொண்டேயிருந்தார். கி.பி. 1857 லிருந்து அக்கல்கோட்டில் வாசம் செய்த சுவாமிகள் அவ்வப்போது பக்கத்து ஊர்களுக்குச் சென்று வந்தார். அக்காலத்திலேயே சுவாமிகளைத் தரிசிக்கத் தினமும் சுமார் 2000க்கும் மேல் யாத்ரீகர்கள் வந்து கொண்டிருந்தனர். தினமும் அதிகாலையிலிருந்து இரவு வெகு நேரம் வரை ஸ்ரீசமர்த்தர் தம்மைத் தேடிப் பற்பல இடங்களிலிருந்தும் வருபவர்களுடைய



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ஹரிபாவு (எ) ஸ்ரீ சுவாமி சுதன்



# ஸ்ரீ சமர்த்தரின் ஞானக்குழந்தை

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ஸ்ரீ சாயி சமர்த்த குரு பாதுகை



அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்த மஹாராஜ் சேவா சாரிட்டபிள் டிரஸ்டிற்கு குரு பூர்ணிமா 25.07.2010 அன்று குரு பக்தர்கள் வழங்கிய வெள்ளிப் பாதுகை

https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



குறைகளைப் போக்கி அருள்வார். நாளாக ஆகப் பக்தர்களின் கூட்டம் கட்டுக் கடங்காமல் போகவே தமது திருமேனியைச் சால்வையால் போர்த்திக் கொண்டும், தமது திருப்பாதங்களை மட்டும் மூடாமல் பக்தர்களின் வழிபாட்டிற்கு விட்டுவிட்டுத் தூங்குவது போலப் படுக்கையில் இருப்பார். எவரது மனதையும் அவர்கள் பேசாமலே தெரிந்து கொண்டு, அவரவர்க்கு வேண்டிய நற்பலன்களைத் தாமதமின்றி அருளியதால் அனைவரின் மனம் கவர்ந்த சத்குருவாகத் திகழ்ந்தார்.

சத்குருவின் அத்யந்த பக்தராகிய சோளப்பாவிற்கு எவருக்குமே வராத விசித்திரமான ஒரு ஆசை வந்தது. அதாவது, ஸ்ரீசுவாமிகளின் மஹாசமாதி தனது வீட்டிலேயே அமைய வேண்டும் என்பதே அது. ஆகவே தனது வீட்டு தோட்டத்தில் சுவாமிகளுக்காக ஒரு சமாதிக்குழியை வெட்டி தயார்படுத்தி வைத்திருந்தார். சோளப்பா வீட்டுப்பக்கம் குருநாதர் ஒருநாள் சென்று கொண்டிருக்கையில் அவரைப்பார்த்து, "அடேய்! அந்தக் குழியிலே முதலிலே உன்னைத்தான் போடப்போறேன், உனக்கு முன்னாலே நான் போகமாட்டேன்" என்று கூறியதை ஏதோ விளையாட்டாக சொல்வதாக அனைவரும் மறந்து விட்டனர்.

திரிகால ஞானியான சமர்த்த குருவின் திருவாக்குப்படியே, சில மாதங்களுக்குப் பிறகு கி.பி. 1877ல் சோளப்பாவிற்கு காலரா நோய் தாக்கியதால் இறைவனடி சேர்ந்தார். சோளப்பாவின் மறைவு ஸ்ரீசமர்த்த குருநாதரை வெகுவாக பாதித்தது. ஞானியர்க்குச் சோகமோ, பந்தபாசமோ இல்லையென்றபோதும் தனது உண்மையான பக்தருடைய மறைவினால் மிகவும் துன்பமடைந்து, "சோளப்பா இல்லாமல் யாம் எப்படி வெளியே செல்வோம்? யாரிடம் எமது லீலைகளை காண்பிப்பது?" என்று வெளிப்படையாகவே புலம்பியது அனைவரையும் ஆச்சரியமடையச் செய்தது.

சோளப்பாவின் மறைவுக்குப் பிறகு தமது சமாதியடையும் காலம் விரைவில் நெருங்குவதை அசாதாரண நிகழ்வுகளின் மூலம் வெளிப்படுத்தினார் குருநாதர். முதலில் மெத்தையில் படுத்து உறங்குவதை நிறுத்தினார். அவரது மெத்தை சுருட்டி ஒரு மரக்கிளையில் தொங்கவிடப்பட்டது. ஆரத்தி சமயத்தில் கற்பூரத்தைத் தட்டிக் கீழே விழ வைப்பார். யாரையும் சந்திக்க



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



விரும்பாமல் சல்கார் என்ற அடர்ந்த காட்டுக்குள்ளே போய் தங்கிய சுவாமிகளைப் பக்தர்கள் மிகவும் சிரமத்துடன் அங்கேயும் சென்று தரிசித்தனர். அதனால் மீண்டும் அக்கல்கோட் திரும்பினார். ஒரு நாள் புகை பிடிக்கும் போது ஸ்ரீபாளப்பா அடியவரைப் பார்த்து, "பாளப்பா! யாம் ஒரு நீண்ட நெடிய பயணத்திற்குத் தயாராகிறோம். நீயும் கூட வருகிறாயா? நாம் மிக உயரமான இடத்திற்குச் செல்ல வேண்டும். நினைவில் வைத்துக் கொள்"! என்று கூறியதும், அந்தக் குறிப்பை உணர்ந்து உடனே சத்குருவின் திருப்பாதங்களில் கண்ணீர்மல்க வீழ்ந்து வணங்கினார்.

சில தினங்களுக்குப் பிறகு சுவாமிகள் அக்கல்கோட்டிலிருந்த ஜங்கம மடத்திற்கு சென்றார். அது லிங்காயத சம்பிரதாயத்தைச் சேர்ந்த துறவியின் சமாதியாகும். எப்போதும்போலக் குருநாதருடன் பல அடியார்களும் சென்றிருந்தனர். அவர்களுள் பாவடேகர் என்ற அடியவரிடம் குருநாதர் 500 வரட்டிகளை வாங்கி வரப்பணித்தார். அவற்றை அந்த மடத்திலிருந்த சிவலிங்கத்தின் மீது பரப்பி வைக்குமாறு ஆணையிட்டார். அவற்றிக்கு சுவாமிகள் தாமே நெருப்பும் வைத்தார். பிற பக்தர்களிடமிருந்து காணிக்கையாக ஐந்து படி வீதம் பழங்கள், பேரீச்சை, அரிசி, தேங்காய், வெற்றிலை பாக்கு அனைத்தையும் பெற்று அவற்றையும் அந்த கொழுந்து விட்டு எரியும் தீயிலே அர்ப்பணிக்க சொன்னார். அதன்மீது நிறைய பசு நெய்யும் ஊற்றுமாறு கட்டளையிட்டார். இந்த லீலை எதற்காக? என்று யாருக்கும் புரியவில்லை. ஆனாலும் ஸ்ரீசமர்த்த மஹராஜை கேள்வி கேட்கும் தைரியம் யாருக்கும் வரவில்லை.

தங்களது மடத்தில், அதுவும் சிவலிங்கத்தின் மீதே சுவாமிகள் நெருப்பு வைத்த விஷயத்தைக் கேள்விபட்ட அனைத்து லிங்காயதர்களும் பதறி வெகுண்டெழுந்தனர். ஆனாலும் சமர்த்த குருவை எதிர்க்க எவருக்கும் துணிவின்றி மனதுக்குள்ளேயே புழுங்கலாயினர். மறுநாள் காலையில் சத்குரு, எரிந்து போன சாம்பலை அள்ளி சுத்தம் செய்யச் சொன்னார். அனைவரின் ஆச்சரியத்திற்கிடையே அந்த சிவலிங்கம் முன்னிலும் மிகவும் பிரகாசமாகவும் அழகாகவும் ஆகிவிட்டிருந்தது. லிங்காயதர்களும் மகிழ்வுற்றனர். தமது சமாதி நேரம் நெருங்குவதை குருநாதர் இதன் மூலம் குறிப்பால் தெரிவித்தார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தாத்யா சுபேதார் என்ற பக்தருடைய வீட்டிற்குச் சென்ற குருநாதர் அங்கிருந்த துளசி பிருந்தாவனம் இருந்த தொட்டியை (சட்டி) எடுத்து அருகிலிருந்த முரளிதர் கோவில் குளத்தில் எறியுமாறு பணித்தார். சுவாமிகளும் கூடவே சென்று, அந்த சட்டியானது குளத்தில் மூழ்கும்போது எழும்பிய ஒலியைப் பார்த்து அனைவரையும், "பம்..பம்..." என்ற சங்கோசை செய்யுமாறு சொன்னதும், தமது சமாதிக்கான அறிகுறியேயாம்.

நாகனஹள்ளி என்ற பக்கத்துக் கிராமத்திற்குச் சென்ற ஸ்ரீசமர்த்தர் அங்கிருந்த பக்தர்களிடம் அதுவே தனது கடைசி வருகையாகும் என்று மறைமுகமாகத் தெரிவித்தார். சாதாரணமாக சுவாமிகள் பாடுவதில்லை. எனினும் இந்த முறை அவரே தமது திருவாயால் பாடியும், அனைத்து அடியவர் களையும் தம்முடன் சேர்ந்து பாடுமாறும் பணித்தார்.

அந்த பாடலானது-

"ஓம் சிவஹர சங்கர, நமாமி சங்கர, சிவ சங்கர சம்போ!

ஓ கிரிஜாபதி பவானி சங்கர, சிவ சங்கர சம்போ!!"

அன்று மஹாராஜர் சிறு கற்களை எடுத்துச் சமாதி போலச் செய்து விளையாடிக் கொண்டிருந்ததைக் கண்ட அடியவர்கள், சுவாமிகள் தங்களை விட்டுப் போகும் தருணம் மிக அருகாமையில் இருப்பதை உணர்ந்து பீதியடைந்தனர்.

சில நாட்களில் சுவாமிகளின் உடல்நிலை மோசமடையத் தொடங்கியது. அதிகமான காய்ச்சலில் உடல் கொதித்தது. உணவை அறவே நிறுத்திவிட்டார். ஆனாலும் அடியவர்களின் வற்புறுத்தலின் பேரில் இரண்டு கவளம் உண்டார். சகாராம் லோகங்தே என்ற பக்தர் ஒரு தண்டியில் சுவாமிகளை அமரவைத்து அவருக்கு மிகவும் பிடித்த ஆலமரத்திற்கு அழைத்துப் போனார். மருந்துகள் எதையும் சுவாமிகள் உட்கொள்ளவில்லை. இது அங்கே கூடியிருந்த அடியவர்களை மிகவும் வாட்டியது. ஸ்ரீசமர்த்தர் தாமே தமது இறுதியை நோக்கிச் செல்வதாகப்பட்டது. சுந்தராபாயி ஸ்வாமிகளிடம் "தாங்கள் எப்போது குணமடைய போகிறீர்கள்?" என்று வினவியதற்கு, "மலைகள் அசைந்து என்னை வரவேற்கும் போது" என்று



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



பகர்ந்தார். ஸ்ரீபாத பட் என்ற சேவகரின் இதே கேள்விக்கும் சுவாமிநாதர் "பண்டரீபுரம் எரியும் போது" என்று கூறினார். அதாவது எப்போதெல்லாம் தர்மம் அழிகிறதோ அப்போது மீண்டும் அவதரித்து வந்து தர்மத்தைக் காப்பேன் என்று ஸ்ரீ கிருஷ்ணபகவானின் உறுதி மொழியை மறைமுகமாக அருளினார்.

சாப்பிடுவதை மட்டும் நிறுத்தியிருந்தாலும் சுவாமிகள் தமது நித்திய கடமைகளைச் செய்வதில் தவறவில்லை. காய்ச்சல் இருந்த போதும் தினமும் குளித்தார். அடியவர்கள் தடுத்தபோது, "ஏன் நான் செத்தா உங்க அப்பனுக்கு என்னடா குறையும்?" என்ற பதில்வந்தது. வைத்தியர்கள் குருநாதரின் நாடியைப் பிடித்துச் சோதிக்க வந்த போது, "உங்க அப்பனோட நாடியைப் போய்ப் பாரு" என்று விரட்டியடித்தார்.

அன்று மதியம் ஒரு மணியளவில் தாம் பாசத்தோடு வளர்த்த பசு மாடுகள், கன்றுக்குட்டிகள், காளைமாடுகள், குதிரைகள் போன்ற அனைத்தையும் தம்மிடம் அழைத்து வருமாறு பணித்தார் குருநாதர். அன்று தமக்கு வந்திருந்த தின்பண்டங்கள் அனைத்தையும் அவற்றிற்கு உண்ணத் தமது கையாலேயே அளித்தார். தம்மிடமிருந்த துணிமணிகள், பூமாலைகள் அனைத்தையும் அவற்றின் மீது போர்த்திவிட்டு, அன்பாகத் தடவி கொடுத்த சுவாமிகளிடமிருந்து அந்த வாயில்லாப்பிராணிகள் கண்களில் நீர் வழிய ஏற்றுக் கொண்டு, பிரியாவிடை கொடுத்து, சற்று நின்றும், சிறிது தூரம் நடந்து பிறகு மீண்டும் சுவாமிகளின் திருமுகத்தை உற்று நோக்கிவிட்டும், கனத்த இதயங்களுடன் நகர்ந்து சென்றன.

சுவாமிகள் தமது பலகைக்குத் திரும்பி வந்து அமரும்போது ஒரு பக்தரிடம் சாய்வதற்கு ஒரு தலையணையை அங்கே வைக்குமாறு சைகையால் கூறியதும் அவர் ஓடோடிச் சென்று பயபக்தியுடன் வைத்தார். அனந்தகோடி பிரம்மாண்ட நாயகரும் அதன் மீது சாய்ந்து உட்கார்ந்தவுடனே தமது திருக்கண் மலர்களை மூடிக் கொண்டார்.

அருகிலிருந்த மருத்துவர்கள் சுவாமிநாதரின் நாடியைப் பிடித்துப் பார்த்துவிட்டு அவர்தம் திருமேனியிலிருந்து உயிர்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



பிரிந்து விட்டதாக அறிவித்ததும், கூடியிருந்த அடியவர்கள் அனைவரும் துக்கம் தாளமுடியாமல் "சுவாமி! சுவாமி! அம்மா" என்று தங்கள் தலையிலும் வாயிலும் அடித்துக் கொண்டும் சிலர் மயங்கி விழுந்தும், சிலர் துக்கத்தில் சிலையாக நின்று மூச்சு பேச்சின்றியும் நின்று விட்டனர்.

கி.பி. 1878 (சக ஆண்டு 1800) சித்திரை மாதம் திரயோதசி, செவ்வாய்கிழமை மாலை நான்கு மணியளவில், அக்கல்கோட் வாசிகளின் ஆன்மாவாக அவர்களுடன் சுமார் இருபது வருடங்கள் பற்பல திருவிளையாடல்கள் புரிந்த "பேசும் தெய்வம்" தத்த அவதாரி, பரகதியடைந்த விஷயம் காட்டுத் தீ போன்று பரவியதும் அனைத்துத் தரப்பு மக்களும் சுவாமிகளைக் கடைசியாகத் தரிசிக்க அங்கே விரைந்தோடி வந்து குவிந்தனர். அங்கே அடியவர்கள் கதறியழுததைக் காணச் சகிக்காத லோகமாதா கருணாமூர்த்தி பக்தவத்ஸல்ய ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜ், மீண்டும் தமது திருக்கண் மலர்ந்தார். சுவாமிகள் வாழும்போது நிகழ்த்திய அதி அற்புத லீலைகளை எங்கே எந்த பிறவியில் எப்போது இனிக் காண்போமோ? என்று பரிதவித்துக் கொண்டிருந்த ஸ்ரீசமர்த்தரின் அன்புக்குரிய செல்வங்களின் பேராச்சரியத்திற்கிடையே, தமது திருமேனியிலே மீண்டும் புகுந்த அருட்கடலான சுவாமிகள் அனைவரையும் தமது திருக்கரங்களை உயர்த்தி அமைதிப்படுத்தினார்.

அனைவரின் முழுக்கவனமும் சுவாமிகளின் தேஜோமயமான திருமுக மண்டலத்தையும், திருவருள் நிறைந்த பிரகாசமான கண்களையும் உற்று நோக்கியபோது, சற்குருநாதர் தமது திருவாயால்,

"அனன்யாஸ் சிந்தயம் தோமாம் யே ஜனா: பர்யுபாஸதே।

தேஷாம் நித்யா அபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம்॥"

என்று பகவத்கீதையிலே தாம் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவாக உலகுய்ய அவதரித்தபோது கொடுத்த வாக்குறுதிகளை மீண்டும் அளித்தார்.

இந்த சுலோகத்தின் பொருளாவது : "எவனொருவன் நானே



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



கதியென்று என்னிடத்தில் முழுவதும் சரணடைகிறானோ, அவனுக்குத் தேவையான இவ்வுலக வாழ்க்கையையும், முக்தியையும் நல்குவேன்; அவ்வாறு யாம் அளித்தவற்றைக் காத்து அருள்வேன்".

இவ்வாறு திருவாய் மலர்ந்தருளிவிட்டு சுவாமிநாதர் அனைத்து பக்தர்களையும் தமது கடாட்சத்தால் (அன்பொழுக கடைக்கண் பார்வையால்) பார்த்து விட்டுத் தமது திருக்கரங்களால் நல்லாசிகளை வழங்கிவிட்டு மீண்டும் கண்களை மூடியவர் பிறகு திறக்கவேயில்லை. போன உயிர் திரும்பி விட்டதாக ஆசுவாசமாகியிருந்த அடியவர்களுக்குப் பெருத்த ஏமாற்றமே மிஞ்சியது. (3.4.1878)

சாஸ்திரவிதிமுறைப்படி வேத மந்திரங்கள் முழங்க சுவாமிகளுக்கு மங்கள ஸ்நானம் செய்யப்பட்டது. அக்கல்கோட் மன்னர் நன்கு அலங்கரிக்கப்பட்ட யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள் மற்றும் பாரம்பரிய வாத்திய கோஷ்டியினரை அனுப்பி வைத்தார். சற்குருவிற்கு மிகவும் பிடித்தமான ஆலமரத்திலிருந்து பக்தர்களின் தழுதழுத்த குரலினின்று, "ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜ் கீ ஜெய்" என்றும் "ஹர ஹர மஹாதேவா" என்ற கோஷத்தினிடையேயும், அலங்கரிக்கப்பட்ட பூப்பல்லக்கில் ஸ்ரீசமர்த்தரை அலங்கரித்து அமரச் செய்து ஊர்வலமாக எடுத்துச் சென்றனர்.

ஊர் முக்கியஸ்தர்களும் பிற அதிகாரிகளும் சோளப்பாவின் இறுதி ஆசையின்படியே, அவர்தம் வீட்டிலேயே சுவாமிகளின் மஹா சமாதியை அமைப்பதற்கு ஒப்புக் கொண்டனர். அப்படியே நித்ய ஸூரியான மூன்றாவது தத்தாத்திரேய அவதாரியான ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜின் புனிதத்திருமேனி அமர்ந்த நிலையில் நல்லடக்கம் செய்யப்பட்டது.

இன்றைக்கும் அக்கல்கோட்டில் ஸ்ரீசோளப்பாவின் இல்லத்தில் அமைக்கப்பட்டுள்ள ஸ்ரீசுவாமிநாதரின் மஹா சமாதியில், சற்குரு பற்பல அற்புத லீலைகள் புரிந்த வண்ணம் ஒளிமயமாக அருள்பாலிக்கிறார். வாசகர்கள் தமது பூர்வ ஜன்மப் புண்ணியத்தாலோ அல்லது இந்தப் புனித சரித்திரத்தினை இந்த பிறவியில் படிக்கும் வாய்ப்பு பெற்ற புண்ணியத்தாலோ,



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



அவசியம் அக்கல்கோட் சென்று, என்றும் சிரஞ்சீவியாக உள்ள அனந்தகோடி பிரம்மாண்ட நாயகரைத் தரிசித்து வாழ்வின் அனைத்து வளங்களையும் பெற்று, இன்புற்று வாழ முயற்சிக்கலாமே!

குருகடாட்சம் பரிபூரணம்

## 56. சிரஞ்சீவி ஸ்ரீசுவாமி சமர்த்தர்

(சமாதிக்குப் பின்னரும் வாழ்பவர்)

ஆதிஅந்தமில்லாத பரஞ்சோதியான ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜ் இன்றும் கூப்பிட்ட குரலுக்கு ஓடோடி வந்து அருள் புரிகிறார். தமது சற்குரு மஹா சமாதியடைந்ததைத் தாங்க முடியாத ஸ்ரீபாளப்பா உணவு உண்பதையும் தண்ணீர் குடிப்பதையும்கூட நிறுத்திவிட்டு, தாமும் இறைவனடியில் சேர்ந்து விடத் தீர்மானித்தார். சுவாமிநாதர் இல்லாத உலகில் தாம் வாழ்வதில் பொருளில்லை என்று, யார் சொல்லியும் கேளாமல் உண்ணாவிரதம் இருந்தார்.

தம் அடியவரின் அந்தக்கோலத்தைக் காணச்சகிக்காத பரமதயாளரான சமர்த்த குருநாதர், சரியாக மஹாசமாதியடைந்த மூன்றாம் நாள் தமது திவ்ய திருமேனியுடன் கையில் கமண்டலத்துடன் ஸ்ரீபாளப்பாவிற்குத் தரிசனம் கொடுத்தார். ஆனந்தமும் அதிர்ச்சியும் மேலோங்க ஸ்ரீபாளப்பா, சுவாமிகளின் பாதார விந்தங்களில் கண்ணீர் மல்கப் பாதங்களைத் தொட்டு வணங்கினார். அவரை சுவாமிகள் தமது திருக்கரங்களாலேயே எழுப்பிவிட்டுப் பாசத்துடன் அவரை நோக்கி, "மகனே! கவலைப் படாதே! இது உனக்கு அழகல்ல. யாம் உமக்கு எமது பாதுகைகளை அளித்தோம். எம்மை அவற்றுள் காண்பாயாக, யாம் எப்பொழுதும் உமதருகிலேயே உள்ளோம். உமது நித்திய சேவைகளைப் பெற்றுக் கொள்கிறோம். எம்மை இந்த ஸ்தூல (மேனி) சரீரமாக நினைக்காமல், எங்கும் நிறைந்த பரம் பொருளாகவும் உமக்குள்ளே உறையும் ஆன்மாவாகவும் காண்பாயாக. எம்முடைய பரிபூரண ஆசிகள் எப்போதும் உமக்குள்ளது!" என்று திருவாய் மலர்ந்த வண்ணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



ஸ்ரீ பாளப்பாவின் பார்வையிலிருந்து மறைந்தார்.

அதன்பிறகுதான் ஸ்ரீபாளப்பாவிற்கும், அவர் மூலம் அக்கல் கோட்வாசிகளுக்கும், பிறருக்கும் சுவாமிகள் மறைய வில்லை; என்றும் தம்முடனேயே வாழ்கிறார் என்ற நம்பிக்கையும் புத்துணர்ச்சியும் பொங்கியது. எப்போதும்போல சுவாமிகளின் பூஜைகள், ஆரத்தி போன்றவைகள் அவர்தம் திருப்பாதுகை களுக்கே செய்யலாயினர். அது இன்றும் தொடர்கிறது. (பூஜாமூலம் குரோர் பதம்!)

இதேபோன்ற அனுபவம் நிஜாம் மாகாணத்தைச் சேர்ந்த நில்காம் என்ற ஊரில் வாழ்ந்த ஸ்ரீபாவு சாஹேப் என்ற பண்ணையாருக்கும் கிட்டியது.

சாஹேப் ஸ்ரீசுவாமிகளின் சிறந்த பக்தர். அவரது வீட்டிற்கும் சற்குருநாதர் ஒரு தடவை விஜயம் செய்தார். அப்போது சுவாமிகளுக்குச் சிறப்பாகப் பூஜைகள் செய்து மகிழ்ந்த பண்ணையாருக்குக் குருநாதர், தமது நெற்றிப் பொட்டிலிருந்து கீழே விழுந்த மூன்று அட்சதைகளை (மஞ்சள் அரிசி)ப் பிரசாதமாக அளித்தார். அதுவரை மக்கட்பேறு இல்லாது தவித்த அந்தத் தம்பதியருக்கு விரைவிலேயே இரண்டு மகன்களும், ஒரு மகளும் பிறந்து மட்டில்லாத மகிழ்ச்சியடைந்தனர்.

ஸ்ரீசமர்த்தரின் மஹா சமாதிக்குச் சில மாதங்களுக்கு முன்னால் நடந்த ஸ்ரீதத்தாத்திரேய ஜெயந்தி விழாவின் போது பாவு சாஹேப் அக்கல்கோட் வந்தார். சுவாமிகளைத் தரிசித்து விட்டுத் தமது ஊருக்கும் தமது இல்லத்திற்கும் வருமாறு குருநாதரிடம் பயபக்தியுடன் வேண்டினார். அவரது தூய்மையான பக்தியைக் கண்டு மகிழ்ந்த சத்குருவும், “உன்னுடைய ஆசை நிறைவேறும்”! என்று ஆசீர்வதித்தார்.

பரமசத்யமான மஹானுபாவரான சிரஞ்சீவி சுவாமிகள் கி.பி. 1878, சித்திரை மாதம் திரயோதசி திருநாளில் செவ்வாய்க் கிழமை மஹா சமாதியடைந்த பின்னர் 5ம் நாள் பாவு சாஹேப் வாழ்ந்த நில்காம் ஊர் எல்லையிலே தமது அடியவர்களுடன் முகாமிட்டிருப்பதாக செய்தி கிடைத்ததும், பாவு சாஹேப் தமது நண்பர்களுடன் வேகமாக சென்று சுவாமிகளின் பாதங்களில் வீழ்ந்து வணங்கினார். அக்கல்கோட்டிலிருந்து நில்காம் வெகு



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தொலைவிலிருந்ததால் சுவாமிகளின் சமாதி லீலையின் விபரம் அவ்வூர் மக்களுக்கு தெரிந்திருக்கவில்லை. அப்போது சுவாமிகளிடம் தமது இல்லத்திற்கு வருமாறு பாவுசாஹேப் அன்புடன் அழைத்த போது ஸ்ரீசமர்த்தர், "நாளை வருகிறேன்!" என்று திருவாய் மலர்ந்தருளினார்.

மறுநாள் காலையில் சுவாமிகளைத் தமது இல்லத்திற்கு அழைத்து வருவதற்காக முன்தினம் தாம் ஸ்ரீசமர்த்தரை தரிசித்த இடத்திற்கு விரைந்தோடிய பாவு சாஹேபுக்கு ஏமாற்றமே காத்திருந்தது. ஆம்! சுவாமிகளோ, அவர்தம் பக்தர்களுடைய குழாமோ, தண்டியோ எதுவுமே அங்கில்லை. பரமசத்யமான சத்குரு தமக்கு கொடுத்திருந்த வாக்கை எப்படி காப்பாற்றாமல் திரும்பிச் சென்றிருப்பார் என்பதை அறிய விரும்பிய பண்ணையார், தமது வேலையாளை அக்கல்கோட்டுக்குச் சென்று விபரம் தெரிந்து வருமாறு அனுப்பி வைத்தார்.

ஏமாற்றத்துடன் வீட்டிற்கு வந்து மதிய வேளையில் சாப்பிடுவதற்காக அமர்ந்த போது, திடீரென்று வாசலில் அனந்த கோடி பிரம்மாண்ட நாயகரான ஸ்ரீசமர்த்தர் தமது ஆஜாகு பாகுவான திருமேனியுடன் இடையில் ஒரு கையை வைத்தவாறு தரிசனம் தந்தார். ஓடோடிச் சென்று பாதங்களைத் தொட்டு வணங்கி சுவாமிகளை வீட்டிற்குள்ளே அழைத்து வந்து அமரச் செய்த பாவுசாஹேப், தமது மனைவியின் பக்கம் திரும்பி சத்குருவிற்காக உணவு தயாரிக்குமாறு கூறிவிட்டுத் திரும்பியபோது, என்னே ஆச்சரியம்! அங்கே சுவாமிகளைக் காணவில்லை.

கைக்கு எட்டியது வாய்க்கெட்டாத கதையாக வீட்டிற்கு வந்த சுவாமிகள் எங்கே சென்று மறைந்தார்? எதற்காக இந்தத் திருவிளையாடல்? என்று புரியாமல் தவித்துக் கொண்டிருந்த பண்ணையாருக்கு, அவரது பணியாளர் கொண்டு வந்த செய்தி பேரிடியாக விழுந்தது. ஆம்! சமர்த்த சற்குருநாதர் ஐந்து நாட்களுக்கு முன்னரே அக்கல்கோட்டில் மஹாசமாதி அடைந்து விட்டார் என்பதே அது.

மெய்சிலிர்த்த பாவுசாஹேபிற்கு ஸ்ரீசுவாமிகளின் அருட் பேராற்றலும், மரணத்தைக் கடந்த அமரஜோதியாக சத்குரு



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



தமக்கு கொடுத்த வாக்கினைக் காப்பாற்றுவதற்காக அவர்தம் திரு மேனியுடன் தமது இல்லத்திற்கும் வந்து அருளிய அற்புதமான லீலையைக் கண்டு, ஒருபுறம் ஆனந்தக் கண்ணீரும், மறுபுறம் சுவாமிகளின் சமாதி நிகழ்வினால் சோகக் கண்ணீருமாக உணர்ச்சி பிரவாகத்தினால் தத்தளித்தார்.

"குரு என்றுமே உண்மையே பேசுகிறார். அல்லது

அவர் திருவாயினின்று வரும் வார்த்தைகள்

அனைத்தும் உண்மையாகிறது" என்பதும்,

"மஹான்களின் சமாதி என்பது வெறும் திருவிளையாடலே,

ஆனால் அவர்கள் என்றும் நம்முடன் வாழ்கிறார்கள்"

என்ற பேருண்மையும் ஸ்ரீபாளப்பா மற்றும் பண்ணையாரின் அனுபவத்திலிருந்து நமக்கு விளங்குகிறதல்லவா?

இன்றைக்கும் சுமார் (கி.பி.1878-கி.பி.2008) நூற்றி முப்பது ஆண்டுகளுக்குப் பின்னரும் ஸ்ரீஅக்கல்கோட் மஹராஜின் தேவராஜ்ஜியம் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக, இந்தியாவிலேயே பிரசித்தமான தத்தாத்திரேயப் புனித யாத்திரை தலமாக விளங்குவதே சுவாமிகள் சிரஞ்சீவியாக இன்றும் நம்மிடையே வாழ்ந்து வருவதற்கான அத்தாட்சியாகும்.

"ஓம் ஸ்ரீசுவாமி சமர்த்த! ஜெய ஜெய சுவாமி சமர்த்த!" என்ற நாமத்தை நம் உயிருள்ளவரை ஜபித்துக் கொண்டே, சமர்த்த பக்தியில் லயித்து இகபர சுகம் அடைவோமாக!

"அனந்தகோடி பிரம்மாண்ட நாயக
ராஜாதிராஜ யோகிராஜ
ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்த மஹாராஜ் கீ ஜெய்!"

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# 57. பேசும் தெய்வம்

"பூவோடு சேர்ந்த நாரும் மணக்கும்" என்பதைப் போல சிறுவயது முதலே எமது பாசமிகு தந்தையார், "குருபக்த சிரோமணி" நித்யஸ்ரீ, ஸ்ரீமான் சாயிபாபா J.S. சுப்பிரமணியன் அவர்கள் அடியேன் மனதில் வித்திட்ட குருபக்தியினால் ஸத்குரு ஸ்ரீ ஷீர்டி சாயிபாபா, ஸ்ரீமத்ராகவேந்திர ஸ்வாமிகள் மற்றும் இந் நூலின் கதாநாயகரான தத்தாவதாரி அக்கல்கோட் ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்த மஹாராஜர்களுடன் பேசும் பேறு பெற்றேன். அனைத்து ஸத்குருக்களின் கடாக்ஷமும் பரிபூரணமாக ஒவ்வொரு நொடியிலும் ஒவ்வொரு செயலிலும், நனவிலும், கனவிலும் உணர்கிறேன். அடியேனுக்கு ஏற்பட்ட தெய்வீக அனுபவங்களில் சிலவற்றை தங்களின் நம்பிக்கைக்கும் குருபக்திக்கும் உரம் போடு முகமாக இந்த கடைசி அத்தியாயத்தில் தரவேண்டுமென்பது ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்தரின் ஆணையாகும்.

1. கி.பி.1985ல் மதுரையில் அடியேன் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தபோது, ஒரு தனவந்தரிடம் அய்யம்பேட்டை ஸ்ரீமத் வேங்கடரமண பாகவத ஸ்வாமிகளின் ஜெயந்தி இசை விழாவிற்காக நன்கொடை வசூலிக்க (வெறும் 11 ரூ) பலதடவை சென்றும் தராமலும், மேலும் அனைவரின் முன்னிலையில் என்னை பிச்சைக்காரனைப்போல அவமானப்படுத்தியும் விரட்டினார். அழுது கொண்டே வீட்டிற்குத் திரும்பி வந்து ஸமர்த்தரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கியபோது "ஸ்வாமி ஸுதன்" என்று ஆசியருளினார். அதாவது, "நீ எனது குழந்தை! அழாதே!" என்று அடியேனை சமாதானப் படுத்தினார். பின்பு சில வருடங்களில் அந்தக் கருமியான தனவந்தர் சிறுநீரகக் கோளாறு காரணமாக லட்சக்கணக்கான ரூபாய் செலவு செய்தும் பலனில்லாமற் போனதாக பொதுமக்கள் பேசிக்கொண்டனர். தர்மம் தரவிருப்பமில்லாதவர்கள் கௌரவமாக முதல் சந்திப்பிலேயே சொல்லிவிடலாமே!

2. ஸ்வாமி ஸுதன்: ஸ்வாமீ! அடியேனுக்கு எங்கே வேலை கிடைக்கும்?

ஸ்ரீ ஸமர்த்தர்: தரியா கிணாரே! (கடற்கரையில்)

கி.பி.1986 முதல் மதுரை, ஓசூர் மற்றும் பெங்களூரில் விரிவுரையாளராக பணிபுரிந்தாலும் அங்கெல்லாம் கடற்கரையில்லேயே என்று நினைத்துக் கொண்டிருந்தேன்.

ஆனாலும் கி.பி. 1996 முதல் பாண்டிச்சேரி (வங்காளக் கடற்கரையில்) அரசு மகளிர் தொழிற்நுட்பக் கல்லூரியில் பேராசிரியராக பணிபுரிகிறேன்.


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

3. ஸ்வாமி ஸுதன் : ஸ்வாமீ! அடியேன் தங்களுடனோ, அல்லது ஷீரடி சாயிபாபா வாழ்ந்த காலத்தில் அவருடனோ முற்பிறவிகளில் வாழ்ந்திருக்கிறேனா?

ஸ்ரீ ஸமர்த்தர்: "நிருஸிம்ஹ ஸரஸ்வதி!"

என்று சற்றும் எதிர்பார்க்காத பதிலைக் கூறி ஆச்சரியத்தி லாழ்த்தினார். ஸ்ரீ தத்தாத்திரேயரின் இரண்டாவது அவதாரமான கானகாப்பூர் ஸ்ரீ நிருஸிம்ஹஸரஸ்வதி ஸ்வாமிகளுடன் பூர்வ ஜன்மத்தில் சகவாசம் செய்து தத்த பரம்பரையில் சீடனாக அங்கீகரிக்கப்பட்டு, பிறகு தத்தாத்திரேயரின் அடுத்தடுத்த அவதாரங்களுடன் (ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்தர், ஷீரடி சாயிபாபா) சேர்ந்தே வந்திருக்கிறேன். இந்த பிறவியில் அடியேனைக் காட்டிலும் பல்லாயிரம் மடங்கு பெரிய பக்தரான எமது தந்தையாரின் வயிற்றில் தமிழகத்தில் பிறந்து, பின்பு புதுச்சேரியில் வாசம் செய்து, பிற்காலத்தில் இந்தக் கடற்கரையில் ஸ்ரீ சாயி அக்கல்கோட் மஹா ராஜர்களுக்கு பல்லாயிரம் வருடங்கள் நீடித்து நிலைக்கும் வண்ணம் கற்கோவிலும் கட்டுவதற்காக அனுப்பியுள்ளதாக நம்புகிறேன்.

4. ஸ்வாமி ஸுதன்: 19.06.1997ல் அடியேனின் தர்மபத்தினி ஸ்ரீமதி அகிலா காலை 7.40 மணிக்கு தனது தங்க மோதிரம் தொலைந்துவிட்டதாக அழுதுகொண்டே கூறினார். பாபாவிடம் அதைப்பற்றி முதலில் கேட்ட போது,

ஸ்ரீஷீரடி சாயிநாதர் : எந்த மோதிரம்? என்று திருப்பிக் கேள்வி கேட்டார்.

எங்களது குடியிருப்பில் (Apartment) கீழும் மேலுமாக ஆறு வீடுகள் இருந்தன. குழாயடியில் அனைவரும் நீர் எடுப்பதும், துணி துவைப்பதுமாக எப்போதும் நீர் ஓடிக்கொண்டே இருந்த பரபரப்பான இடத்தில் முன்தினம் எனது மனைவியும் துணி துவைத்தபோது கடைசியாக அந்த மோதிரத்தை விரலில் பார்த்ததாக தெரிவித்தார். ஆகையால் அங்கே சென்று தேடினோம். சுமார் ஒரு மணி நேரம் பெரியவர்களும் குழந்தைகளும் சாக்கடைவரை தேடியும் கிடைக்க வில்லை. அனைவரும் வேலைக்கு செல்ல நேரமானதால் கிளம்பி விட்டனர். அடியேன் மீண்டும் பாபாவிடம் சென்று மோதிரம் எங்கே என்று பிரார்த்தித்தபோது

ஸ்ரீஷீர்டி சாயிநாதர்: 'With Water' (தண்ணீரில்) என்று ஆசியருளினார்.

பிறகு நம்பிக்கையுடன் கையில் ஒரு குச்சியை எடுத்துக் கொண்டு மீண்டும் குழாயடியில் தேடியபோது என்னே ஆச்சரியம்! ஆம்! அந்த தங்க மோதிரம் வெளியே வந்து அனைவரையும் மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியது.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

இப்படியாக பிரத்யட்சமாக இன்றும் தம்மை நம்பும் அடியார்களுடன் பேசும் தெய்வங்களை இக்காலத்தில் வேறு எங்கே சென்று தேட முடியும்? காலத்தை வீணாக்காமல், சான்றோர்களே! சாயிசமர்த்தரின் திருவடிகளில் தஞ்சம் புகுந்து இகபரசுகம் அடைவீர்களாக! இன்றும் எனது விரலில் பாபாவால் கண்டெடுக்கப் பட்ட அந்த தங்க மோதிரத்தை சாயி பிரசாதமாக அணிந்து கொண்டிருக்கிறேன்.

5. ஒரு சமயம் மந்த்ராலயம், சோலாப்பூர், அக்கல்கோட் மற்றும் ஷீரடிக்கு யாத்திரை செல்லும்போது ஸ்ரீ ஸமர்த்தரிடம் ஆசி கேட்க,

ஸ்ரீஸமர்த்தர் : "மடிமீது"

என்று அருளினார். அதன் பொருள் விளங்காமலே மதுரையிலிருந்து சென்னைக்கு கிளம்பினேன். முன்பதிவு இல்லாததால் சென்னை சென்டரலிலிருந்து மும்பைக்குச் செல்லும் ரயிலில் பொதுப்பெட்டியில் ஏற முயற்சித்தேன். ஆனால் ரயிலில் கூட்டம் நிரம்பி வழிந்து கொண்டிருந்தது.

இருந்தாலும் ஒவ்வொரு பெட்டியாக நம்பிக்கையுடன் சென்று இடமிருக்கிறதா என்று தேடிச்செல்லும் போது, ஒரு பெட்டியில் ஜன்னல் ஓரத்தில் ஒருவர் அமர்ந்திருந்தார் அவருக்குப் பக்கத்தில் ஒருவர் அமரஇடம் விட்டு பிறர் அமர்ந்தும். நின்றும் இருந்தனர். படியிலும் தொங்கும் அளவிற்கு கூட்டம் இருந்தது. ஆனாலும் ஏதோ ஒரு தைரியத்தில் அடியேன் வாசல்வழியாக சென்ற போது அனைவரும் வழிவிட்டனர். யாரிடமும் எதற்கும் பேசாமலும் கேட்காமலும் அந்த காலியான இடத்திற்கு சென்று அமர்ந்து கொண்டேன். என்ன ஆச்சர்யம்! ஒருவர் கூட அடியேனிடம் ஒரு கேள்வியோ எதிர்ப்போ தெரிவிக்கவில்லை.

பரமஸத்குரு ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்தர் ஊருக்கு கிளம்பும்போது என்னை தமது "மடியில்" பத்திரமாக அழைத்துச் செல்வேன் என்று ஆசியருளியது இதற்குத்தான் என்று பின்பு உணர்ந்து மகிழ்ந்தேன்.இந்தப் பயணத்தில் மட்டுமல்ல, ஸ்ரீ அக்கல்கோட் மஹராஜ் நமது பிறவிப் பயணத்திலும் கூடவே இருந்து தமது மடியில் ஒரு குழந்தை போல நம்மை பத்திரமாக வைத்துக் காப்பாற்றி, அவ்வுலக வீட்டிற்கும் அழைத்துச் செல்வார் (முக்தி) என்பது திண்ணம்.


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

6. திரு. N.S. கரந்தீகர் என்பவர் எழுதிய ஸ்ரீ அக்கல்கோட் மஹராஜ் ஆங்கில மொழி நூலில், ஸ்ரீ ஸமர்த்தர் மஹாசமாதி அடையும் போது, பத்மாஸனத்தில் அமர்ந்து இருந்ததாக எழுதியிருந்தார்.

ஸ்வாமிஸுதன் : ஸ்வாமீ! அவர் எழுதியது உண்மையா!

ஸ்ரீஸமர்த்தர் : இல்லை!

என்று கூறி எமது சந்தேகத்தை தீர்த்து வைத்தார். மஹான்களுடைய சரிதங்களை எழுதும்போது நமது கற்பனையையோ அல்லது பொய்யான தகவல்களையோ தருவது பாவமன்றோ!

7. சில பொய்யான துறவிகள் தங்களைத் தாங்களே "கடவுள்" என்று பறைசாற்றிக் கொண்டு ஆன்மீகத்திலிருந்து விலகி, கீழான மந்திர, தந்திரங்களைச் செய்து மக்களை ஏமாற்றுவது கலியுகத்தில் சர்வசாதாரண நிகழ்வுகளாகிவிட்டன. அந்த வகையில் தம்மை சாயி பாபா என்று கூறிக்கொள்ளும் ஒரு மந்திரவாதியின் விபூதியை பூசிக்கொள்ளலாமா! என்று எனது தம்பி சாயிகணேஷ் ஸ்ரீஸ்வாமிகளிடம் வினவ

ஸ்ரீ ஸமர்த்தர் : வேண்டாம்!

என்று மறுத்து, அவர்கள் வழி சரியில்லை! என்பதை நிரூபித்த சம்பவங்களும் உண்டு. அதே மந்திரவாதியைப்பற்றி ஷீரடியில் எமது தந்தையார் பாபாவின் சமாதியில் கேட்டபோது "அவன் என்னுடைய அவதாரமல்ல!" என்று மறுத்தார் பாபா.

8. 16.11.2009 மதியம் 1.30 மணிக்கு எம் உயிரினும் இனிய தந்தையாரின் உடல்நலம் குன்றி, சாப்பிட முடியாமல் கஷ்டப்படு வதைப் பார்த்து துயருற்று ஸ்ரீ ஸ்வாமியிடம் அவருக்காக உடல் நலம் வேண்டி பிரார்த்தித்தபோது,

ஸ்ரீ ஸமர்த்தர்: " மயானம்"

என்று சொன்னதும் அதிர்ச்சியுற்றேன்.

அவரது நோய் குணமாக பலரும் பலவழிகளையும் சொன்னாலும் எந்த மருந்தும் மாத்திரையும் இல்லாமலும், மருத்துவமனைக்குச் செல்லாமலும் குருவருளால் எமது தந்தையார் ஸ்ரீ ஸாயிஸமர்த்த மஹாராஜர்களின் நாமஜபம் செய்து கொண்டே 11.12.2009 வெள்ளிக்கிழமை இரவு 11.45 மணிக்கு கைசிக ஏகாதசியன்று முக்தியடைந்தார். ('குருபக்த சிரோமணி')



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

ஸ்ரீமான் சாயிபாபா J.S. சுப்பிரமணியன் பற்றி விரிவாக " பேசும் தெய்வம்" அக்கல்கோட் மஹாராஜ் அருளாட்சி 2-ம் பதிப்பில் படிக்கலாம்).

9. எங்கள் வீட்டை " சாயிபாபா வீடு" என்றே அனைவரும் அழைப்பர். ஸத்குரு ஸ்ரீ சாயி சமர்த்த ராகவேந்திர மஹாப்ரபுக் களிடம் எங்கள் வீட்டு சிறு குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் தத்தமது சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்வதற்கோ அல்லது எந்த கோரிக்கையுமில்லாமல், ஆசீர்வாதங்களைப் பெற வேண்டியோ கேள்வி கேட்கும்போது மின்சாரம் அல்லது மின்னலைப்போன்று ஓரிரு வார்த்தைகளில் ஸ்வாமிகள் பதிலளிப்பது அன்றாடம் நடக்கும் நிகழ்ச்சிகளாகும்.

அண்மையில் எமது கடைசித்தங்கை திருமதி. சாயிலஷ்மி கண்ணன் (வணிகவியல் ஆசிரியை (PGT), தமிழ்நாடு கல்வித்துறை) ஒரு நாள் ஸ்ரீ ஸமர்த்தரிடம்,

ஸ்வாமீ! அடியேன் திருமணமானபிறகு, மாமனார் வீட்டு வேலைகளையும், பள்ளிக்கூட வேலைகளை் செய்வதிலேயே நேரம் போய்விடுகிறது. தங்களைப் பிரார்த்திக்ககூட நேரமில்லை. இருந்தாலும், நான் எப்போது எதைக் கேட்டாலும் அனந்த கோடி பிரம்மாண்ட நாயகராகிய தாங்கள் உடனே எமக்கு பதில் தருகிறீர்களே! என்று ஆச்சரியத்துடன் வினவினார். அதற்கு,

ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்தர்: "வேண்டாமென்றால் நடையைக் கட்டு" என்று கூறியதும், ஸ்வாமியிடம் மன்னிப்புக் கேட்டார்.

பொதுவாக, பக்தி செய்வது என்றால் நீண்ட நேரம் பூஜை செய்வது, கோவிலுக்குப் போவது, விரதங்கள் இருப்பது, நெற்றி நிறைய பலவகையான பொட்டுகளை வைத்துக்கொள்வது, தாம் மிகவும் ஆசாரமானவர் என்று நினைத்து பிறரை தாழ்வாக எண்ணுவது, தகுதிக்கு மீறி கடன் வாங்கியாவது பிறர் மெச்சுமளவு தான தர்மங்கள் செய்வது, கோவில் பூசாரிகள் மற்றும் மடாதிபதிகளின் நன்மதிப்பை பெறுவதற்காக வீண் செலவுகள் செய்வது, முண்டியடித்துக் கொண்டு பிறரை துன்புறுத்தி முதலில் சென்று சுவாமி தரிசனமோ, பிரசாதமோ வாங்குவது, சமய வேடதாரிகள் சொல்லும் பரிகாரங்களை நகையோ வீட்டையோ கூட அடகு வைத்து செய்வது என்று தவறாக நினைக்கிறார்கள்.

பகவான் ஸ்ரீ கிருஷ்ணர் தமது பகவத்கீதையில்,


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

" எவன் ஒருவன் உண்மையான பக்தியுடன் ஒரு இலையோ, ஒரு இதழ் மலரோ அல்லது ஒரு துளி நீரோ எனக்கு அர்ப்பணிக்கின் றானோ அவனுக்கு நான் இவ்வுலகிலும் அவ்வுலகிலும் வேண்டிய அனைத்தையும் நல்குவதற்கு கடமைப்பட்டுள்ளேன்"

என்று மிகவும் எளிமையான மற்றும் தூய்மையான (அன்பு) பக்தி மார்க்கத்தையே போதித்தார். விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீசாயி சமர்த்த மஹாராஜர்களும் இந்த பக்தி மார்க்கத்தையே நமக்கு போதிக்கின்றனர், என்பது ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்தரின் திவ்ய சரிதம் மூலம் தெளிவாகிறதல்லவா? இங்கே பாபாவின் அமுத வாக்கை நினைவு கூறுதல் சாலச்சிறந்தது. அதாவது,

" என் பக்தன் என்னை மறந்தாலும், நான் அவனை எப்போதும் கைவிடுவதில்லை" என்பதே அது. நமக்கு நேரம் கிடைக்கும் போதெல்லாம் சாயிநாமஜபம் செய்துகொண்டே நம் வாழ்வையே அவருக்குச் செய்யும் பூஜையாக அர்ப்பணித்து அறவழியில் வாழ்வோமாக!

" ஸ்ரீராம் ஜெய்ராம் ஜெய்ஜெய் ஸாயிராம்!"

## 10. நாமஜபத்தின் மகிமை

என் தர்மபத்தினி ஸௌ:அகிலாவிற்கு வெகுநாட்களாக ஒரு மனக்குறை இருந்தது, அதாவது ஸ்ரீ ஸாயி ஸமர்த்த மஹாராஜாக்கள் தமக்கு தரிசனமோ அல்லது தம்முடன் பேசவோ இல்லையே! என்று. அடியேன் அவர்களிடம் "அடியேன் மனைவி என்பதனாலேயே ஸ்வாமிகள் உம்முடன் பேசமாட்டார். பக்தியுள்ளவர்களிடம் மட்டுமே தாயைப்போல ஓடோடி வந்து பாசமுடன் தரிசனம் கொடுத்து அன்புடன் பேசுவார். ஆகவே "ஓம் ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்த!" "ஜெய ஜெய ஸ்வாமி ஸமர்த்த!" என்ற தாரக மந்திரத்தை பக்தியுடனும் நம்பிக்கையுடனும் ஒரு லட்சம் முறை ஜபித்தால் நிச்சயம் குருவருள் சித்திக்கும்! உமது ஆசை நிறைவேறும்!" என்று கூறினேன்.

அக்கல்கோட்டில் சமீபகாலம்வரை ஸ்ரீபாளப்பா மடத்தை நிர்வகித்து, அக்னிஹோத்திரத்தை பிரபலப்படுத்தி புகழ்பெற்று சமாதியுற்ற ஸ்ரீ கஜானன் மஹாராஜரின் திருக்கரங்களால், ஸ்பரிச ஆசீர்வாதத்துடன் பெறப்பட்ட, அக்னி பாத்திரத்தின் மூலம் கி.பி. 1987 முதல் தினமும் காலையிலும் மாலையிலும் பாபா ஏற்றிவைத்த அணையாத நெருப்பு "துனி" (Dhuni) யின் அம்சமாக இதை தொடர்ந்து செய்து வருகிறோம். காலையில் அடியேனும், மாலையில் என் தர்மபத்தினியும் அக்னிஹோத்ரம் செய்வது வழக்கம்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

ஸ்ரீஸ்வாமி ஸமர்த்தரின் நாமஜபத்தை தினமும் அக்னி ஹோத்ரம் முடித்துவிட்டு 1,000 (அ) 2,000 தடவை ஜபித்துக் கொண்டே 13.05.2009 புதன்கிழமை அன்று ஒரு லட்சம் (டைரியில் குறித்து வைத்து) ஜபம் முடித்த மறுகணமே தியானத்தில் ஸ்ரீமதி அகிலாவுக்கு ஸத்குருநாதரின் "பாதுகை" தரிசனம் கிடைத்தது. மறுநாள் குருவாரத்தன்று மாலை அடியேன் ஆரத்தி செய்யும் போது ஸ்ரீஸ்வாமிகள் பிரத்யட்சமாக அவருக்கு மட்டும் தரிசனம் கொடுத்து பக்தியின் சக்தியை அவருக்கு உணர்த்தினார். பிறகு அவரையும் தமது மகளாக அங்கீகரித்து சரியான பதில்களை தந்து அருளுகிறார்.

இதேபோன்ற அனுபவம் "குரு சரித்ரத்தை" தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்ட ஆசிரியர், புனேயில் ஃபியட் (FIAT) கார் கம்பெனியின் மேலாளர் ஸ்ரீரமேஷ் ராதாகிருஷ்ணன் ஐயர் அவர்களுக்கு ஏற்பட்டது.

" பேசும் தெய்வம்" அக்கல்கோட் மஹாராஜ் அருளாட்சி நூலில் ஸ்வாமிகள் எம்முடன் பேசுவதையும், பாதுகை தரிசனம் அளித்ததையும் படித்துவிட்டு, தமக்கும் அந்த பாக்கியம் கிடைக்குமா? அதற்கு என்ன வழி? என்று என்னிடம் வினவியபோது,

" ஓம் ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்த!
ஜெய ஜெய ஸ்வாமி ஸமர்த்த!!"

என்ற நாமஜபத்தை ஒரு லட்சம் முறை ஜபித்தால் குருவருள் நிச்சயம் கிடைக்கும் என்று ஸ்ரீஸமர்த்தரின் மீது நம்பிக்கையுடன் கூறினேன்.

தமது வேலைகளுக்கிடையே நேரம் கிடைக்கும் போதெல்லாம் பணிக்கு காரில் சென்று, வீட்டிற்கு திரும்பி பயணிக்கும்போதும் முயன்று ஒரு லட்சம் நாம ஜபத்தை சில மாதங்களில் முடித்துவிட்டார். ஆனாலும் ஸ்ரீஸ்வாமியின் தரிசனம் கிடைக்கவில்லை என்று வருத்தத்துடன் தெரிவித்தார்.

அடியேன் அவரிடம், நம்பிக்கை இழக்காமல் பொறுமையுடன் மேலும் நாமஜபத்தை தொடர்ந்து செய்யச் சொன்னேன். மரம் பூமிக்கடியில் மக்கும்போது கரி உண்டாகிறது. கரி இன்னும் பலகாலம் மக்கும்போது வைரம் கிடைக்கிறது. ஆகவே ஸமர்த்தர் தங்களுக்கு இன்னும் மேலான பலனைத் தருவார் என்று நம்பிக்கை ஊட்டினேன்.


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

பரமஸத்யமான ஸத்குரு ஸ்ரீஸமர்த்தர் அவருக்கு 12.9.2010 அன்று அதிகாலை கனவில் தகதகவென மின்னும் வைரக்கற்கள் பதித்த தங்க பாதுகைகளை காட்டி அவரது பக்திக்கு பரிசளித்தார். குருகடாக்ஷம் பரிபூரணம். நீங்களும் முயற்சிக்கலாமே!

**11. நைவேத்யம்**

சச்சிதானந்த சமர்த்த ஸத்குரு ஸ்ரீ சாயிநாதர்,

"எவன் என்னை நினையாமல் ஒருபோதும் உண்ண மாட்டானோ, அவனுக்கு நான் அடிமை" என்று அடியவர்களுக்கு மிகச்சுலபமாக தமதருள் கிடைக்க வழி கூறியுள்ளார்.

எங்கள் வீட்டில் அனைவரும் ஸ்வாமிக்கு அர்ப்பணிக்காமல் ஒரு போதும் உண்பதில்லை, இதே வழக்கத்தை எமது மகன் திருநிறைச் செல்வன் சாயி ஹிருஷீகேஷ் பாபுவிற்கும் (ரிஷி) கற்றுக் கொடுத்தோம். ஒரு நாள் பசியோடு, கவனக்குறைவாக பாபாவுக்கு அர்ப்பணிக்காமல் ரிஷி உண்டுவிட்டான். அடியேன் கேட்டபோது உண்மையை ஒப்புக்கொண்டான். இருந்தாலும் அவனை எழவைத்து, பாபாவிடம் சென்று மன்னிப்புகேட்டு தோப்புக் கரணம் போடச் சொன்னேன். அதன் பின்னர் எதைச் சாப்பிட்டாலும் குருநாதர்களுக்கு அர்ப்பணித்தே சாப்பிட ஆரம்பித்தான்.

மூன்று தினங்களுக்குப்பிறகு, ஸ்ரீஸ்வாமி ஸமர்த்தர் அவனது கனவில் வந்து, எங்களது அபார்ட்மெண்டில் ஒரு திண்ணையில் அமர்ந்து கொண்டு, ஒரு கையில் சப்பாத்தியும் காய்கறியும் வைத்து, தமது நண்பர்களுடன் விளையாடிக் கொண்டிருந்த ரிஷிக்கு ஊட்டினார். அவன் ஸ்வாமிகளிடம் ஒரு வாய் சாப்பிடுவதும் பின்பு விளையாடுவதுமாக ஓடிக் கொண்டிருந்தான். சப்பாத்தி தீர்ந்ததும் ஸ்வாமிநாதர் தமது தேஜோமயமான, ஆஜானுபாகுவான, தாமிரவர்ண தேகத்துடன் எழுந்து நின்று ரிஷியை ஆசீர்வதித்துவிட்டு இன்னொரு வாயில் வழியாக கிளம்பிச் சென்றுவிட்டார்.

சின்னஞ்சிறு குழந்தைகூட தமக்கு அர்ப்பணித்துவிட்டு உண்ணும் பக்தியில் மனம் குளிர்ந்த பரமதயாளரான சமர்த்தேஸ்வரி, ஜகன்மாதா அக்குழந்தைக்கு தமது திருக்கரங்களாலேயே உணவும் ஊட்டி, தாம் இவ்வுலகில் இன்றும் சிரஞ்ஜீவியாக பக்தர்களுக்காக வாழ்ந்து கொண்டிருப்பதையும், தம்மீது வைக்கும் நம்பிக்கை என்றும் வீணாகாது என்கிற தத்துவத்தையும் உணர்த்திச் சென்றார்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

நீங்களும் உங்கள் குழந்தைகளுக்கு உணவுடன் பக்தியையும் ஊட்டலாமே!

ஒரு ஆங்கிலப் பழமொழி -

"You Can take the horse to the water;
But You Can't make it to drink"

என்று உள்ளது.

அதாவது குதிரைக்கு தண்ணீர் வைக்கலாம். ஆனால் அதைக் குடிக்கச் செய்ய முடியாது! என்பதே அதன் பொருள்.

அடியேன் இந்த புனிதமான ஸ்ரீ ஸமர்த்தரின் சரிதத்தின் மூலம் பிறருடைய அனுபவங்களையும், எமக்கும் எமது குடும்பத்தாருக்கும் ஏற்பட்ட பிரத்யட்சமான, பரம ஸத்தியமான அனுபவங்களையும் தங்களுக்கு உரைத்துவிட்டேன்!

ஆன்மீகப்பசி மற்றும் தாகம் உள்ளவர்கள் வற்றாத ஜீவ நதியாக இல்லந்தோறும், பக்தர்களின் உள்ளந்தோறும் ஓடிவரும் தத்தாத்திரேய அவதாரியான ஸ்ரீ ஸாயி ஸமர்த்த மஹாராஜர்களின் பக்தி செய்து (எளிமையான நாமஜபம் மற்றும் நைவேத்யம் மூலம்) இகபர சுகம் அடைய வேண்டுமென்று பிரார்த்தித்து அமைகிறேன்.

சுபம்!
குருகடாக்ஷம் பரிபூரணம்!
" அனந்த கோடி பிரம்மாண்ட நாயக
ராஜாதிராஜ யோகிராஜ பரபிரம்ஹ
ஸச்சிதானந்த ஸத்குரு ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்த
மஹராஜ்க்கு ஜெய்!"


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



# அக்கல்கோட் யாத்திரைக் குறிப்பு

## பயணம்

கர்நாடகா-மஹாராஷ்டிரா எல்லையில் அக்கல்கோட் அமைந்துள்ளது. சென்னையிலிருந்து மும்பை செல்லும் **Chennai - Mumbai Mail** மூலம் அக்கல்கோட் ரோட் ரயில் நிலையத்தில் இறங்கி பஸ் மூலமாக அங்கிருந்து 11 கி.மீ தொலைவில் அக்கல்கோட் செல்லலாம். இந்த ஒரே ரயிலை நம்பாமல், சென்னையிலிருந்தும் தமிழகத்தின் பிற ஊர்களிலிருந்தும் சோலாப்பூர் வழியாக மும்பை செல்லும் பல விரைவு ரயில்கள் மூலம் சோலாப்பூரை அடைவது எளிது. அங்கிருந்து ரயிலடி யிலிருந்தோ அல்லது சோலாப்பூர் **S.T.** பஸ் நிலையத்திலிருந்தோ அக்கல்கோட் (38 கி.மீ) க்கு தொடர்ந்து பஸ்கள் இயக்கப்படுவதால் எளிதாக, வசதியாக அக்கல்கோட் சென்றடையலாம்.

## தங்கும் வசதி:

அக்கல்கோட் பஸ் நிலையத்திலிருந்து நடந்தோ அல்லது ஆட்டோவிலோ "வடவ்ருக்ஷ மந்திர்" (ஸ்ரீ சமர்த்தரின் வாசஸ் தலமாகிய ஆலமரக்கோயில்) சென்று அதன் அருகே மிகப் பிரம்மாண்டமாக கட்டப்பட்டுள்ள "அன்னசத்திர மண்டல்" பக்தநிவாஸ் தங்கும் அறைகள் மற்றும் குழுவினருக்கான பெரிய ஹால் தங்கும் விடுதிகளை குறைந்த வாடகைக்கு எடுத்து வசதியாக தங்கலாம்.

வடவ்ருக்ஷமந்திரிலும் அறைகள் உள்ளன. கோவிலைச் சுற்றிலும், "முரளீதர் மந்திர்" மற்றும் தனியார்களின் லாட்ஜ்களும் உள்ளன.

## உணவு:

வடவ்ருக்ஷ மந்திர் அருகே "ஸ்ரீசுவாமி சமர்த்த அன்னசத்திர மண்டல்" மூலம் ஆயிரக் கணக்கான பக்தர்களுக்கு தினமும் காலை, மதியம் மற்றும் இரவு மூன்று வேளைகளும் இலவசமாக அன்னதானம் (விருந்து) செய்யப்படுகிறது. முரளீதர் மந்திர் மற்றும் தனியார் உணவகங்களும் உள்ளன.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy



## தரிசிக்க வேண்டிய இடங்கள்:

1. "வடவ்ருக்ஷ மந்திர்" - ஸ்ரீசமர்த்தர் பற்பல திருவிளையாடல்களை புரிந்த புனித ஆலமரத்தைச் சுற்றி அமைக்கப்பட்டுள்ள கோவில். சுவாமிகள் அமர்ந்திருந்த இடத்தில் தற்போது அவர்தம் திருவடிகள் பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது. அதன் அருகே காது கொடுத்துக் கேட்டால் "ராம்....... ராம்....." என்று மகராஜின் மூச்சுக் காற்றைக் கேட்டுப் பரவசமடையலாம். ஸ்ரீசமர்த்தரின் கட்டிலும், மெத்தையும் ஒரு அறையில் உள்ளன. சுவாமிகளின் ஆத்மலிங்கமான பாதுகைகளுக்கே அனைத்து பூஜைகளும் அதிகாலை 5 மணியிலிருந்து இரவு 10 மணிவரை நடைபெறுகிறது. மண்டபத்தில் சுவாமிகள் அணிந்திருந்த நீண்டபட்டு உடையும், ருத்ராட்ச மாலைகளும், அழகிய உயிரோட்டமுள்ள வண்ணப்படமும் உள்ளன.

2. "ஷேக் நூருத்தீன் பாபா தர்கா" - ஸ்ரீசமர்த்தர் அக்கல்கோட் வருவதற்கு (1857) முன்பிருந்தே பிரசித்தமாக விளங்கும் தர்கா. ஜாதி, மத எல்லைகள் கடந்து அனைவருக்கும் அருள்பாலிக்கும் சிரஞ்சீவி பாபாவின் தர்கா வடவ்ருக்ஷ மந்திர் பக்கம் சிறுகுன்றின் மீது அமைந்துள்ளது (நடந்தே செல்லலாம்).

3. ஸ்ரீமுரளீதர் மந்திர் - வடவ்ருக்ஷ மந்திர் பக்கம்.

4. ஸ்ரீபாளப்பா மகராஜ் குரு மந்திர் - ஸ்ரீ சமர்த்தரின் அத்யந்த சீடரான ஸ்ரீபாளப்பா மகராஜின் சமாதிக் கோவில். இந்த மடத்தில் சமீப காலம் வரை மடாதிபதியாக இருந்த பரமசத்குரு ஸ்ரீகஜானன் மகராஜ் ஆரம்பித்து உலகெங்கும் பிரபல-மாக்கப்பட்ட அக்னிஹோத்திரம் என்னும் இல்லங்களில் செய்யும் எளிய ஹோமத்திற்கான அக்னி பாத்திரம் இங்கே கிடைக்கும்.

5. ஸ்ரீசமர்த்தமகராஜ் சமாதி மந்திர் - மகராஜ் பல லீலைகள் புரிந்தருளிய ஸ்ரீசோளப்பாவின் இல்லத்தருகே அமைக்கப்பட்டுள்ள ஸ்ரீசமர்த்தரின் மஹாசமாதியை தரிசித்து அருள் பெறலாம். சுவாமிகளின் தோல் பாதுகை, வெள்ளிப் பாதுகைகள் மற்றும் மந்தார கணபதி (சுயம்பு கணபதி) யையும் சோளப்பாவின் இல்லத்தில் தரிசிக்கலாம்.



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

6. ஸ்ரீகண்டோபா மந்திர்-ஸ்ரீசுவாமிகள் முதன்முதலில் வந்து தங்கிய எல்லைக் காவல் தெய்வமாகிய கண்டோபா (முனீஸ்வரன் போல) ஆலயம், அக்கல்கோட்டில் இறங்கியவுடன் பஸ்நிலையம் எதிரே உள்ளது. சுவாமிகளால் காப்பாற்றப்பட்ட சுந்தரி என்ற வானரத்தின் சமாதியையும் இங்கே தரிசிக்கலாம்.

7. அக்கல்கோட் ராஜவாடா (அரண்மனை) - சுவாமிகள் அவ்வப்போது தங்கிப் புனிதப்படுத்திய அக்கல்கோட் அரண்மனை வடவிருஷ மந்திர் மற்றும் பஸ் நிலையத்திற்கு இடையே அமைந்துள்ளது.

8. ஜோஷிபுவா மட், ராஜே ராயன் மட், ராமர் கோவில், காஸ்பாக் தோட்டம் ஆகியவையும் தரிசிக்கலாம்.

9. சிவபுரி - பரசுராமனின் அவதாரமாக மதிக்கப்படும் பரமசத்குரு ஸ்ரீகஜானன் மகராஜரால் உருவாக்கப்பட்ட 'சிவபுரி' என்ற தலம் அக்கல்கோட்டிலிருந்து 3கி.மீ தூரத்தில் உள்ளது. பஸ் / ஆட்டோ மூலம் தரிசித்து அருள் பெறலாம்.

## அக்கல்கோட்டைச் சுற்றியுள்ள புனித தலங்கள்

பேருந்து மூலம் செல்லலாம். சோலாப்பூரிலிருந்து நிறைய பஸ் வசதிகள் உள்ளன.

### அக்கல்கோட்டிலிருந்து

1. பண்டரீபுரம் - 112 கி.மீ.
2. சீரடி (சாயிபாபா) - 320 கி.மீ.
3. ஷேகாம் (ஸ்ரீ கஜானன் மகராஜ்) - 412 கி.மீ.
4. கோலாப்பூர் (மஹாலக்ஷ்மி) - 290 கி.மீ.
5. துல்ஜாப்பூர் (பவானி) - 85 கி.மீ.
6. புணே - 285 கி.மீ.
7. மும்பை - 470 கி.மீ.
8. கானகாப்பூர் (ஸ்ரீ நரசிம்ம சரஸ்வதி) - 85 கி.மீ.
9. குல்பர்கா - 108 கி.மீ.
10. ஹைதராபாத் - 290 கி.மீ.

குருகடாட்சம் பரிபூரணம்


https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்த (அக்கல்கோட் மஹராஜ்) அஷ்டோத்திரசத நாமாவளி

1. ஓம் ஸ்ரீ நிருஸிங்க[3]: காஷ்யபோ யோகீ [3] ஸ்வாமிநாதோ[2] யதீஷ்வர:
   ப்ரக்ஞாபூர நிவாஸிச சிரஞ்ஜீவி தி[3]க[3]ம்ப[3]ர:
2. கௌபீனதா[4]ரி சன்யாஸி ஸமர்த்தோ[2]ஞானபா[4]ஸ்கர:
   நாராயண ஸ்வரூபி ச த[4]னதா[4]ரா விவர்ஜித:
3. ஸர்வசங்க[3]பரித்யாகீ[3] ப[4]க்தானம் ஞானதோ[3]கு[3]ரு:
   ப்ரஹ்மேந்தி[3]ரோ ப்ராஹ்மணோ ஞானி க்ஷேத்ரக்ஞ: ஸூரவந்தி[3]த:
4. வந்த[3]னீய: பூஜனீயோ த்[3]வந்த்[3]வாதீதோ ஜகத்குரு:
   ஸர்வக்ஞ: ஸர்வ ஸாக்ஷீச ஸர்வாதீதோ ஸுரேஷ்வர:
5. லம்போ[3]த[4]ரோ விஷாலாக்ஷோ கோ[3]பாலோ த[4]ர்மரக்ஷக:
   ஆஜானுபாஹுர்த[4]ர்மக்ஞ: ஷீக்ரகா[3]மீ மலாந்தக:
6. வேதா[3]ந்தீ தத்வவேத்தா ச வேத[3]வேதா[3]ங்க[3]ப்பாரக[3]:
   த[4]ர்மாச்சார்யோ குரு ஷிரேஷ்ட: பண்டிதானாம் ஷிரோமணீ:
7. ப்ரஸன்னவத[3]ன: ப்ரத்[3]வாட் ப்ராக்ஞ: ப்ரக்ஞாபுரேஷ்வர:
   காமஜித் க்ரோத[4]ஜித் தியாகீ[3] நித்யமுக்த ஸதா சிவ:
8. மாயாதீதோ மஹாபாஹுர் மஹாயோகீ[3] மஹேஷ்வர:
   காஷாயவஸ்த்ர: காமாரிர்த[4]ம்ப[3] அஹங்கார வர்ஜித:
9. முண்டி[3] தூர்யாஷ்ரமீ ஹன்ஸோ த்[4]யானயோக[3]ப்பராயண:
   த்[4]யானயோகீ[3] த்[4]யானஸித்தோ[4] நிர்விகல்போ நிரஞ்ஜன:
10. கீதா புஸ்தகதா[4]ரீ ச கீதாபாடப்ரவர்த்தக: கீதா சாஸ்த்ர
    விசேஷக்ஞோ கீதா சாஸ்த்ர விவர்த[4]ன:
11. ஓம் சிவ: சிவகர: சைவ: ப்ரஹ்மா விஷ்ணு சிவாத்மக:
    ஹரப்ரியோ ஹரிரூப: பாண்டுரங்க சகஸ்த்தா



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

12. ஜக$^{3}$த்$^{3}$ரூபோ ஜகத்வந்த்யோ ஜகத்பூஜ்யோ ஜகத் சக:

ஜகத்$^{3}$ பந்து ஜகத்புத்ரோ ஜகந்மாதா ஜகத்பிதா:

13. முக்தசங்க:$^{3}$ ஸதா$^{3}$ முக்தோ முனிமௌன பராயண:

கோ$^{3}$விந்தோ$^{3}$ கோ$^{3}$விதா$^{3}$ம் சிரேஷ்டோ மஹாஸித்தோ$^{4}$

மஹாமுனீ:

14. திரிதண்டீ$^{3}$ தண்ட$^{3}$ ரஹிதோ வர்ணாஷ்ரம விவர்ஜித:

மந்த்ரகர்த்தா மந்த்ர வேத்தா ஜபயோகி$^{3}$ ஜகப்ரிய:

15. அக்ரோத$^{3}$: ஸாத்வீக: சாந்தோ ஞானமுத்$^{3}$ ரா ப்ரத$^{3}$ ர்ஷக:

ப$^{4}$ க்தானம் வரதா$^{3}$ தா ச பக்தானம் மார்க$^{3}$ த$^{3}$ ர்ஷக:

ஏதானி மதுநாமாநி ஸ்வாமிராஜ மஹாத்மந:

யோநர: படதே நித்யம் ச சுகம் சிரமஷ்நுதே ||

ஸ்ரீ அக்கல்கோட் கஜானன் மஹராஜ் இயற்றிய

ஸ்ரீஸ்வாமி ஸமர்த்த அஷ்டோத்திர சத நாமாவளி முற்றும்.

உச்சரிப்பு குறிப்பு: சமஸ்கிருதத்தில் ஒவ்வொரு எழுத்திற்கும் நான்கு உச்சரிப்புகள் உண்டு (உதாரணமாக)

| | | | |
|---|---|---|---|
| க | க$^{2}$ | க$^{3}$ | க$^{4}$ |
| (Ka) | (Kha) | (Ga) | (Gha) |
| ப | ப$^{2}$ | ப$^{3}$ | ப$^{4}$ |
| (Pa) | (Pha) | (Ba) | (Bha) |

மேலும் : என்பதை ஹ போல உச்சரிக்கவும்

ஆகவே மந்திரங்களை எண்களுக்கேற்ப சரியாக உச்சரித்து முழு பலனை பெறுமாறு வேண்டுகிறேன்.

குருகடாட்சம் பரிபூரணம்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்த - அக்கல்கோட் மஹாராஜ் ஆரத்தி

ஜெயதே$^{3}$வ! ஜெயதே$^{3}$வ! ஸ்ரீஸ்வாமி ஸமர்த்தா$^{2}$

ஆரத்தி ஓவாளு சரணி டே$^{2}$ வூனியா மாதா$^{2}$

(ஜெய தேவ ஜெய தேவ)

1. சேலீ கே$^{2}$டே$^{3}$கி$^{3}$ராமீ தூ அவதரலாஸீ

ஜக$^{3}$த்துத்தா$^{4}$ராஸாடீ ராயா தூ பி$^{2}$ரஸீ

ப$^{4}$க்தவத்ஸல க$^{2}$ரா தூ ஏக ஹோஸீ

மஹ்ணூநி ஷரண் ஆலோ துஜ்யா சரணாஸீ||

(ஜெய தேவ ஜெய தேவ)

2. த்ரைகு$^{3}$ண பரப்$^{4}$ரஹ்ம துஜ்யா அவதார்

ஹ்யாசி காய் வர்ணூ லீலா பாமர

சேஷாதி$^{3}$க ஷிணலே நலகே$^{3}$ த்யாம் பார்

தேதே$^{2}$ ஜட$^{3}$ மூட$^{4}$ கைஸா கரூ மீ விஸ்தார்||

(ஜெய தேவ ஜெய தேவ)

3. தே$^{3}$வாதி$^{4}$தே$^{3}$வ தூ ஸ்வாமிராயா

நிர்ஜர முனிஜன த்$^{4}$யாதீ பா$^{4}$வே தவ பாயா

துஜஸீ அர்பணகேலீ ஆபுலிஹீ காயா

ஷரணாக$^{3}$தா தாரீதூ ஸ்வாமிராயா||

(ஜெய தேவ ஜெய தேவ)

4. அக$^{4}$டி$^{4}$த லீலா கருநீ ஜட$^{3}$ மூட$^{4}$ உத்$^{3}$த$^{4}$ரிலே

கீர்த்தி ஐகுநி காநீ சரணீ மீ லோளே

சரணப்ரஸாத$^{3}$ மோடா$^{2}$ மஜஹே அநுப$^{4}$ வலே

துஜ்யா ஸுதா ந லகே சரணா வேக$^{3}$ளே

(ஜெய தேவ ஜெய தேவ)

ஸ்ரீஸ்வாமி ஸுதன் இயற்றிய ஆரத்தி முற்றும்



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

## ஸ்ரீ ஸ்வாமி சமர்த்த ஆரத்தி (தமிழாக்கம்)

ஓ ஸ்வாமி ஸமர்த்தா, உமக்கு வெற்றி உண்டாகுக. தங்கள் பொன்னடிகளில் எமது தலைவைத்து வணங்கி, சுடர்விடும் தீபங்களால் ஆரத்தி செய்கிறேன்.

1. சேலி என்ற குக்கிராமத்தில் பூமியை பிளந்து கொண்டு எட்டுவயது பாலகனாக இவ்வுலகம் உய்வதற்காக அவதரித்து, ஓய்வில்லாமல் சுற்றிக் கொண்டுள்ளீர். நீர் ஒருவரே மிகச் சிறந்த பக்தவத்சலன் என்று நம்பி உமது திருவடிகளில் சரணடைகிறேன்.

2. முக்குணங்கள் நிறைந்த பரமாத்மாவான தத்தாத்திரேயரின் அவதாரம் என்பதைத் தவிர பாமரனாகிய எம்மால் வேறு எப்படி தங்களை வர்ணிக்க இயலும்? ஆதிசேஷன் முதலானோரே தங்களின் எல்லையை அறிய முடியாது களைத்து ஓய்ந்து விட்டபோது, ஒன்றும் அறியாத மூடனாகிய எம்மால் எவ்வாறு உம்மை அடைய முடியும்?

3. தேவாதி தேவா! ஸ்வாமிராயா! சாதுக்களும் முனிவர்களுமே பக்தியுடன் பற்றிக் கொள்ளும் உமது ஸர்வ வல்லமை படைத்த திருவடிகளில் எமது இந்த சரீரத்தை அர்ப்பணிக்கிறேன். சரணாகதி அளித்து காப்பீராக.

4. அளப்பரிய திருவிளையாடற்புரிந்து எம்மை அழிவிலிருந்து மீட்டீர். நினது புகழைக் கேட்டு ஓடோடி வந்து உமது திவ்ய பாதங்களைத் தரிசிக்கும் பேறு பெற்றேன். உமது குழந்தையாகிய என்னை நினது பாதக்கமலங்களினின்று ஒரு கணமும் பிரியாதிருக்க அருள்புரிவீராக.

**"அனந்த கோடி பிரம்மாண்டநாயக ராஜாதிராஜ யோகிராஜ ஸ்ரீசுவாமி சமர்த்த மஹராஜ் கீ ஜெய்!"**



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# நூல் கிடைக்கும் இடங்கள்

| SL. No. | | பெயர் | தொலைபேசி எண் |
|---|---|---|---|
| 1. | பாண்டிச்சேரி | திருமதி. அகிலா சாயிகுமார் B.A., | 94436 49473 |
| | லாஸ்பேட் | திரு. அருணாசலம் (பாபா மாஸ்டர்) | 9443137638 |
| | விமானதளம் | திருமுருகன் ஸ்டோர்ஸ் | 98940 40154 |
| | | தீபிகா போட்டோ ஸ்டுடியோ | 99444 63101 |
| | | **மகாராஷ்டிரா** | |
| 2. | அக்கல்கோட் (AKKALKOT) | வடவ்ருக்ஷமந்திருக்குள் ஸ்ரீசந்தோஷ் பரனே. | 98226 15339 |
| 3. | ஷீர்டி (SHIRDI) | ஸ்ரீமஹல்சாபதி இல்லத்தருகே திரு. விவேக் | 99757 81162 |
| | | திரு. ரமேஷ் | 95038 98722 |
| 4. | புணே (PUNE) | ஸ்ரீ R. ரமேஷ் ஐயர் | 98233 20150 |
| 5. | மும்பை (Thane) | ஸ்ரீ கணபதி ஐயர் | 96191 99487 |
| | | **ஆந்திரா** | |
| 6. | செகந்திராபாத் | திரு. S. ஆறுமுகம் | 97058 92044 |
| 7. | ஹைதராபாத் | திருமதி. துளசி | 93978 97763 |
| 8. | திருவில்வமலா (கேரளா) | திரு. ஹரிஹரகுமார் R. | 99434 79814 |
| 9. | பெங்களூரு | திரு. சுந்தரவடிவேலு | 99800 63145 |
| 10. | புதுதில்லி | ஸ்ரீமதி வெங்கடேசன் | 011–29522440<br>93131 68369 |
| 11. | சிங்கப்பூர் | திரு. J.S. சத்தியநாத்<br>email:jssathiya@gmail.com | 65820 97277 |
| 12. | அமெரிக்கா (U.S.A) | NORTH AMERICA SHIRDI SAI TEMPLE OF ATLANTA 700. JAMES BURGESS ROAD, SUWANEE, G.A. 30024, U.S.A. | 00140 464 19353 |
| 13. | லண்டன் (U.K.) | திரு. பாபு | 00441708469601 |
| | | | |



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# தமிழ்நாட்டில் நூல் கிடைக்கும் இடங்கள்

| SL. No. | | பெயர் | தொலைபேசி எண் |
|---|---|---|---|
| 1. | மதுரை | திரு. J.S. சாயிஜீவன் | 95004 40811 |
| | | ஜவஹர் போட்டோ ஸ்டுடியோ | 98432 63901 |
| | | ஜாபாலி வேஷ்டிகள் உலகம், | 0425–2325317 |
| 2. | சென்னை | திரு. J.S. சாயிபிரகாஷ், தி. நகர். | 99625 11306 |
| | | திரு. ஸ்ரீனிவாசன் காட்டாங்குளத்தூர். | 97908 51223 |
| | | ஷீர்டி சாயி தபோ பூமி, மறைமலைநகர் | |
| | | திரு. G. லோகேஷ், வேளச்சேரி | 99439 49560 |
| | | சாயி யுகம் Dr. துரைஅருள்நேயம் | 98408 91409 |
| | | சாயி தரிசனம் ஸ்ரீ சாயி வரதராஜன் | 98412 03311 |
| | | நம் உரத்த சிந்தனை ஸ்ரீ உதயம் ராம் | 94440 11105 |
| 3. | திருச்சிராப்பள்ளி | தன்வந்திரி பாபா சித்தி விநாயகர் ஆலயம் | 99407 42779 |
| 4. | கோயம்புத்தூர் | M/s. விஜயா பதிப்பகம் | 0422–2394614 |
| | | Sri. ரமேஷ்பாபு (துவாரகாமாயி ஆலயம்) | 98654 03665 |
| | | திரு. A. மெய்யப்பன் (நாகசாயி பாபா ஆலயம்) | 99947 50227 |
| | | ஸ்ரீ ராகவேந்திரா டிரஸ்ட் | 94435 45454 |
| 5. | கும்பகோணம் | Er. சொக்கலிங்கம் சுப்பிரமணியன் | 90954 23909 |
| | | ஸ்ரீ முராரி V. ஜெயசந்திரன் | 94431 26516 |
| 6. | புதுக்கோட்டை | ஸ்ரீ ஷீர்டி ஸாயி தர்ஷன் வழிபாட்டு மையம் | 9698631185 |
| 7. | திருக்கடையூர் | ஹோட்டல் குரு | 04364–287340 |
| 8. | காரைக்கால் | திரு. செல்லூர் கணேசன் | 98435 17091 |
| 9. | சிவகாசி | திரு. B.H. குமரன் | 97866 86619 |
| 10. | சேலம் | திரு. சாயி அருள் | 97912 34105 |
| | | திரு. குழந்தைவேல் | 99524 04545 |
| 11. | தூத்துக்குடி | திரு. ஸ்தபதி ஸ்ரீதர் பாண்டியன் | 94434 04801 |
| 12. | திருத்தணி | திரு. T.P. லோகநாதன் M.A., | 94445 55478 |
| 13. | திருவண்ணாமலை | திரு. உதயகுமார் | 99527 82495 |
| 14. | கரூர் | ஷீரடி ஸ்ரீ சாயி சேவா சமாஜம் பெருமாள் கோவில்பக்கம் | 92454 03222 |



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

# BOOK ORDER FORM

## நூல் ஆணை

*To:* *Date:*

**Smt. AKILA SAYIKUMAR, B.A.,**
SF2, Shanthi Vilas Apartments,
No.12, Eleventh Cross Street,
TAGORE NAGAR, **PUDUCHERRY - 605008**
Cell : 94436 49473
e-mail id: akilasaiba@gmail.com

Dear Madam,

Please send me/ us .......... No. of Copies of " SHRI AKKALKOT MAHARAJ ARULATCHI by Post / Couriers ..................................................................

I / We am/ are enclosing a Demand Draft drawn at ............................................. Bank for Rs. ................ Dated ............ (or) Credited in your Indian Bank, Lawspet , Pondicherry Branch SB A/c No. 491440441 IFS Code: IDIB 000 L007

Thanking you.

*Yours faithfully*

***Name*** : ------------------------------------------------

***Address*** : ------------------------------------------------

------------------------------------------------

------------------------------------------------

------------------------------------------------

***Phone/ Cell No*** : ------------------------------------------------



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digtized by Muthulakshmi Research Academy

ॐ ***Sri Swamy Samartha***

நன்கொடை

***To:*** ***Date:***

***THE MANAGING TRUSTEE,***

*Akkalkot Shri Swamy Samartha Maharaj*
*Seva Charitable Trust (Regd No. 777/2008)*
*SF2, Shanthi Vilas Apts., No.12, 11th Cross St.,*
*Tagore Nagar,* ***PUDUCHERRY - 605 008.***
*India, Ph: 99947 00917*
*e-mail id : drsai63@gmail.com*

*Dear Sir,*

*I am enclosing a sum of Rs. ................ (Rupees ..............................................................) by Cash/ Demand Draft / Cheque bearing No. ............................ dated .................. drawn on ........................................................ Bank, or Deposited into State Bank of India, Lawspet Branch, Puducherry. A/c No. 30897432673 towards Donation to your Trust*

*Kindly acknowledge and send the receipt.*

*Thanking you,*

*Yours Sincerely,*

**Name** : ------------------------------------------------------------

**Address** : ------------------------------------------------------------

: ------------------------------------------------------------

: ------------------------------------------------------------

: ------------------------------------------------------------

**Tel/ Cell No.** : ------------------------------------------------------------



https://archive.org/details/muthulakshmiacademy

CC-0. In Public Domain. Digitized by Muthulakshmi Research Academy

ஸ்ரீ ஸ்வாமி ஸமர்த்தருக்கு அடுத்த தத்தாத்ரேய அவதாரி

# சத்குரு ஸ்ரீ ஷீரடி சாயிபாபா



"வாழ்க்கை என்பது பிரச்சினைகளின் சங்கிலித் தொடராகும். சில பிரச்சினைகள் தீர்க்கவே முடியாது போலத் தோன்றும். அவற்றை தீர்க்க முயலாதே! 'சாயி, சாயி' என்று எனது நாமத்தை ஜபித்தால் அவை தாமாகவே மறையும்!"

**நம்பிக்கை! பொறுமை!**

SRI KALAIVANI CALENDARS, SVKS. Cell : 97900 10069

t.me/muthulakshmiacademy